# ஆறுமுகநாவலர்

பதிப்பாசிரியர்

கரு.அழ. குணசேகரன்

த. பூமிநாகநாதன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# ஆறுமுக நாவலர்

பதிப்பாசிரியர்

பேரா. முனைவர் கரு.அழ. குணசேகரன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

இரண்டாவது முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப்
பயிலக வளாகம், தரமணி, சென்னை - 600 113

திங்கள் (தொடர்) ஆய்வுக் கருத்தரங்கம்
தமிழறிஞர் வரிசை 2; எண் 1; கருத்தரங்க நாள் : 30-09-2004

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | Āṟumuka nāvalar |
| Editor | : | Dr. K.A. Gunasekaran<br>Director<br>International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai - 600 113. |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai - 600 113. Ph: 22542992 |
| Publication No. | : | 605 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Year of Publication | : | 2008 |
| Paper Used | : | 18.6 Kg. TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | x + 190 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 60/- (Rupees Sixty only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road, Ch - 4 |
| Subject | : | Biographical Sketches and Critical Studies on Āṟumuka Nāvalar |



கட்டுரையாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பன்று

பேரா. முனைவர் கரு.அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அணிந்துரை

வரலாற்றுக் காலந்தொட்டே தமிழ்கூறு நல்லுலகமாக ஈழமும் இருந்து வந்துள்ளது.

எல்லாளன் என்ற சோழகுலத் தலைவன் ஈழத்தைக் கி.மு.விலேயே ஆண்டதாக இலங்கை வரலாற்று நூலான மகாவம்சம் கூறுகிறது.

ஈழத்துப் பூதன் தேவனார் (குறுந். 343) போன்ற தமிழ்ப் புலவர்கள் சங்க காலத்தில் இருந்துள்ளனர்.

ஈழ குலச் சான்றார் ஏனாதிநாதரை நாயன்மார்களில் ஒருவராகப் பெரியபுராணம் சித்திரிக்கின்றது.

பிற்காலச் சோழரும் பாண்டியரும் விசய நகரத்தாரும் மதுரை நாயக்கரும் ஈழத்தில் கோலோச்சியதை வரலாற்று ஆவணங்கள் கூறுகின்றன.

தொடர்ந்து ஒல்லாந்தர், போர்ச்சுக்கீசியர் மற்றும் ஆங்கிலேயரின் ஆதிக்கம் ஈழத்திலும் ஏற்பட்டது.

இவற்றின் தொடர்ச்சியாகத் தமிழகமும் ஈழமும் தமிழையும் சைவத்தையும் வளர்க்கக் கைகோர்த்தன.

இக்கொள்வினை கொடுப்பினை 18ஆம் நூற்றாண்டில் தொடங்கி, 19ஆம் நூற்றாண்டில் வளர்ந்து 20ஆம் நூற்றாண்டின் இடைப்பட்ட காலம் வரை இருந்து வந்தது.

இன்னும் அது தொடர்கிறது என்றால் மிகையாகாது.

ஈழத் தமிழறிஞர்களில் தமிழையும் சைவத்தையும் வளர்த்தவர் களில் ஆறுமுகநாவலரே முன்னோடியாக அமைகிறார்.

> தமிழ்நாடும் இலங்கையும் அரசியல், மொழி, சமுதாய, கலாசாரத் தொடர்பு கொண்டுள்ளன.

> தமிழ் ஆர்வம் கொண்டு தமிழ் வளர்த்த பெரியோர் பலரை இலங்கை ஈன்றெடுத்திருக்கிறது. சமயம், கல்வி, இலக்கியம், இலக்கணம் முதலான பல்வேறு துறைகளிலும் அவர்கள் தொண்டாற்றியுள்ளார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்கவர் இருவர்; ஒருவர் ஆறுமுக நாவலர்; மற்றொருவர் சி.வை. தாமோதரம் பிள்ளை. (ப. 73)

> ஒவ்வொரு நூற்றாண்டிலும் பல தமிழறிஞர்களும் சான்றோர்களும் அவர்தம் பங்களிப்பினை நன்முறையில் அளித்துத் தமிழை வளர்த்துள்ளனர். அவ்வகையில் பத்தொன்ப தாம் நூற்றாண்டில் அண்மை நாடாகிய இலங்கையில் பிறப்பெடுத் தாலும் தமிழ்நாட்டில் வாழ்ந்து தமிழ் மொழியின் வளர்ச்சிக்காகவே பணியாற்றித் தம் வாழ்நாளைத் தமிழ் மொழிக்கும் சைவத்திற்கும் அர்ப்பணித்தவர் களுள் முன்னோடியாகக் குறிப்பிடத்தகுந்தவர் யாழ்ப்பாணம் நல்லூர் ஆறுமுக நாவலர் ஆவார்.

ஆறுமுக நாவலர்க்குப் பல சிறப்புகள் உள; உரைநடை, பதிப்பு, படைப்பு, பாடங்கள், கல்வி நிறுவனங்கள் வைத்தல், அச்சகம் நிறுவுதல், சைவ சமயம் பேணல் என்பன அவர் சிறந்த துறைகள்.

இவற்றை ஒருசேரக் கூறுகின்றது இந்நூல்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் உயராய்வுகளைச் செய்வதுடன் பல வகையிலும் கருத்தரங்குகளை நடத்தி வருகின்றதைத் தமிழறிஞர் பாராட்டி வருகின்றனர்.

தமிழறிஞர்களை அடையாளம் கண்டு அவர்தம் தமிழ்ப் புலமையை வெளிக்கொணரும் முயற்சியாக இந்நிறுவனத்தில் தமிழறிஞர் வரிசைத் திங்கள் தொடர் ஆய்வுக் கருத்தரங்கம் ஏற்படுத்தப்பட்டது.

முதல் சுற்றில் 16 தமிழறிஞர்கள் பல அறிஞர்களால் ஆய்வு செய்யப்பெற்றனர். அனைத்தும் நூல்வடிவம் பெற்றுள்ளன.

இரண்டாம் சுற்றிலும் 16 தமிழறிஞர்கள் பல கட்டுரையாளர் களால் ஆய்வு செய்யப்பெற்றுள்ளனர்.

ஆறுமுக நாவலரே இச்சுற்றின் முதல் தமிழறிஞராக அமைகிறார். அவரைப் பற்றிய கருத்தரங்கம் 30-09-2004 முற்பகலில் இந்நிறுவனத்தில் நடந்தது.

தமிழார்வத்தோடும் தம் மூதாதைத் தமிழறிஞரைப் போற்றும் வகையிலும் பதினொரு கட்டுரையாளர்கள் நாவலரின் தமிழ் ஆளுமையை வெளிப்படுத்தியுள்ளனர்.

நாவலரின் பதிப்புப்பணிகள், நாவலரின் நூல்கள், அவர் எழுதிய உரைகள், நாவலர் காலத்தில் வாழ்ந்த தமிழ் அறிஞர்கள், நாவலரின் சமயக் கொள்கைகள் மற்றும் பணிகள் என்பவற்றை இக்கட்டுரைகள் வெளிக்கொணர்ந்துள்ளன.

நாவலரின் முழுப் பரிமாணமும் இக்கட்டுரைகளில் வந்து விட்டது எனக் கருதுவது பொருத்தமாகாது.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும் **நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களுக்கு என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

தமிழரின் முன்னேற்றத்திற்கும் தமிழரின் உயர்வுக்கும் பாடுபட்டு வரும் **தமிழக நிதியமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் க. அன்பழகன்** அவர்களுக்கும் என் நன்றி.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம், செய்தி மற்றும் விளம்பரத் துறை அரசுச் செயலாளர் திரு க. முத்துச்சாமி இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இத்தமிழறிஞர் வரிசைக் கருத்தரங்கத்தை இந்நிறுவனத்தில் நடத்திய மேனாள் இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களும், கருத்தரங்கக் கட்டுரைகளை நூலாக்கம் செய்ய ஏற்பாடுகளைச் செய்த மேனாள் இயக்குநர் (முழுக் கூடுதல்

பொறுப்பு) முனைவர் ம. இராசேந்திரன் அவர்களும் பாராட்டுக் குரியவர்கள்.

கருத்தரங்கப் பொறுப்பாளர் திரு. த. பூமிநாகநாதனும், கருத்தரங்க ஏற்பாடுகளைச் செய்த நிறுவனப் பணியாளர்களும், கட்டுரைகளைப் பதிப்பித்து மெய்ப்பும் திருத்திய முனைவர் ஆ. தசரதனும், கணியச்சிட்ட திரு. ஸ். கோபிநாத்தும் அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாரும் பாராட்டுக்குரியவர்கள்.

இயக்குநர்

# கட்டுரையாளர்கள்

1. **முனைவர் முகிலை இராசபாண்டியன்,** தமிழ் முதுநிலை விரிவுரையாளர், மாநிலக் கல்லூரி, சென்னை - 600 005.
2. **பேரா. வ. வினாயகப் பெருமாள்,** தலைவர், திருவனந்த புரம் தமிழ்ச் சங்கம், தமிழ்ச் சங்கம் சாலை, கிள்ளிப் பாலம், திருவனந்தபுரம் - 695 002.
3. **திரு. ஆ. முத்துச் செல்வன்,** முனைவர் பட்ட ஆய்வாளர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சி.பி.டி. வளாகம், தரமணி, சென்னை - 600 113.
4. **திரு. மோ.கோ. கோவைமணி,** ஆராய்ச்சி உதவியாளர், ஓலைச்சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 613 005.
5. **திரு. மா.கி. இரமணன்,** பாரதி அகம், 39/13, கிராமத் தெரு, திருவொற்றியூர், சென்னை 600 019.
6. **முனைவர் ஆ.கோ. நடராசன்,** இணைப் பேராசிரியர், மொழியியல் உயராய்வு மையம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், சிதம்பரம் - 608 002.
7. **செல்வி மு. திரிபுர சுந்தரி,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழியல் துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், சிதம்பரம் - 608 002.
8. **செல்வி யு. ஜெயபாரதி,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழியல் துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், சிதம்பரம் - 608 002.

9. **வெ. இராமச்சந்திரன்,** முனைவர் பட்ட ஆய்வாளர், 45-எச், சப்தகிரி, தாழம்பூத் தெரு, சக்தி நகர், ஆதம்பாக்கம், சென்னை - 600 088.

10. **முனைவர் ஆ. தசரதன்,** திட்டக் கல்வியர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சி.பி.டி. வளாகம், தரமணி, சென்னை - 600 113.

11. **திரு. த. பூமிநாகநாதன்,** ஆராய்ச்சி உதவியாளர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சி.பி.டி. வளாகம், தரமணி, சென்னை - 600 113.

# பொருளடக்கம்

# ஆறுமுக நாவலரின் பாலபாடம்

யாழ்ப்பாண நல்லூர் ஆறுமுக நாவலர் ஆற்றிய பணிகளில் முதன்மையானது அவர் ஆற்றிய கல்விப்பணி ஆகும். தமது கல்விப் பணியின் ஒரு பகுதியாக எளிய முறையில் தமிழ் கற்பிப்பதற்காக அவர் பாலபாடம் இயற்றினார். இது நான்கு புத்தகங்களாக வெளிவந்தது. முதல் புத்தகம், இரண்டாம் புத்தகம், நான்காம் புத்தகம் ஆகியவற்றை நாவலரே உருவாக்கி உள்ளார். மூன்றாம் புத்தகத்தை நாவலரின் மாணாக்கரும் மருமகனுமான பொன்னம்பலம் பிள்ளை உருவாக்கியுள்ளார். பொன்னம்பலம் பிள்ளையால் இது உருவாக்கப் பெற்றிருந்தாலும் நாவலரின் மேற்பார்வையிலேயே இது உருவாக்கப்பட்டுள்ளது. எனவே, நான்கு புத்தகங்களும் நாவலரின் படைப்பாகவே இந்தக் கட்டுரையில் ஆய்வுக்குட்படுத்தப்படுகின்றன.

### பாலபாடம் முதல் புத்தகம்

ஆறுமுக நாவலரால் உருவாக்கப்பட்ட பாலபாடம் முதல் புத்தகம் 1850ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இந்த முதல் புத்தகம் நெடுங்கணக்கு, சொற்கள், சொற்றொடர்கள், பிராதக்காலப் பிரார்த்தனம், சாயங்காலப் பிரார்த்தனம் என்னும் ஐந்து பிரிவுகளைக் கொண்டுள்ளது.

நெடுங்கணக்கு என்னும் முதல் பிரிவில் உயிரெழுத்து, மெய்யெழுத்து, அஃகேனம், உயிர்மெய்யெழுத்து என்னும் நான்கு பிரிவுகள் உள்ளன. இவற்றில் உயிரெழுத்துப் பன்னிரண்டு, மெய்யெழுத்துப் பதினெட்டு, ஆய்த எழுத்து ஒன்று, உயிர் மெய்யெழுத்து இருநூற்றுப் பதினாறு ஆகியவை கொடுக்கப் பட்டுள்ளன.

சொற்கள் என்னும் பிரிவில் ஓரெழுத்துச் சொற்கள், ஈரெழுத்துச் சொற்கள், மூன்றெழுத்துச் சொற்கள், நாலெழுத்துச்

சொற்கள், ஐந்தெழுத்துச் சொற்கள் என்னும் ஐந்து பிரிவுகள் உள்ளன.

சொற்றொடர்கள் என்னும் மூன்றாம் பிரிவில் நாற்பத்தைந்து பாடங்கள் தரப்பட்டுள்ளன. பிராதக் காலப் பிரார்த்தனம் என்னும் நான்காம் பிரிவில் விடியற்காலையில் இறைவனை வேண்டுவதற்கென்று ஒரு பத்தி தரப்பட்டுள்ளது. பிராதக் காலம் என்றால் விடியற்காலம் என்று பொருள். சாயங்காலப் பிரார்த்தனத்திலும் மாலை நேரக் கடவுள் வணக்கமாக ஒரு பத்தி தரப்பட்டுள்ளது.

ஓரெழுத்துச் சொற்களாகப் பதினாறு சொற்களையும் இரண்டெழுத்துச் சொற்களாக எண்பது சொற்களையும் மூன்றெழுத்துச் சொற்களாக எண்பது சொற்களையும் நாலெழுத்துச் சொற்களாக அறுபது சொற்களையும் ஐந்தெழுத்துச் சொற்களாக நாற்பத்தெட்டுச் சொற்களையும் நாவலர் அறிமுகம் செய்துள்ளார்.

சொற்றொடர்கள் என்னும் பிரிவில் முதல் பாடத்தில் இரண்டு எழுத்துகள் கொண்ட இரு சொற்களாலான தொடர்களை அறிமுகம் செய்துள்ளார். இரண்டாம் பாடத்திலும் இரு சொற்கள் கொண்ட தொடர்களை அறிமுகம் செய்துள்ளார். ஆனால் இத்தொடர்களில் உள்ள சொற்கள் இரு எழுத்துகள் கொண்டவையாகவும் மூன்றெழுத்துகள் கொண்டவையாகவும் உள்ளன. மூன்றாம் பாடத்தில் உள்ள தொடர்களில் சில சொற்கள் நான்கெழுத்துகள் கொண்டவை யாக உள்ளன. நான்காம் பாடத்தில் இரண்டு எழுத்து முதல் நான்கு எழுத்துகள் கொண்ட சொற்கள் தரப்பட்டுள்ளன. ஐந்தாம் பாடத்தில் ஐந்தெழுத்துச் சொற்கள் கொண்ட தொடர்கள் உள்ளன.

இந்த ஐந்து பாடங்களிலும் உள்ள ஒவ்வொரு பாடத்திலும் பதினான்கு தொடர்கள் உள்ளன. இவற்றில் உள்ள சொற்கள் அனைத்தும் பெயர்ச் சொற்கள் ஆகும். இவற்றில் எண்ணுப் பெயர்களும் பொருட் பெயர்களும் காலப் பெயர்களும் இடப் பெயர்களும் இடம்பெற்றுள்ளன. பண்புப் பெயர்களில் நிறப் பண்புப் பெயர்கள் மட்டுமே அறிமுகம் செய்யப்பட்டுள்ளன. தொழிற்பெயர் எதுவும் இல்லை.

ஆறாம் பாடத்தில் பதின்மூன்று தொடர்கள் உள்ளன. இவற்றில் பதின்மூன்று வினைச் சொற்கள் அறிமுகம்

செய்யப்பட்டுள்ளன. இவை அனைத்தும் நிகழ்காலச் சொற்கள் ஆகும். இந்த வினைச் சொற்களுக்கு முன்பாகத் தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய இடப்பெயர்கள் தரப்பட்டுள்ளன. தன்மைப் பெயர்களில் நான் என்னும் ஒருமையையும் நாம், நாங்கள் என்னும் பன்மையையும் உணர்த்தியுள்ளார். முன்னிலைப் பெயர்களில் நீ என்னும் ஒருமையையும், நீர், நீங்கள் என்னும் பன்மையையும் தெரிவித்துள்ளார். படர்க்கைப் பெயர்களில் அவன், அவள் என்னும் ஒருமையையும் அவர், அவர்கள் என்னும் பன்மையையும் அறிவித்துள்ளார். ஒன்றன் பெயரில் அதுவையும் பலவின் பெயர்களில் அவை, அவைகள் ஆகியவற்றையும் அறிமுகம் செய்துள்ளார்.

ஏழாம் பாடத்திலும் பதின்மூன்று சொற்கள் அறிமுகம் செய்யப்பட்டுள்ளன. இத்தொடர்களிலும் வினைச் சொற்களுடன் தன்மை, முன்னிலை, படர்க்கைப் பெயர்கள் அறிமுகப்படுத்தப் பட்டுள்ளன. இத்தொடர்களில் உள்ள வினைச்சொற்கள் அனைத்தும் இறந்த கால வினைச்சொற்கள். எட்டாம் பாடத்திலும் பதின்மூன்று தொடர்கள் உள்ளன. இவற்றில் தன்மை, முன்னிலை, படர்க்கைப் பெயர்களுடன் எதிர்கால வினைச்சொற்கள் அறிமுகம் செய்யப்பட்டுள்ளன.

ஒன்பதாம் பாடத்தில் தன்மை, முன்னிலை, படர்க்கைப் பெயர்களுடன் நிகழ்கால, இறந்தகால, எதிர்கால வினைச் சொற்கள் கலந்து தரப்பட்டுள்ளன. இந்தப் பாடத்தில் ஒன்றன்பாலும், பலவின்பாலும் இடம்பெறவில்லை. பத்தாம் பாடத்தில் ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் என்னும் ஐந்து பால்களும் கலந்து தரப்பட்டுள்ளன. மேலும் முக்காலத்துக்கும் பொருந்தும் கருத்தைச் சொல்லும் வினைச் சொற்களை நிகழ்காலத்தில் கூறியுள்ளார். பதினோராம் பாடத்திலும், பன்னிரண்டாம் பாடத்திலும், பதின்மூன்றாம் பாடத்திலும் பல வகையான வினைமுற்றுகளுடன் ஏவல் வினைமுற்றையும் ஆறுமுக நாவலர் தந்துள்ளார்.

பதினான்காம் பாடத்தில் தெரிநிலை வினைமுற்றுகள், ஏவல் வினைமுற்றுகளுடன் வினாச் சொற்களையும், அறிமுகம் செய்துள்ளார். பதினைந்தாம் பாடத்தில் பல சுவைப் பெயர்களை வினைச்சொல்லாகத் தெரிவித்துள்ளார். வேம்பு கசக்கும், கற்கண்டு தித்திக்கும், மிளகு உறைக்கும், கடுக்காய் துவர்க்கும், மாங்காய் புளிக்கும் முதலான சுவைகள் அவை ஆகும்.

பதினாறாம் பாடத்தில் சில மரபுச் சொற்களை அறிமுகம் செய்துள்ளார். அவை குயில் கூவும், மயில் ஆடும், தவளை கத்தும், பாம்பு சீறும், நாய் குரைக்கும், கோழி கூவும், ஆந்தை அலறும், காக்கை கரையும் முதலானவை ஆகும். பதினேழாம் பாடத்தில் நமது உடல் உறுப்புகள் செய்யும் வேலைகளைத் தெரிவித் துள்ளார். தலை வணங்கும், கண் காணும், காது கேட்கும் முதலானவை அவை ஆகும்.

பதினெட்டாம் பாடத்தில் சில நல்ல செயல்களை- கடவுளை வணங்கு, புண்ணியம் செய், உண்மை பேசு என்று உடன்பாட்டு ஏவலில் குறிப்பிட்டுள்ள நாவலர், களவு செய்யாதே, பொய் சொல்லாதே, உயிர்களைக் கொல்லாதே என்று எதிர்மறை ஏவல் பொருளிலும் தெரிவித்துள்ளார்.

பதினெட்டாம் பாடம் வரை இரு சொற்களைக் கொண்ட தொடர்களை அறிமுகம் செய்ததுடன் அவற்றின் வாயிலாகப் பல இலக்கணக் கூறுகளையும் அறிமுகம் செய்துள்ளார். அந்த இலக்கணக் கூறுகளை இலக்கணம் என்று குறிப்பிடாமலே உணர்த்தியிருப்பது மிகச் சிறந்த உத்தி எனலாம்.

பத்தொன்பதாம் பாடத்தில் மூன்று சொற்கள் கொண்ட தொடர்களை அறிமுகம் செய்துள்ளார். இந்தப் பாடத்தில் எட்டுச் சொற்றொடர்கள் அறிமுகம் செய்யப்பட்டுள்ளன. மூன்று தொடர்களைக் கொண்ட இந்தத் தொடர்களைப் படிப்பதற்கு மாணவர்கள் சிரமப்படக் கூடாது என்ற நோக்கில் எட்டுத் தொடர்களிலும் கடவுள் என்ற தொடரை இடம்பெறச் செய்துள்ளார்.

இருபதாம் பாடத்திலும் மூன்று சொற்கள் கொண்ட எட்டுத் தொடர்கள் உள்ளன. இத்தொடர்களில் புதிய சொற்கள் இருந்தாலும் பல சொற்கள் சிறு சொற்கள் ஆகும். மேலும் பெரும்பான்மையான வினைமுற்றுகள் உடன்பாட்டு ஏவலாகவும் எதிர்மறை ஏவலாகவும் அமைந்து எளிமைத் தன்மை பெற்றுள்ளன.

இருபத்தோராம் பாடத்தில் ஏவல் சொற்களும் வினாச் சொற்களும் கலந்து சொற்றொடர்களில் வந்துள்ளன. இருபத்திரண்டாம் பாடத்தில் மூன்று சொற்கள் கொண்ட தொடர்களுடன் நான்கு சொற்கள் கொண்ட தொடர்களும் இடம்பெற்றுள்ளன. இருபத்துமூன்றாம் பாடத்தில் மிகுதியாக

நான்கு சொற்களைக் கொண்ட தொடர்களும் ஒரு சில மூன்று சொற்களைக் கொண்ட தொடர்களும் இடம்பெற்றுள்ளன.

மேலும் இந்தப் பாடத்தில் உம்மைத் தொடர்களும் வேற்றுமைத் தொடர்களும் அறிமுகம் செய்யப்பட்டுள்ளன. இருபத்து நான்காம் பாடத்தில் ஐந்து சொற்கள் கொண்ட தொடர்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றில் விளித் தொடர்களும், குறிப்பு வினைமுற்றுகளும், வியங்கோள் வினைமுற்றும், சுட்டுப் பெயர்களும் வந்துள்ளன. இருபத்து ஆறு, இருபத்து ஏழு, இருபத்து எட்டு முதலிய பாடங்களில் பல வகையான சொற்களை அறிமுகம் செய்ததுடன் பல வகையான சொற்றொடர்களையும் நாவலர் அறிமுகம் செய்துள்ளார்.

இருபத்தொன்பதாம் பாடத்தில் 'உம்' இடைச்சொற்களைப் பயன்படுத்திப் பெரிய தொடர் அமைக்கும் முறை தெரிவிக்கப் பட்டுள்ளது. முப்பதாம் பாடத்தில் எளிய கணக்குகள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. காலணாவுக்கு மூன்று பைசா. அரையணாவுக்கு ஆறு பைசா. முக்காலணாவுக்கு ஒன்பது பைசா. ஒரு அணாவுக்குப் பன்னிரண்டு பைசா முதலியவை தெரிவிக்கப் பட்டுள்ளன.

இதுவரை ஒன்றுக்கு ஒன்று தொடர்பில்லாத தொடர்கள் தரப்பட்டுள்ளன. முப்பத்தோராம் பாடத்தில் ஒன்றோடு ஒன்று தொடர்புடைய தொடர்கள் தரப்பட்டுள்ளன. முப்பத்து இரண்டு முதல் நாற்பது வரை உள்ள பாடங்களிலும் ஏதேனும் பொருள் தொடர்புடைய சொற்றொடர்களே தரப்பட்டுள்ளன. நாற்பத்தோராம் பாடத்தில் திசைகள் அறிமுகப்படுத்தப் பட்டுள்ளன. நாற்பத்திரண்டாம் பாடத்தில் ஒவ்வொரு திசையி லிருந்தும் வீசும் காற்றுகளின் பெயர்கள் தெரிவிக்கப்பட்டுள்ளன.

நாற்பத்து மூன்றாம் பாடத்தில் ஓர் ஆசிரியருக்கும் மாணவனுக்கும் நடந்த உரையாடல் 'ஒரு குருவுக்கும் ஒரு பிள்ளைக்கும் நடந்த சம்பாஷணம்' என்ற பெயரில் தரப்பட்டுள்ளது. நாற்பத்து நான்காம் பாடத்தில் இந்தியாவின் இயற்கை அமைப்பும் இந்தியாவில் உள்ள பெருநகரங்களும் அறிமுகம் செய்யப்பட்டுள்ளன. மேலும் இந்தியாவுக்குத் தெற்கே உள்ள ஒரு பெரிய தீவு என்று இலங்கையும் அறிவிக்கப் பட்டுள்ளது. நாற்பத்தைந்தாம் பாடத்தில் கடவுள் பற்றிய செய்திகள் தெரிவிக்கப்பட்டுள்ளன.

நான்காம் பகுதியாகிய விடியற்காலைப் பிரார்த்தனையில்

> பெருங்கருணைக் கடவுளே! சென்ற இராத்திரியிலே தேவரீர் அடியேனைக் காத்து அருளினதின் நிமித்தம், தேவரீரை அடியேன் துதிக்கிறேன். இந்தப் பகலிலும் அடியேனைக் காத்து அருளும். அடியேன் பாவங்கள் செய்யா வண்ணம், அடியேனைத் தடுத்து ஆட்கொண்டு அருளும். அடியேன் முன் படித்த பாடங்களும் இனிப் படிக்கும் பாடங்களும் அடியேன் மனசிலே எந்த நாளும் தங்கும்படி அருள் செய்யும்.

என்று நாவலர் விடியற்காலைப் பிரார்த்தனையைப் படைத்துள்ளார். சாயங்காலப் பிரார்த்தனையில்,

> மகாதேவரே! அடியேன் செய்த பாவங்களை எல்லாம் பொறுத்து அருளும். இந்த இராத்திரியிலே அடியேனைக் காத்து அருளும். அடியேன் தேவரீரை அறிந்து, தேவரீருக்குப் பயந்து, தேவரீர் மேல் அன்பு வைத்துத் தேவரீரைத் துதித்து வணங்கும்படி செய்தருளும். அடியேன் இறக்கும்பொழுது தேவரீரை மறவாத தியானத்துடனே தேவரீருடைய பாதத்திலே சேரும்படி அருள் செய்யும்.

என்று நாவலர் மாலைக்காலப் பிரார்த்தனையைப் படைத்துள்ளார்.

பாலபாடத்தின் முதல் புத்தகத்தில் உள்ள பாடங்கள் அனைத்தும் தொடக்க நிலையில் தமிழ் கற்போருக்கு உதவும் வகையில் அமைந்துள்ளன. கல்வித் துறையில் நாவலர் மிகுந்த பட்டறிவு கொண்டவராக விளங்கியதால் தாம் எழுதிய பால பாடத்தை மாணவர்களின் கற்கும் திறத்திற்கு ஏற்ப அமைத்துள்ளார் என்று தெளிய முடியும். எழுத்துகள், எளிய சொற்கள், எளிய தொடர்கள், பொருள் தொடர் நிலைத் தொடர்கள், உரையாடல் என்று பல்வேறு வகைகளில் இந்தத் தொடக்க நிலைப் பாடத்தை அமைத்துள்ள நாவலர், தொடக்க நிலை இலக்கணத்தை இலக்கணம் என்று அறிவிக்காமலேயே உணர்த்தியுள்ளமை இக்காலக் கல்வியாளர்க்கு உதவும் என்று நம்பலாம்.

**பாலபாடம் இரண்டாம் புத்தகம்**

பாலபாடம் இரண்டாம் புத்தகத்தில் பத்தொன்பது பிரிவுகளும் கடிதம் எழுதும் முறையும் அறிமுகம் செய்யப் பட்டுள்ளன. இந்த நூலும் 1850ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. இரண்டாம் புத்தகத்தின் முதல் பிரிவு நீதி வாக்கியங்கள் என்பது ஆகும். இதில் எண்பத்திரண்டு நீதி வாக்கியங்கள் இடம் பெற்றுள்ளன.

ஆத்திசூடி, கொன்றைவேந்தன், உலகநீதி, திருக்குறள் முதலான நீதி நூல்களில் உணர்த்தப்பட்டுள்ள கருத்துகளின் சாரங்களாக இந்த நீதி வாக்கியங்கள் அமைந்துள்ளன. இந்த நீதி வாக்கியங்கள், கடவுள் நம்பிக்கை, நற்செயல் புரிதல், அடக்கத் துடன் வாழ்தல், ஒழுக்கத்துடன் வாழ்தல், நடுவுநிலைமை தவறக்கூடாது, பொய்சொல்லக் கூடாது, முயற்சி உடைமை, நல்ல வழியில் பொருள் ஈட்டுதல், சேர்த்த பொருளைப் பகிர்ந்து பயன்படுத்தல் முதலான பல கருத்துகளை வலியுறுத்துகின்றன.

கதைகள் என்னும் இரண்டாம் பிரிவில் இருபத்தொரு சின்னஞ்சிறு கதைகள் இடம்பெற்றுள்ளன. இந்தக் கதைகள் அறிவுநுட்பத்தை வெளிப்படுத்துவனவாகவும் நகைச்சுவை உடையவையாகவும் அறிவுரை கூறுவனவாகவும் உள்ளன. நகைச்சுவை தரும் ஒரு கதையைப் பாருங்கள்.

> ஒரு மனிதன் ஒரு மகாராசனைப் பார்த்து "நீர் எனக்கு ஆறு மாசம் நல்ல போசனம் தருவீராகில், பின் ஒரு பெரிய மலையை எடுப்பேன்" என்றான். அவன் இவனுக்கு அப்படியே நல்ல ஆகாரம் கொடுத்தான். பின் மலைக்குச் சமீபத்தில் அழைத்துக்கொண்டு போய் "இதை எடு" என்றான். அவன் "நீங்கள் எல்லாரும் எடுத்து என் தலைமேலே வைத்தால் எடுக்கிறேன்" என்று சொன்னான்.

இவ்வாறு எல்லாக் கதைகளும் சிறியவையாகவும் நுட்பமான கருத்தை விளக்குவனவாகவும் அமைந்துள்ளன.

மூன்றாவது பிரிவு பூமி என்பது ஆகும். இதில் பூமியில் பல வகையான பொருள்கள் கிடைக்கின்றன என்றும் இந்தப் பூமியைக் கடல் சூழ்ந்துள்ளது என்றும் கடல் நீர் குடிப்பதற்குப் பயன்படாது முதலான கருத்துகள் சொல்லப்பட்டுள்ளன.

நான்காவது பிரிவு மிருகம் என்பது. இதில் காட்டு விலங்குகள், நாட்டு விலங்குகள், கொடிய விலங்குகள், சாதுவான விலங்குகள் முதலிய கருத்துகள் விளக்கப்பட்டுள்ளன. ஐந்தாம் பிரிவு காற்றை விளக்குகிறது. தேசங்கள் என்னும் ஆறாம் பிரிவில் தமிழ்நாடு, இலங்கை, இந்தியா முதலான நாடுகள் விளக்கப் பட்டுள்ளன. ஏழாவது பிரிவு மாட்டைப் பற்றியும் எட்டாம் பிரிவு பறவைகள் பற்றியும் ஒன்பதாம் பிரிவு தாவரம் பற்றியும் பத்தாம் பிரிவு ஆடைகள் பற்றியும் விளக்குகின்றன.

மேலும் யானை, உலோகங்கள், வேளாண்மை, வியாபாரம், மெய்ம்மை, இராசி முதலியன, தாய் செய்த நன்றி, பெரியோரை வழிபடல், நித்திய கரும விதி ஆகிய தலைப்புகளில் சிறு கட்டுரைகள் தரப்பட்டுள்ளன. இக்கட்டுரைகள் அனைத்தும் சிறு தொடர்களில் அமைந்திருப்பதுடன் எடுத்துக் கொண்ட தலைப்புக்கு ஏற்ற வகையில் கருத்துகளையும் தெரிவிக்கின்றன.

இப் பத்தொன்பது பிரிவுகளைத் தொடர்ந்து கடிதம் எழுதுகிற முறை என்ற பிரிவில் மூன்று கடித மாதிரிகள் தரப்பட்டுள்ளன. தகப்பனுக்கு மகன் எழுதுதல், மகனுக்குத் தகப்பன் எழுதுதல், உபாத்தியாயருக்கு மாணாக்கன் எழுதுதல் ஆகியவை அக்கடிதங்கள் ஆகும். இந்தக் கடிதம் எழுதும் முறை தற்போதைய கடித அமைப்பிலிருந்து மாறுபட்டு இருக்கிறது.

கடித விளி, கடிதச் செய்தி, முடிப்பும் கையொப்பமும் இடம், நாள் முதலியவற்றுடன் கடித அமைப்பு விளங்குகிறது.

இந்த இரண்டாம் புத்தகம் இடைநிலை மாணவர்களை மனத்தில் கொண்டு எழுதப்பட்டுள்ளது எனலாம். தற்காலத்தில் ஐந்தாம் வகுப்பு, ஆறாம் வகுப்புப் பயிலும் மாணவர்களுக்கு ஏற்ற வகையில் உள்ளது. எந்தப் பகுதியிலும் செய்யுள் இடம் பெறாதது வியப்பாக உள்ளது. குறிப்பாக நீதி வாக்கியங்கள் என்னும் தலைப்பில்கூட நீதி நூல் கருத்துகள் உரைநடையிலேயே வழங்கப்பட்டுள்ளன.

**பாலபாடம் மூன்றாம் புத்தகம்**

மூன்றாம் புத்தகத்தில் நாற்பத்தைந்து தலைப்புகளில் கட்டுரைகள் உள்ளன. இந்த மூன்றாம் புத்தகத்தை நாவலரின் மாணாக்கரும் மருமகனுமாகிய பொன்னம்பலம் பிள்ளை என்பார் நாவலரின் ஆலோசனைகளுக்கு ஏற்ப உருவாக்கினார்

என்பதை முன்பே அறிந்தோம். இனி இந்த மூன்றாம் புத்தகத்தின் உள்ளடக்கப் பொருளைக் காண்போம்.

நன் மாணாக்கன் என்னும் முதல் தலைப்பில் நல்ல மாணாக்கன் கடைப்பிடிக்கும் அன்றாட நற்பழக்கங்களைத் தெரிவித்துள்ளார். இந்தக் கட்டுரையின் இறுதியில் 'கற்கை நன்றே கற்கை நன்றே பிச்சை புகினும் கற்கை நன்றே', 'கேடில் விழுச் செல்வம் கல்வி', 'அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்' முதலிய செய்யுள் அடிகளைக் கொடுத்துள்ளார். இரண்டாம் புத்தகத்தில் செய்யுள் அடிகள் எதுவுமே இடம்பெறவில்லை என்பதைப் பார்த்தோம். இந்த மூன்றாம் புத்தகமும் உரைநடை வடிவில் இருந்தாலும் சில செய்யுள் அடிகள் தரப்பட்டுள்ளன என்பதற்கு இவ்வடிகள் எடுத்துக்காட்டாய் அமைந்துள்ளன.

நித்திரை என்னும் இரண்டாம் தலைப்பில் இயற்கையாக மனிதனிடம் காணப்படும் தூக்கம் பற்றிய செய்திகள் தரப் பட்டுள்ளன. அளவான நித்திரையே மனிதனுக்குச் சிறப்பு என்றும் அளவு கடந்த நித்திரை சோம்பலை உருவாக்கும் என்றும் குறைவான நித்திரை நோயை உருவாக்கும் என்றும் குறிப்பிடப் பட்டுள்ளது. பகலில் தூங்கக் கூடாது. இரவிலும் ஆறு மணி நேரத்திற்கு மேல் தூங்கக் கூடாது என்ற கருத்துத் தெளிவு படுத்தப்பட்டுள்ளது. நாம் படுக்கும் இடம் நல்ல காற்று வருமிடமாக இருக்க வேண்டும் என்றும் தரைமட்டத்திற்கு மேலாகக் கட்டில் முதலியவற்றில் படுக்க வேண்டும் முதலான செய்திகள் நித்திரை என்னும் இக்கட்டுரையில் தரப்பட்டுள்ளன.

நித்திய கருமம் என்னும் மூன்றாம் தலைப்பில் அன்றாடச் செயல்கள் தரப்பட்டுள்ளன. சூரியன் உதிப்பதற்கு இரண்டு மணி நேரத்தற்கு முன்பே எழுந்திருக்க வேண்டும் என்றும் உடலைத் தூய்மை செய்த பிறகு இறைவனை வணங்க வேண்டும் என்றும் அதன்பின் பாடங்களைக் கற்க வேண்டும் என்றும் குறிப்பிடப் பட்டுள்ளது.

பெரியோரை வழிபடல் என்னும் நான்காம் தலைப்பில் பெரியோர் யாவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. பிதா, மாதா, குரு, உபாத்தியாயர், தமையன், தமக்கை, மாமன், மாமி, பெரிய தகப்பன், சிறிய தகப்பன் முதலாகிய இவர்கள் பெரியோர்கள் என்று சொல்லப்படுவார்கள் என்று பெரியோர்களின் உறவுப் பெயர்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. இந்தப் பெரியோர்கள்

சொல்லைக் கேட்டு அவர்களை மதித்து நடத்தல் வேண்டும். அவர்களுக்குக் கீழ்ப்படிந்து வழிபட்டு வருதல் வேண்டும் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

சற்புத்திரர்களே ஆபரணம் என்னும் ஐந்தாம் தலைப்பில் ஒரு கதை தரப்பட்டுள்ளது. இந்தக் கதையில் நல்ல பிள்ளைகளே விலை மதிக்க முடியாத ஆபரணங்கள் என்னும் கருத்து உணர்த்தப்பட்டுள்ளது. சகோதர சகோதரிகள் என்னும் ஆறாம் தலைப்பில் முதலில் சகோதரன், சகோதரி ஆகிய சொற்களின் பொருள் விளக்கப்பட்டுள்ளது. இக்காலத்தில் நம்மவர்களுடைய பிள்ளைகளுள் அனேகர், சகோதர மரியாதையின்றி ஒருவரை யொருவர் சமத்துவமாகப் பெயர் சொல்லி அழைக்கின்றார்கள். இந்தப் பழக்கமே அவர்களுடைய முதிர்ந்த பருவத்திலும் அவர்களைத் தொடர்கின்றது. இதைப் பெற்றோர்களும் உபாத்தி யாயர்களும் கவனித்து, அவர்களைத் திருத்துதல் வேண்டும் என்று மூத்தவர்களைப் பெயர் சொல்லி அழைக்கக்கூடாது என்னும் கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது.

துர்வார்த்தை என்னும் எட்டாம் தலைப்பில் கெட்ட வார்த்தைகள் பேசக்கூடாது என்னும் கருத்து வலியுறுத்தப் பட்டுள்ளது. துர்வார்த்தை பேசுவோர், அறிவுடையோரால் வெறுத்து ஒதுக்கப்படுவர் என்னும் கருத்தும் உணர்த்தப் பட்டுள்ளது.

உயிர்களுக்கு இதஞ்செய்தல் என்னும் எட்டாம் தலைப்பில் பிற உயிர்கள் துன்பப்படுவதைக் கண்டால் அத்துன்பம் தமக்கு வந்தது போல எண்ணி, அதனை நீக்க முயலுதல் வேண்டும், முதலான திருக்குறள் கருத்துகள் விளக்கப்பட்டுள்ளன. பெற்றோரைப் பேணல் என்னும் ஒன்பதாம் தலைப்பில் தாய் தந்தையரைப் பேணுவது பிள்ளைகளின் கடமை என உணர்த்தப்பட்டுள்ளது.

நம்மைப் பெற்றவர்கள் நம்முடைய தாயும் தந்தையும். நாம் பிறந்தநாள்முதல் கல்வி கற்று அறிஞர்களாய்ப் பொருள் சம்பாதித்துச் சீவனம் செய்யும் பருவத்தை அடையும் வரையும் நமக்கு வேண்டிய அன்னவஸ்திரங்களைத் தந்தும் நமக்கு வியாதி வந்த காலத்திலே அதற்காக மனம் பதைபதைத்து வைத்தியம் செய்வித்துச் சௌக்கியப்படுத்தியும் கல்வி கற்பித்தும் நல்ல

பழக்கங்களைப் பழக்கியும் எப்போதும் நமக்காகப் பாடு படுபவர்கள் நம்முடைய பிதா மாதாக்களே. எனவே அவர்களைத் தெய்வமாகப் பேண வேண்டும் என்னும் கருத்தைத் தெரிவித்திருப்பதுடன் ஔவையார் இயற்றியுள்ள கொன்றை வேந்தனிலிருந்து அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்னும் அடியும் தரப்பட்டுள்ளது.

இந்தப் பகுதியில் இலங்கைத் தமிழ்ச் சொல்லாட்சி இடம் பெற்றிருப்பதைக் காண முடிகிறது. நாம், நாங்கள் என்பவை தன்மைப் பன்மைச் சொற்கள். இச்சொற்களில் நாம் என்பது பொதுப்படையாக அனைவரையும் தன்மைப்படுத்திப் பன்மையில் கூறுவதற்குப் பயன்படுத்தப்படுகிறது. நாங்கள் என்பது தனியாகச் சிலரைத் தன்மைப் பன்மையில் குறிப்பதற்குப் பயன்படுத்தப்படுகிறது. நாம் என்னும் தன்மைப் பன்மைச் சொல் வேற்றுமை உருபை ஏற்கும்போது நம்மை, நமக்கு என்பதுபோல் மாறும், நாங்கள் என்னும் தன்மைப் பன்மைச் சொல் வேற்றுமை உருபை ஏற்கும்போது எங்களை, எங்களால் என்பது போல் மாறும். இந்தக் கட்டுரையில் எங்களை என்று வேற்றுமை உருபு ஏற்ற நாங்கள் என்னும் சொல்லுடன் ஒரு தொடர் தொடங்கு கிறது. இந்தத் தொடரின் இடையில் நமக்கு என்னும் சொல் வருகிறது. நாங்கள் என்னும் சொல் வேற்றுமை உருபை ஏற்கும் போது எங்களுக்கு என்று மாறும் எனப் பார்த்தோம். ஆனால் இந்த இடத்தில் நமக்கு என்ற சொல் இலங்கை மரபுக்கு ஏற்ப இடம்பெற்றுள்ளது. இனி அந்தத் தொடரைப் படித்துப் பாருங்கள்.

> நாங்கள் பிறந்தநாள் முதல் கல்வி கற்று அறிஞர்களாய்ப் பொருள் சம்பாதித்துச் சீவனம் செய்யும் பருவத்தை அடையும் வரையும் நமக்கு (எங்களுக்கு) வேண்டிய அன்ன வஸ்திரங்களைத் தந்தும் நமக்கு (எங்களுக்கு) வியாதி வந்த காலத்திலே அதற்காக மனம் பதைபதைத்து வைத்தியம் செய்வித்துச் சௌக்கியப்படுத்தியும் கல்வி கற்பித்தும் நல்ல பழக்கங்களைப் பழக்கியும் எப்பொழுதும் நமக்காகப் (எங்களுக்காகப்) பாடுபடுபவர்கள் நம்முடைய (எங்களுடைய) பிதா மாதாக்களே.

இந்தத் தொடர் நாங்கள் என்று தொடங்கப்பட்டுள்ளதால் இடையில் எங்களுக்கு (நமக்கு), எங்களுக்காக (நமக்காக), எங்களுடைய (நம்முடைய) என்னும் சொற்கள்தான் தமிழ்நாட்டு மொழிநடையில் இடம்பெறும் அல்லது தொடரின் தொடக்கச் சொல் நாங்கள் என்றிருப்பதற்குப் பதிலாக நாம் என்று வரும்.

கடவுளுதவி என்னும் பத்தாம் தலைப்பில் கடவுளுதவி யாவது கடவுளால் ஆன்மாக்களாகிய எங்களுக்குச் செய்யப்படும் உதவி என்று விளக்கப்பட்டுள்ளது. கடவுள் நம்மேற் கொண்ட இரக்கத்தினால் நாம் இருத்தற்குப் பூமியையும் உலாவுதற்கு ஆகாயத்தையும், உண்ணுதற்குச் சல முதலியவற்றையும், உணவுகளைப் பாகம் பண்ணுவதற்கு அக்கினியையும், சுவாசித் தற்கு வாயுவையும் உதவினார் என்று அந்த உதவி விளக்கப் பட்டுள்ளது.

மேலே நாம் பார்த்த தொடரிலும் முந்தைய தலைப்பில் பார்த்தது போல் எங்களுக்கு என்பதும் நாம் என்னும் சொல்லும் கலந்து வந்துள்ளதைக் காணமுடிகிறது.

யுத்தியுள்ள தீர்ப்பு என்னும் பதினோராம் தலைப்பில் ஒரு பழங்கதை விளக்கப்பட்டுள்ளது. கல்வி என்னும் பன்னிரண்டாம் தலைப்பில் கல்வியின் சிறப்பு அறநூல்களின் நெறி நின்று வழங்கப்பட்டுள்ளது. செல்வம் என்னும் பதின்மூன்றாம் தலைப்பில் அறத்திற்கும் இன்பத்துக்கும் காரணமாயுள்ளது செல்வம் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. அதைத் தொடர்ந்து செல்வம் எவை என்னும் வரையறையும் தரப்பட்டுள்ளது. இரத்தினம், பொன், வெள்ளி, நெல் முதலியன செல்வம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளன.

கேள்வி என்னும் பதினான்காம் தலைப்பில் கேள்விச் செல்வம் விளக்கப்பட்டுள்ளது. செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம் என்னும் குறள் கருத்தும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

முயற்சி என்னும் பதினைந்தாம் தலைப்பில் முயற்சி இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மன முயற்சி, சரீர முயற்சி என அவை சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. முயற்சியுடையார் அதனால் விளையும் இன்பத்தை நோக்காது, தாம் முயன்ற தொழிலின் முடிபையே விரும்புவர். அதனால் அவர் எடுத்த கருமங்கள் இனிது முடியப்பெற்று எவ்வகைப்பட்ட இன்பங்

களையும் அடைவர். இன்னும் அவர் தமது பெருமையை நிலை நிறுத்துவர். முயற்சியில்லையானால் கல்வி, செல்வம் முதலியவற்றால் பெருமை அடைபவர் ஒருவருமிலர். முயற்சி யில்லாதவர் தமக்கும் பிறர்க்கும் பயன்படாமையால் மரத்தினும் கடையாய் எல்லாராலும் இகழப்படுவர் என்று முயற்சியின் பெருமையும் முயற்சியின்மையின் சிறுமையும் விளக்கப் பட்டுள்ளன.

பெண் கல்வி என்னும் பதினாறாம் தலைப்பில் பெண்கள் கல்வி கற்று, அறிவுபெற்று விளங்கவேண்டும் என்னும் கருத்து தெரிவிக்கப்பட்டுள்ளது.

மேலும் காலம், உண்மையின் பயன், பரிகாசம், இந்தியா, மிருகம், புறங்கூறல், வித்தியாசாலை, புத்தகம், வேளாண்மை, நாணகம் (நாணயம்), சிநேகம், ஈகை, இலங்கை, பேராசை, பெருந்துயர், வீடு, தாவரம், சிங்கம், பொய்வேடம், தென்னை, சரீர சௌக்கியம், யாக்கை நிலையாமை, சற்புத்திரர், ஒட்டகம், செய்ந்நன்றிகொன்றவர் கெடுவர், கல்வியின் பயன், காகிதம், மழை, குதிரை, உலோகங்கள் முதலிய தலைப்புகளில் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

இந்த மூன்றாம் புத்தகத்தின் ஐந்தாம் தலைப்பு சற்புத்திரர்களே ஆபரணம் என்றிருக்கிறது. முப்பத்தெட்டாம் தலைப்பு சற்புத்திரர் என்றிருக்கிறது. இரு தலைப்புகளிலும் இரு நிகழ்வுகள் காட்டப்பட்டுள்ளன. சற்புத்திரர்களே ஆபரணம் என்னும் தலைப்பில் பெற்றோர் தம் பிள்ளைகளைப் போற்றுவது விளக்கப்பட்டுள்ளது. சற்புத்திரர் என்ற தலைப்பில் பெற்றோரே செல்வம் எனப் பிள்ளைகள் போற்றுவது உணர்த்தப்பட்டுள்ளது. சற்புத்திரர் என்னும் தலைப்பில் தரப்பட்டுள்ள நிகழ்ச்சியைப் படித்துப் பாருங்கள்.

> சிசிலி என்னும் தீவிலே எட்னா என்கின்ற பெயருள்ள ஓர் எரிமலை இருக்கின்றது. சில காலங் களில் அதன் சிகரங்களிலும் அக்னி சிந்துவது வழக்கம். ஒரு காலத்திலே அந்த மலை மிகவும் அதிகமாக அக்கினியைக் கக்கிற்று. அப்போது அந்த மலையின் பக்கங்களில் உள்ள ஊர்களிலிருந்த சனங்கள் தங்கள் வீடுகளில் அந்த நெருப்புப்

பற்றினபடியால் தங்கள் பொருள்களில் விலையேறப் பெற்ற சிற்சில பொருள்களை மாத்திரம் தங்களால் ஆன வரையில் உயிர் தப்பி எடுத்துக் கொண்டு ஓடினார்கள். அவர்களுள் செல்வர்களாகிய இரண்டு பிள்ளைகள், தங்கள் திரவியங்களிற் சிலவற்றை மாத்திரம் எடுத்துக் கொண்டு ஓடினார்கள். அவர்களுடைய பிதாவும் மாதாவும் முதிர்ந்த வயசினர் ஆதலால் தங்கள் பிள்ளைகளோடு ஓடித் தப்ப முடியாதவர்களாய் அவர்களுக்குப் பின்னே மெல்ல மெல்ல நடந்து போனார்கள். அதுகண்ட பிள்ளைகள் இருவரும் 'நம்மைப் பெற்று வளர்த்த பிதா மாதாக்களைக் காட்டிலும் இந்தத் திரவியங்கள் நமக்குப் பெரியனவா? நம்முடைய ஆஸ்திகளெல்லாம் போனாலும் போகட்டும், பிதா மாதாக்களை இரக்ஷிப்பதே நமக்குக் கடமை' என்று தங்களுக்குள்ளே ஆலோசனை செய்து கொண்டு கையிலெடுத்த பொருள்களை எறிந்துவிட்டு, தனித் தனியாகத் தாயையும் தகப்பனையும் தூக்கிக் கொண்டு அந்த நெருப்புக்கு ஒருவாறு தப்பி ஓடிச் சென்று, ஒரு சௌக்கியமான இடத்தைச் சேர்ந்தார்கள்.

என்பதுதான் அந்த நிகழ்ச்சி.

உலோகங்கள் என்னும் நாற்பத்தைந்தாம் தலைப்பில் தரப்பட்டவை பிற தலைப்புகளில் தரப்பட்டவையிலிருந்து வேறுபட்டுள்ளன. பொன், வெள்ளி, செம்பு, ஈயம், பித்தளை, வெண்கலம், இரும்பு முதலிய சிறு தலைப்புகளிடப்பட்டு அந்தந்த உலோகங்கள் தொடர்பான செய்திகள் தரப்பட்டுள்ளன.

நாற்பத்தைந்து தலைப்புகளில் தரப்பட்டுள்ள பாடங்களைத் தொடர்ந்து, மாணிக்கவாசக சுவாமிகள் என்ற தலைப்பில் ஒரு கட்டுரை தரப்பட்டுள்ளது. இதில் சைவ சமயக் குரவர்களில் மாணிக்கவாசகரும் ஒருவர் என்னும் கருத்தும் அவர் திருவாதவூரில் பிறந்தார் என்பதும் அரிமர்த்தன பாண்டியனின் அமைச்சராகப் பணிபுரிந்தார் என்பதும் பாண்டிய மன்னனுக்குக் குதிரை வாங்குவதற்காகச் சென்றார் என்பதும் குதிரை வாங்கச் சென்றவர் குதிரை வாங்காமல் திருப்பெருந்துறை ஆலயத்

திருப்பணிக்கும் சிவனடியார்களுக்குமாய் அந்தப் பணத்தைச் செலவு செய்தார் என்பதும் விளக்கப்பட்டுள்ளன.

மேலும் மாணிக்கவாசகருக்காகச் சிவபெருமான் நரிகளைப் பரியாக்கி அவரே குதிரைச் சேவகனாய் வந்தார் என்பதும் குதிரைகளாக வந்த நரிகள் மீண்டும் நரிகளாகி விட்டன என்பதும் கோபம் கொண்ட பாண்டிய மன்னன் மாணிக்கவாசகரைச் சிறையில் அடைத்தான் என்பதும் குறிப்பிடப்பட்டுள்ளன. மாணிக்கவாசகருக்கு உதவுவதற்காகச் சிவபெருமான் வைகையைப் பெருக்கெடுக்கச் செய்ததும் பிட்டுக்கு மண் சுமக்க வந்தியின் கூலியாளாய்ச் சிவபெருமான் வந்ததும் வந்திக்கு ஒதுக்கப்பட்ட கரை அடைபடாததால் சினம் கொண்ட காவலன் சிவனின் முதுகில் பிரம்பால் அடித்ததும் முதலான செய்திகள் இந்தத் தலைப்பில் இடம்பெற்றுள்ளன.

மாணிக்கவாசகர் குருந்த மரத்தடியில் சிவனின் திருப்பாதத்தைக் கண்டு நமச்சிவாய வாழ்க எனத் தொடங்கும் திருவாசகத்தைப் பாடியருளினார்.

மாணிக்கவாசகர் சிதம்பரத்தில் நடராச பெருமானை வழிபட்டுவிட்டுச் சிதம்பரத்திற்குப் புறத்தே இருந்தார். அப்போது பொன்னம்பலத்தைப் பௌத்த ஆலயம் ஆக்குவேன் என்று சொல்லியபடி பௌத்த குரு ஒருவர் வந்தார். அப்போது ஈழ நாட்டை ஆண்ட மன்னன் தன் ஊமை மகளுடன் சிதம்பரத்துக்கு வந்தான். சிதம்பரத்திற்கு வந்த பௌத்த குரு தில்லை வாழந்தணர்களை வாதத்திற்கு அழைத்தார். பௌத்த குருவுடன் வாதம் செய்ய யாரை அனுப்பலாம் என்று அந்த அந்தணர்கள் சிந்தித்தனர். இரவில் சிவபெருமான் அவர்களின் கனவில் தோன்றிச் சிதம்பரத்துக்குப் புறத்தே இருக்கும் மாணிக்கவாசகரை அனுப்புமாறு தெரிவித்தான்.

அந்தணர்கள் நேரே மாணிக்கவாசகரிடம் சென்று இறைவனின் திருவுளத்தை அவரிடம் தெரிவித்தனர். அங்கே வந்திருந்த சோழ மன்னனும் வேண்டிக் கேட்டுக் கொண்டான். அதற்கிணங்கச் சிதம்பரத்திற்கு வந்த மாணிக்கவாசகர் புத்தர்களுடன் வாதம் செய்து அவர்களை ஊமைகளாக்கினார். அது கண்ட ஈழ மன்னன், பிறவி ஊமையாகிய தன் மகளின் ஊமைத்தன்மையைப் போக்குமாறு வேண்டிக் கொண்டான். மாணிக்கவாசகர் அந்தப் பெண்ணின் ஊமைத் தன்மையைப்

போக்கி அருளினார். ஊமைகளாகிய புத்தர்களின் வேண்டு கோளைக் கேட்டு அவர்களின் ஊமைத் தன்மையையும் போக்கி அவர்களைச் சைவர்கள் ஆக்கினார் என்று மாணிக்கவாசகர் வாழ்வில் நடைபெற்ற நிகழ்ச்சியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

### பாலபாடம் நான்காம் புத்தகம்

பாலபாடத்தின் நான்காம் புத்தகம் 1865இல் வெளியாகி யுள்ளது. இப்புத்தகத்தில் முப்பத்தொன்பது தலைப்புகளில் கட்டுரைகள் உள்ளன. அதைத் தொடர்ந்து தமிழ்ப்புலமை பெற வேண்டும் என்னும் கருத்து தெரிவிக்கப்பட்டுள்ளது. அதைத் தொடர்ந்து குறிப்புரையும் அப்பியாசமும் என்னும் தலைப்பில் ஒவ்வொரு பாடத்திற்கும் குறிப்புரையும் இலக்கணமும் பயிற்சி வினாக்களும் கொடுக்கப்பட்டுள்ளன. இனி நான்காம் புத்தகத்தின் உள்ளடக்கம் பற்றிக் காண்போம்.

கடவுள் என்னும் முதல் தலைப்பில், "உலகமாவது சித்தும் அசித்துமென இருவகைப்படும் பிரபஞ்சமாம். சித்து அறிவுடைய பொருள், அசித்து அறிவில்லாத பொருள், அசித்தென்றாலும் சடம் என்றாலும் பொருந்தும். உலகம் தோன்றி நின்று அழியும் காரியமாய் உள்ளது. ஆதலினால் உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று தொழில்களையும் செய்தற்கு ஒரு கடவுள் இருக்கின்றார் என்பது நன்றாக நிச்சயிக்கப்படும்" என்று கடவுள் உண்மை விளக்கப்பட்டுள்ளது.

"கடவுள் என்றும் உள்ளவர். அவருக்குப் பிறப்பும் இறப்பும் இல்லை. அவர் எங்கும் நிறைந்தவர். அவர் இல்லாத இடமில்லை. அவர் எல்லாம் அறிபவர். அவர் அறியாதது ஒன்றும்இல்லை. அவருடைய அறிவு இயற்கை அறிவு. ஒருவர் அறிவிக்க அறிபவர் அல்லர். அவர் எல்லாம் வல்லர். அவரால் இயலாத கருமம் ஒன்றுமில்லை. அவர் அளவிடப்படாத ஆனந்தம் உடையவர். தம்முடைய அனுபவத்தின் பொருட்டு வேறொன்றையும் வேண்டுபவர் அல்லர். அவர் தம்வயமுடையவர். பிறர் வயமுடையவர் அல்லர். அவர் உயர்வும் ஒப்பும் இல்லாதவர். அவரின் மேலானவரும் இல்லை. அவருக்குச் சமமானவரும் இல்லை. அவர் சகல லோகத்துக்கும் ஒரே நாயகர்; அவர் செய்யும் தொழில்களுள் ஒன்றாயினும் அவருடைய பிரயோசனத்தைக் குறித்ததன்று. எல்லாம் ஆன்மாக்களுடைய பிரயோசனத்தைக்

குறித்தவைகள். அவர் ஆன்மாக்களிடத்தில் உள்ள கைம்மாறு இல்லாத அளவு கடந்த திருவருளே திருமேனியாக உடையவர்" என்று கடவுளின் தன்னிகரில்லாத் தன்மை விளக்கப்பட்டுள்ளது.

ஆன்மா என்னும் இரண்டாம் தலைப்பில் ஆன்மா பற்றிய விளக்கம் தரப்பட்டுள்ளது. "ஆன்மாக்கள் நித்தியமாய், சரீரந்தோறும் வெவ்வேறாய் வினைகளைச் செய்து வினைப் பயன்களை அனுபவிப்பவைகளாய், சிற்றறிவும் சிறு தொழிலும் உடையவைகளாய்த் தங்களுக்கு ஒரு தலைவனை உடையவை களாய் இருக்கும்" என்று ஆன்மாவின் தன்மை விளக்கப் பட்டுள்ளது.

கடவுள் வழிபாடு என்னும் மூன்றாம் தலைப்பில் கடவுளின் வியாபகத் தன்மையும் அவர் பாலில் நெய்போல் தோன்றாது இருப்பதும் விளக்கப்பட்டுள்ளன. மனத்தால் தியானிப்பதும் வாக்கினால் துதிப்பதும் கைகளினால் பூசிப்பதும் கால்களினால் வலம் வருவதும் செவிகளினால் அவனது புகழைக் கேட்பதும் கண்களால் திருமேனியைத் தரிசிப்பதும் கடவுள் வழிபாட்டுமுறை என்று நாவலர் தெரிவித்துள்ளார்.

அன்பில்லாத வழிபாடு உயிரில்லாத உடம்பு போன்றது. அன்பானது தன்னால் விரும்பப்பட்டவரிடத்தே தோன்றும் உள்ள நிகழ்ச்சி. கடவுளிடத்தே அன்புடைமைக்கு அடையாளங் களாவன: அவருடைய உண்மையை நினைக்குந்தோறும், கேட்குந்தோறும், 'காணுந்தோறும் மகிழ்தலும், மயிர்க்கால் தோறும் திவலை உண்டாகப் புளகம் கொள்ளலும், ஆனந்த அருவி பொழிதலும், விம்மலும், நாத் தழுதழுத்தலும், உரை தடுமாறலும், அவரால் விரும்பப்படுபவைகளைச் செய்தலும், வெறுக்கப்படுபவைகளைச் செய்யாது ஒழிதலும், அவருடைய மெய்யடியார்களைக் காணும்போது கூசாது வணங்குதலும் பிறவுமாம் என்று கடவுளிடம் அன்பு கொள்ளும் முறையை நாவலர் தெளிவு படுத்தியுள்ளார்.

ஈசுரத் துரோகம் என்னும் நான்காம் தலைப்பில் கடவுளை நிந்தித்தலும் கடவுளை வழிபடும் முறைமையைப் போதிக்கும் குருவை நிந்தித்தலும் கடவுளுடைய மெய்யடியாரை நிந்தித்தலும் கடவுள் அருளிச் செய்த வேதாகமங்களை நிந்தித்தலும் இந்நிந்தைகளைக் கேட்டுக் கொண்டிருத்தலும் தேவாலயத்துக்கும்

மடாலயத்துக்கும் உரிய திரவியங்களை அபகரித்தலும் தேவாலயம், திருக்குளம், திருமடம், திருநந்தவனம் முதலியவை களுக்கு அழிவு செய்தலும் ஈசுரத் துரோகங்களாகிய அதிபாதகங் களாம் என்று விளக்கப்பட்டுள்ளது.

அருள் என்னும் ஐந்தாம் தலைப்பில் அருளாவது இவை தொடர்புடையவை என்றும் இவை தொடர்பில்லாதவை என்றும் நோக்காது இயல்பாகவே எல்லா உயிரின்கண்மேலும் செல்வதாகிய கருணை என்று அருளுக்கு விளக்கம் தரப் பட்டுள்ளது. இவை தவிரவும் கொலை, புலாலுண்ணல், கள்ளுண்ணல், களவு, திருட்டு, வியபிசாரம், பொய், அழுக்காறு, கோபம், சூது, செய்ந்நன்றியறிதல், பெரியோரைப் பேணல், பசுக்காத்தல், தானம், கல்வி, செல்வம், தருமம், கடன்படல், இரசவாதம், வருணம், ஆச்சிரமம், நல்லொழுக்கம், கற்பு, வீட்டுவேலை, வீட்டுக்கொல்லை, ஆரோக்கியம், வியாதி தீர்த்தல், தேவாலயம், மடம், சத்திரம், தேவாலய தரிசனம், புராணபடனம், சிராத்தம், தமிழ், காலப்பிரமாணம் ஆகிய தலைப்புகளில் கட்டுரைகள் தரப்பட்டுள்ளன.

தமிழ்ப் புலமை

தமிழில் புலமை பெறுவதற்கு உரிய வழிகளை இந்தத் தலைப்பில் ஆறுமுக நாவலர் விளக்கியுள்ளார். தமிழ் கற்கப் புகும் சைவ சமயிகள் முன்னர்ப் பாலபாடங்களைப் படித்துக் கொண்டு இலக்கணச் சுருக்கத்தைக் கற்றறிந்து இயன்ற அளவு பிழை யில்லாமல் எழுதவும் பேசவும் பழகுக என்று அடிப்படையாகப் படிக்க வேண்டியவற்றைத் தெரிவித்த நாவலர் அதன்பின் படிக்கவேண்டியவற்றையும் குறிப்பிட்டுள்ளார்.

நிகண்டுகள், திருவள்ளுவர் குறள், நாலடியார் முதலாகிய நீதிநூல்களைப் பதப்பொருளுடன் கற்றறிக என்றும் விளக்கியுள்ளார்.

சமய தீக்ஷை பெற்றுக்கொண்டு, சைவர்களுக்கு இன்றியமையாதனவாகச் சிறப்பினவாகிய தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் அருட்பாக்களைப் பண்ணுடன் ஓதவும் சுத்தாங்கமாக ஓதவும் பழகிக் கொள்க.

பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், திருவாதவூரடி கள் புராணம், கந்த புராணம் உபதேச காண்டம், கோயிற்

புராணம், காசி காண்டம், கூர்ம புராணம், சேது புராணம், காஞ்சிப் புராணம், திருத்தணிகைப் புராணம், பதினோராந் திருமுறையிற் பிரபந்தங்கள், குமரகுருபர சுவாமிகள் அருளிச் செய்த பிரபந்தங்கள் முதலாகிய இலக்கியங்களையும் நன்னூல் விருத்தியுரை, அகப்பொருள் விளக்கவுரை, புறப்பொருள் வெண்பாமாலையுரை, காரிகையுரை, வெண்பாப் பாட்டிய லுரை, தண்டியலங்காரவுரை, தொல்காப்பியம் இளம்பூரண ருரை, சேனாவரையருரை, நச்சினார்க்கினியருரை, பிரயோக விவேகவுரை, இலக்கணக்கொத்துரை, தொல்காப்பியச் சூத்திர விருத்தி, இறையனாரகப் பொருளுரை முதலிய இலக்கண நூல்களையும் கற்றறிதல் வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார்.

மேலும் பூகோள நூல், ககோள நூல், அங்க கணிதம், வீச கணிதம், க்ஷேத்திர கணிதம் முதலிய நூல்களையும் தருக்க நூல்களையும் கற்றறிதல் வேண்டும் எனவும் தெரிவித்துள்ளார்.

ஆறுமுக நாவலர் தெரிவித்துள்ளபடி படித்தால் ஒருவர் தமிழ்ப் புலமை பெற்று விளங்குவார் என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை. அந்த அளவிற்குப் பல தமிழ் இலக்கியங்களையும் தெரிவித்துள்ளார். பல இலக்கியங்களைத் தெரிவித்த நாவலர் காப்பியங்கள் எதையும் குறிப்பிடாததுடன் சங்க இலக்கியங்களை யும் குறிப்பிடவில்லை. ஆறுமுக நாவலர் காலத்தில் இவ்விலக்கியங்கள்பயன்பாட்டில் இல்லாமல் இருந்ததால் குறிப்பிடாமல் விட்டிருக்கலாம் எனவும் கருத முடியும்.

### குறிப்புரையும் அப்பியாச வினாக்களும்

பாலபாடம் நான்காம் புத்தகத்தில் உள்ள முப்பத் தொன்பது பாடங்களுக்கும் குறிப்புரை தரப்பட்டுள்ளது. அக்குறிப்புரை ஒவ்வொரு பத்திக்கும் தனித்தனியே கொடுக்கப் பட்டுள்ளது. இக்குறிப்புரையில் வடசொற்கள் எவை என்ற குறிப்புடன் அவை எப்படித் தற்சமம் ஆக்கப்பட்டு இடம் பெற்றுள்ளன என்பதும் விளக்கப்படுகிறது. மேலும் தேவையான இலக்கண விளக்கங்களும் தரப்பட்டுள்ளன.

இலக்கணத் தெளிவைக் கொடுப்பதற்காகப் பிரித்தெழுதும் பயிற்சியும் பகுபத உறுப்பிலக்கணம் பிரித்து எழுதும் பயிற்சியும் சொற்களுக்கு இலக்கணக் குறிப்பு எழுதும் பயிற்சியும் வழங்கப்

பட்டுள்ளன. பயிற்சி வினாக்களாகப் பலவும் தரப்பட்டுள்ளன. இந்தப் பயிற்சி வினாக்களின் வாயிலாகப் பாடப் பொருளை எளிதில் நினைவிற் கொள்ளமுடியும்.

## பாலபாடம் குறித்து அறிஞர் கருத்துகள்

ஆறுமுக நாவலர் படைத்தளித்த பாலபாடம் பற்றிப் பல அறிஞர்கள் தங்கள் கருத்துகளைத் தெரிவித்துள்ளனர். அவற்றை இங்கே காண்போம்.

> நல்ல தமிழில் மொழிச் சிக்கல்களை அறிந்து தமிழ்ப் பண்பாட்டிற்கும் நாட்டிற்கும் உகந்த வகையில் முதன்முதலில் எழுந்த பால பாடங்கள் நாவலர் எழுதிய பாலபாடங்களே ஆகும். வயதுக்கேற்ப வளரும் மொழிச் சிக்கலோடு வளரும் அறிவு இவர் நூலில் மட்டுமே இன்றும் விளங்குகிறது.

என்று தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் தெரிவித்துள்ளார்.

> நாவலருடைய பாலபாடங்கள் ஏணிபோல் மாணவரைப் படிப்படியாக ஏற்றி அறிவுச் சிகரத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும் வன்மை யுடையன

என்று இ.மு. சுப்பிரமணிய பிள்ளை தெரிவித்துள்ளார்.

## பாலபாட மொழிநடை

ஆறுமுக நாவலரின் பாலபாடம் நான்கு புத்தகங்களும் எளிய சொற்களையும் தொடர்களையும் கொண்டுள்ளன. கற்போரின் படிநிலைகளை உணர்ந்து அவற்றிற்கு ஏற்ப உருவாக்கப்பட்டுள்ளன. சமய அறிவு, மொழி அறிவு, உலகியல் அறிவு அனைத்தையும் தெரிவிக்கும் அளவிற்குச் செறிவுடன் உருவாக்கப்பட்டுள்ளன.

1822இல் பிறந்த ஆறுமுக நாவலர் வாழ்ந்த காலத்தில் தமிழ் நடையில் வடசொற்கள் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டு வந்தன. ஆறுமுக நாவலரின் மொழிநடையிலும் வடசொற்கள் பயன் படுத்தப்பட்டுள்ளன என்றாலும் அவை மிகவும் குறைவாகவே பயன்படுத்தப்பட்டுள்ளன. அவற்றையும் வடசொற்கள் என்று தனிமைப்படுத்தி அறிவித்துள்ளதால் பிற்காலத்தில் அவற்றிற்கு

மாற்றாகச் சிறந்த தமிழ்ச் சொற்களைக் கண்டு பயன்படுத்த முடியும் என்னும் எண்ணம் அவரிடம் இருந்திருக்கிறது எனலாம்.

பிரார்த்தனை என்னும் வடசொல் பிரார்த்தனம் எனத் தற்சமமாக்கப்பட்டு நாவலரால் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்தச் சொல் தற்காலத்திலும் பிரார்த்தனை எனும் தற்சம வடிவத்தில் பயன்படுத்தப்படுவதை நாம் அறிவோம். தமிழில் மொழிக்கு முதலில் வராத சொற்களைக் குறிப்பிடும் போது தமிழ் மரபிற்கு ஏற்ப முதலில் இ அல்லது உ என்னும் எழுத்துகளை இணைத்துள்ளார்.

எளிமையிலிருந்து அருமை என்னும் கருத்துப்படி முதலில் எளிமையான எழுத்துகளையும் சொற்களையும் அறிமுகம் செய்துள்ளார். அதன்பிறகு எளிய தொடர்களையும் பத்தி களையும் தந்துள்ளார். கல்விப் பணியைப் பல்லாண்டுகளாகச் செய்துவந்ததால் கல்வி உளவியல் வல்லுநரைப் போல் தமது பால பாடங்களை அமைத்துள்ளார்.

செய்யுளை விட உரைநடையே எளிமையானது என்னும் புரிதல் இருந்த காரணத்தால் பாலபாடம் முழுமைக்கும் உரைநடையையே நாவலர் பயன்படுத்தியுள்ளார். எளிமை, தெளிவு என்னும் அடிப்படையில் ஆறுமுக நாவலரின் பாலபாடத்தின் நான்கு புத்தகங்களும் உருவாக்கப்பட்டுள்ளன என்றும் பல அடுக்குகளைக் கொண்ட கல்வி முறைக்கு ஏற்பவும் உருவாக்கப்பட்டுள்ளன என்றும் தெளியமுடியும்.



# ஆறுமுக நாவலர் கல்விக் கொள்கை

நாவலர் கல்வி மரபு பற்றிய நோக்கை உன்னிப்பாகவும் ஆழமாகவும் ஆய்வு செய்தால் அது சைவ சமயக்கல்வி, தமிழ்மொழிக் கல்வி, தொழிற்கல்வி, தொழில்நுட்பக் கல்வி, முதியோர் கல்வி, முறை சாராக்கல்வி ஆகியவற்றை உள்ளடக்கிப் பரந்த நோக்குடன் இருப்பதை அறியலாம்.

கல்வி என்பது பள்ளிக்கூடங்களிலும், பல்கலைக்கழகங் களிலும் படிக்கும் கல்வி மட்டுமல்ல; அது ஒரு நியமக்கல்வி. அதுவல்லாமல் மனிதன் தன் அறிவை வளர்க்க எவ்வளவோ முறைகளைக் கையாண்டுள்ளான். இவை எல்லாமே கல்வி முறையில் அடங்கும்.

நாவலர் காலத்தில் ஈழத்துக் கல்விமுறையினைப் பார்க்கும்போது அன்றைய சமுதாயத்தில் அரசுப் பள்ளிகளும், கூடவே மிசனரிப்பள்ளிகளும் இருந்தனவென்பதை அறிகிறோம். சுதேசிகளைக் கவரும் எண்ணத்தோடு நிறுவப்பட்ட மிசனரிப் பள்ளிகளுக்கு அரசுப் பள்ளிகள் இடையூறாக இருந்தனவாகை யால், மிசனரிமார் தமது மதத்தை விரைவாகவும், தீவிரமாகவும் மக்கள் மத்தியில் பரவச் செய்யும் நோக்கத்தோடு அரசுப் பள்ளிகளை இல்லாமற் செய்ய வேண்டும் என்னும் நோக்கம் கொண்டவராய் இருந்தனர்.

1833இல் கோல்புலூக், கமறன் குழு அரசினர் நடத்தும் தாய்மொழிப் பள்ளிகளை மூடிவிட வேண்டும் என்று கூறிய பரிந்துரையை அரசு ஏற்றுச் செயல்பட்டது. அரசினர் தமிழ்ப் பள்ளிகள் மூடப்பட்டன. மிசனரிமார் பள்ளிகளிலே சைவ சமயத்தைச் சார்ந்த மாணவரும் சென்று படிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. காலப்போக்கில் அம்மாணவர் கிறித்துவ சமயத்தைத் தழுவுதல் தவிர்க்க முடியாததாக ஆகிவிட்டது.

இந்தச் சூழ்நிலையில் தான் 1822இல் சமயப்பற்று, மொழிப் பற்று, நாட்டுப் பற்று மிகுந்த ஆறுமுக நாவலர் நல்லூரில் பிறந்தார். பத்து வயது வரை அக்காலத்து நிலவிய திண்ணைக் கல்வியில் பயின்ற நாவலர் இப்போது யாழ் மத்திய கல்லூரி என்று அழைக்கப்படும் கல்லூரியில் ஆங்கிலம் பயின்று ஆங்கிலம், தமிழ் கற்பிக்கும் ஆசிரியராகப் பணியாற்றி, பார்சிவல் பாதிரி யாருக்குப் பைபிள் திருத்தும் வேலையிலும் ஈடுபட்டிருந்தார்.

தமிழ்க்கல்வி மரபோடு மேலைநாட்டுக் கல்வி மரபையும் நன்கு அறிந்திருந்த நாவலர் தமிழ்க்கல்வி மரபில் சில மாற்றங் களை ஏற்படுத்தி, செழுமைப்படுத்திய கல்வி மரபையே நாவலர் கல்வி மரபு என்று கூறுகிறோம். இலவசக் கல்வியில் மிக்க ஈடுபாடு கொண்ட ஆறுமுக நாவலர் அதை நடைமுறைப் படுத்தியும் உள்ளார்.

> "நான் எனக்கு ஒழிவுள்ள காலத்தைக் கைம்மாறு வேண்டாது உலகத்தாருக்குப் பயன்படக் கழித்தல் வேண்டும் என்று நினைந்து 1816 முதலாகச் சில பிள்ளைகளுக்குக் காலையிலும் மாலையிலும் என் வீட்டில் தமிழ் கற்பித்து வந்தேன்"

எனத் தனது விக்கியாபனம் ஒன்றில் எடுத்துக் காட்டுகிறார்.

நாவலர் காலத்தில் நிலவிய தமிழ்ச் சுதேசியக் கல்வி மரபில் மேலும் சில குறைபாடுகளும் இருந்தன. தமிழ்க் கல்வியும் சைவ சமயக் கல்வியும் ஒரு சில புலமையாளர்களின் ஏகபோக உரிமையாயிருந்தமையும் சாதாரண மக்கள் தமது சைவ சமய அறிவை வளர்த்துச் சமய அடிப்படை உண்மையைப் புரிந்து கொண்டு சீரிய வாழ்வு வாழவும், புறச்சமயத்தாரின் பொய்ப் பிரச்சாரத்தினால் மயக்கமடையாதிருக்கவும் உதவக்கூடிய உண்மைக் கருத்துக்களைப் படித்து விளங்கிக் கொள்ளக்கூடிய எழுத்தறிவைப் பெரும்பாலான மக்கள் பெறாதிருந்தனர்.

1860ஆம் ஆண்டில் வெளியிட்ட விக்கியாபனம் ஒன்றில்

> "சைவ சமயிகள் சைவ நூல்களைக் கல்லாமையி னாலும், எங்கேயாயினும் சிலர் கற்றாலும் அவர்கள் பிறர்க்குப் கற்பித்தலும் யாவரும் எளிதில் அறிந்து உய்யும்படி சமயாசாரங்களைப் போதித்தலும் இல்லாமையாலும் நமது சத்சமயமாகிய சைவ சமயம் வரவரக் குன்றுகின்றது"

என்கிறார். சமய வாழ்வு பாரம்பரியச் சடங்காகப் பின்பற்றி வந்ததேயன்றி அவற்றைத் தம் மக்களுக்குப் படிப்பிக்க வேண்டுமென்ற தமிழ்க்கல்வி மரபாகப் பின்பற்றத் தவறியமை நாவலர் 1872இல் வெளியான யாழ்ப்பாணச் சமயநிலை என்ற பிரசுரத்தில் யாழ்ப்பாணச் சைவ சமயிகள் சிவதீட்சை பெறுகிறார்கள்; சமயச் சின்னங்களைத் தரிக்கிறார்கள்; தலயாத்திரை போகிறார்கள்; கோயில் கட்டிப் பூசை, திருவிழா நடத்துகிறார்கள்; உடம்பை வருத்தி அங்கப்பிரதட்சணம் செய்கிறார்கள்; ஆனால் சமய, தத்துவக் கருத்துக்களைப் படித்தோ கேட்டோ அறிகின்றார்கள் இல்லை; இவற்றைப் பிள்ளைகளுக்குப் படிப்பிக்கின்றார்கள் இல்லை என்று கோடிட்டுக் காட்டுகிறார். மேலும் அவர் கிறித்துவ சமயக்குருமார்கள் மொழியையும் சமய நூல்களையும் படித்துத் தேர்வுகளில் சித்தியடைந்து தத்தம் சமயத்தைப் பற்றிப் பிரசங்கிக்கிறார்கள். ஆனால் நமது சமயக் குருமார்களில் சிலரொழிய மற்றவர்கள் அந்தியேட்டி என்றும் பெயர் தானும் பிழையற எழுத அறியாதிருக்கின்றார்கள். சிவாகமத்தில் ஒரு சுலோகமாயினும் தேவார திருவாசகங்களில் ஒரு பாட்டாயினும், திருக்குறளில் ஒரு குறளாயினும் அறியாதவர் களும் சைவ சமயக் குருமாராக இருக்கிறார்கள். நேரமிருந்தும் படியாமல் வீண் பொழுது போக்குகிறார்கள் என நொந்து கூறுகிறார்.

கல்வியூட்டலைத் தரங்களால் பிரித்து ஒவ்வொரு தரத்திலும் கற்பித்தற்குரிய பாடவிதானங்களை வரையறை செய்து அதற்கேற்ற பாடநூற்களை ஆக்கி, கல்விமுறையை ஒழுங்கு படுத்தி மாணவர் எட்டும் தராதரத்திற்கேற்பப் பட்டங்கள் வழங்கித் தராதரத்தை நிர்ணயிக்கும் வழிமுறைகள் போதிய அளவு இல்லாதிருந்தமை மற்றொரு குறைபாடாயிருந்தது. பழைய அரிய பெரிய நூற்களெல்லாம் ஒரு சிலருடைய ஏடுகளில் முடங்கிக் கிடந்தன. தமிழ்ச் சைவ இலக்கிய ஆக்கங்கள் செய்யுள் நடையிலும் தமிழ் வடமொழி மணிப்பிரவாள நடையிலும் வழக்கிலிருந்தமை குறைந்த அறிவுடைய மக்களுக்குப் படித்து உணரமுடியாத நிலையில் இருந்தது.

சாதாரண மக்கள் சிறப்பாக, பெரும்பான்மை படிக்க அறியாதவராயிருந்த மக்கள் சமய மொழி இலக்கிய அறிவைப் பெற்றுக் கொள்ளவும் பொருளாதார, சமூக அரசியல் விடயங்களில் முன்னேற்றத்திற்குகந்த வழிமுறைகளைத் தெரிந்து கொள்ளவும் அவர்களுக்கு மேடைப் பேச்சுக்கள் மூலம் அறிவும், விழிப்புணர்வும் ஏற்படுத்தும் முறை நடைமுறையில் இல்லாமல்

இருந்தமையும் ஒரு பெருங்குறையாகவே இருந்தது. சைவக் குருமார்களை, சைவப்பிரச்சாரகர்களை உருவாக்கக்கூடிய நிறுவனங்களும், பள்ளிகளும் கல்வி மரபும் இல்லாதிருந்தமையும் ஆக உள்ள குறைபாடும் நிலவி இருந்தது.

வாழ்க்கைக்குப் பொருளீட்டித்தந்த ஆசிரியர் தொழிலை விட்டு விலகி மேற்கூறிய சூழ்நிலைகள் நாவலரைப் பிடர் பிடித்துந்த, தனது இருபத்தாறாவது வயதில் 1848 ஆவணி மாதம் 5ஆம் நாள் யாழ்ப்பாணம் வண்ணார் பண்ணையிலே சைவப் பிரகாச வித்தியாசாலையை நிறுவினார். தமிழ்ப்பள்ளிக் கூடங்கள் மூடப்பட்ட சூழ்நிலையில் சைவப் பெருமக்களுக்கு இது ஒரு வரப்பிரசாதமாக விளங்கியது.

நாவலரின் உடன் பயின்றோர், மாணாக்கர் பலரும் இதை நடத்தத் துணைபுரிந்தனர். அதில் படித்த வைத்தியலிங்கச் செட்டியார் போன்றோர், தேர்வாளர் போன்ற பெரிய வேலை களில் அமர்ந்தனர். ஆயினும் போதிய பொருளில்லாத காரணத் தால் பிடியரிசி தண்டியே இதனை நடத்த வேண்டியதாயிற்று. செந்திநாதையரும், பொன்னம்பலம் பிள்ளையும், சங்கர பண்டிதரும், சபாபதி நாவலரும், கதிரைவேற் பிள்ளையும் நடமாடிய இவ்வித்தியாசாலை, வட்டக் கோட்டை செமினரியைப் போல் இதனையும் ஒரு சிறந்த கலாசாலையாக்க வேண்டும் என்று நாவலர் கண்ட கனவை நினைவாக்க முடியாமல் போய் விட்டது.

இப்பள்ளிக்கு நினைத்த காலத்தில் அரசின் பண உதவி கிடைக்கவில்லை. கிடைத்த பண உதவியும் நாவலர் கனவு கண்ட ஐந்தாண்டுத் திட்டப்பணிக்காக அல்ல. பாலர் பள்ளி முன்னேற்றத்திற்காகக் கிடைத்த தொகை. 1900ஆம் ஆண்டில் த. கைலாசபிள்ளை இதன் அதிகாரி ஆயினமையும், பின்னர் அரசு தலையீட்டால் ஆங்கிலம் படித்த விதேசிகள், தமிழ் அறியாதவர் கள் எல்லாம் தலைமையாசிரியர் ஆனமையும், 1917ஆம் ஆண்டிலே காவிய வகுப்பு தொடங்கியமையும் இரு பிரிவாக அது ஆனமையும் ஆகிய வரலாற்றைப் பண்டிதமணி சி. கணபதிப் பிள்ளை திருக்கேதீச்சரம் திருக்குடத் திருமஞ்சன மலரில் மிக உருக்கமாக விளக்கியுள்ளார்.

பள்ளியின் நிலையை இறைவனை நோக்கி

இனி நான் நின் முன் உயிர்விடுதல் திண்ணம்
நீ அறியாததோ

சிறியேனதன்பில் அர்ச்சனை கொள் அழகியதிருச்
சிற்றம்பலத் தெந்தை நீயே

அவர் அழுத அன்றே நன்னித்தம்பி முதலியார் இதற்காக 400ரூ அனுப்பியது வந்து சேர்ந்ததும் அதை வைத்து வர்த்தக சாலையைப் பள்ளிக்காக விலைக்கு வாங்கியதும், தமது வித்தியா சாலையில் படிப்பித்தற்காக நிகண்டு முதலிய கருவி நூல்களையும் தாம் எழுதிய பாலபாடங்களையும் சைவ சமயசாரம், சிவாலய தரிசனவிதி முதலிய நூல்களை அச்சிடுவித்ததையும் "ஆறுமுக நாவலர் சரித்திரம்" பக்கம் 42இல் த. கைலாசபிள்ளை எடுத்துக் காட்டிய விதம் கல்நெஞ்சையும் கரைய வைக்கும் தன்மையது. சைவப்பிள்ளைகள் தமது சமயத்தையும் மொழியையும் நன்கு அறிந்து உணர்ந்து ஒழுகக்கூடிய சமயக்கல்வியையும், தமிழ் இலக்கியங்களாகிய கந்தபுராணம், பெரியபுராணம், இலக்கணங் களாகிய நன்னூல், வீரசோழியம் போன்றவற்றைக் கற்பித்த தமிழ்க்கல்வியையும் கணிதம், வரலாறு, புவியியல், தர்க்கம், ஆங்கிலம் போன்ற பாடங்களும் நாவலரது சைவப்பிரகாச வித்தியாசாலையில் முறையாகக் கற்பிக்கப்பட்டன.

நாவலர் அவர்கள் இத்தகைய ஒரு பள்ளியை உருவாக்கத் திட்டமிடக் காரணம், அன்று இங்கிலாந்திலும் இலங்கையிலும் ஏற்பட்ட சமய மறுமலர்ச்சியின் விளைவுதான். சமயத்தையும், கல்வியையும் இணைத்துச் செய்தால்தான் மதமாற்றம் செய்ய முடியும் என்னும் கருத்து அன்று ஆழமாக ஊறியிருந்தது.

கிறித்துவ சக்தி விரைவாகப் பரவி உலக சமயமாக மாறிக்கொண்டு வந்தது. இலங்கையிலே ஆங்கில மிசனரி சங்கம் (1804), பப்திஸ்த் சங்கம் (1812), தவஸ்லியன் மெதடிஸ்த் சங்கம் (1814), அமெரிக்க மிசனரி சங்கம் (1816), திருச்சபை மிசனரி சங்கம் (1818) என்பன ஒன்றன் பின் ஒன்றாக வந்து மதப்பிரசாரம் செய்ததோடன்றி யாழ்ப்பாணத்தவர் மொழியான தமிழையும் கற்றனர். தென்னட் ஜேம்ஸ் மெக்சன் தனது "இலங்கையில் கிறித்துவம்" என்ற நூலில் 270ஆம் பக்கத்தில் குறிப்பிடுவதைக் காண்போம்.

> "கல்வியூட்டலையும் சுவிசேடம் போதித்தமையும் தனித்தனி முயற்சிகளாகக் கொள்ளாமல் இணையான ஒன்றுக் கொன்று துணையான கூட்டுப்பணிகளாக மேற்கொள்ளுவதே மிகவும் பயனுள்ளமுறை. இதனை 1848இல் தொரிங்டன்

தேசாதிபதி கிரே என்பாருக்கு எழுதிய வரிகள் ஆமோதிக்கின்றன. கிறிஸ்தவ சமயத்திற்கு மக்களை மாற்றுவதற்கு ஏற்ற மிகச் சிறந்த முதற்படி கல்வியறிவூட்டலாகும். கல்வி மூலம் மக்களின் மனதை மனமாற்றத்திற்கு இசைவாகத் திருப்பாமல் தனியே சுவிசேடத்தைப் பரப்புதல் எவ்வித நிலையான பலனையும் தரமாட்டாது என்பதனை இலங்கை மக்களிடையே போதித்து வந்த திருச்சபை குருமாரும் அனுபவ வாயிலாக உணர்ந்துள்ளனர்"

என்பன அவ்வரிகள். கிறித்துவ சமயத்தைப் பரப்புவதற்குக் கல்வியைப் பெரிதும் கையாண்ட கிறித்துவ மதப்பிரசங்கிகள் தமது சமயமே மெய்ச்சமயம் என இறுமாந்தனர். ஆகவே தான் நாவலர் தமிழ்ப்பள்ளி நிறுவி அதன்மூலம் சைவத்தைப் பரப்ப நினைத்தார். இது காலம் செய்த கோலம்.

பள்ளியைத் தாபித்த நாவலர் வகுப்புகளுக்கேற்ற நூற்களைத் தயாரித்து அவற்றை அச்சிடுவதற்காகவும் மற்றும் பல தமிழ் நூல்களைப் பதிப்பித்தற்காகவும் சென்னை சென்று ஒரு அச்சியந்திரத்தை வாங்கி வந்து அதை நல்லூரில் தாபித்தார்.

**மனக்கு மாமகிழ் வெய்திடல் கொடுவந்த கருவி**
**தனக்கு வித்தியாநுபாலன யந்திரசாலை**
**எனக்குறித்தொரு பெயரிட்டு தாபித்தங்கி யவ்விற்**
**பனக்குழம்புகழ் தருசில புத்தகம் பதிப்பார்**

என்று அச்செயலைச் சிவகாசி அருணாசலக் கவிராயர் பாடலாகப் பாடுகிறார்.

ஆங்கில மொழியிலுள்ள பாலபாடங்கள் போலத் தமிழ் மொழியிலும் பாலபாடங்கள் செய்தால் அவை சைவர்களுக்கும் மாணவர்களுக்கும் பயனுடையதாயிருக்கும் எனக்கருதி ஒளவையார் அருளிச் செய்த ஆத்திசூடி, கொன்றை வேந்தன், வாக்குண்டாம், நல்வழி ஆகிய நூற்களைத் தன் வித்தியாநுபாலன யந்திரசாலைவழிப் பதிப்பித்தார். புதிய புதிய பொருட்களைத் தன் உரையாகப் பதிப்பித்துள்ளார். நேர்பட ஒழுகு என்பதற்கு ஒழுக்கம் கோணாமல் நட என்றும் அது காணும் பொருள் புலப்படாதிருந்த அஃகம் சுருங்கேல் என்பன போன்ற வரிகளுக்கு வேண்டிய விளக்கங்கள் அளித்தும் பதவுரை இலக்கணக் குறிப்புகளுடனும் வெளியிட்டுள்ளார்.

**ஆத்திசேர் கொன்றை அழகுதமிழ் மூதுரை**
**பாத்திசேர் நல்வழி பண்புலகம் – பூத்த**
**நறுந்தொகை நன்னெறி ஒழுகும் குழந்தைக்**
**குறுந்தொகை என்றறிந்து கொள்**

என்பார் மூதறிஞர் வ. சுப. மாணிக்கனார். இத்தகு நூற்களைப் பதிப்பிக்கும் போது நாவலருக்கு வயது இருபத்தெட்டுதான் ஆகியிருந்தது.

இலங்கையிலே சிறுவர் படிப்பதற்காகப் பாலபோதம் என்னும் பெயரில் நூற்கள் இருந்தன. நாவலர் காலத்திற்கு முன் பழக்கத்திலிருந்த இந்நூற்கள் எழுத்துப்பிழை, சொற்பிழைகள் மலிந்தனவாயிருந்தன. நாவலர் காலத்திலே நான்கு பால பாடங்கள் வெளிவந்துள்ளன.

முதற் பாலபாடம் 1850இல் வெளியிடப் பட்டது. நெடுங் கணக்கு, சொற்கள், வாக்கியங்கள், நிரல்பட அமைக்கப் பட்டுள்ளன.

இரண்டாம் பாலபாடம் நீதி வாக்கியங்கள், கதைகள், காற்று, தேசம், வேளாண்மை போன்றவற்றை விளக்கி இராசி, திதி போன்றனவும் நித்திய கரும விதிகளை விளக்குவனவாயும் உள்ளன.

மூன்றாம் பாலபாடத்தின் முதற்பதிப்பு 1882இல் வந்தது. அதனை எழுதியவர் சிவப்பிரகாச பண்டிதர். பொன்னம்பல பிள்ளையால் எழுதப்பட்டது என்று கூறுவாருமுளர். இந்தியா, இலங்கை, செல்வம், வீடு, நித்திரை, தென்னை போன்ற சிறு சிறு பாடங்கள் உள்ளன.

நாவலர் எழுதிய மூன்றாம் பாலபாடம் இப்போது நான்காம் பாலபாடமாக வழக்கில் உள்ளது. வேத சிவாகமங் களிலும், இதிகாச புராணங்களிலும் நீதி நூற்களிலும் உள்ளவை களைத் திரட்டி உரைநடையில் எழுதி இறுதியில் ஔவையாரின் நல்வழி, சிவப்பிரகாசரின் நன்னெறி ஆகியவையும் அடங்கியது. இதன் முதற்பதிப்பு 1865இல் வந்தது. ஆன்மா, பெரியோரைப் பேணல், தருமம், வருணம், வீட்டுவேலை போன்ற கட்டுரைகள் கொண்டது.

மேலும் ஆறுமுக நாவலரது சைவ வினாவிடைகள் முதல் இரண்டாம் பகுதிகள் 1873இல் வெளியிடப்பட்டுள்ளன. முதற் பகுதி கடவுள் இயல், புண்ணிய பாவ இயல், விபூதி இயல்,

சிவமூல மந்திர இயல், நித்திய கரும இயல், சிவாலய தரிசன இயல், தமிழ் வேதஇயல் என்னும் பகுதிகளையும், இரண்டாம் பகுதி பதியியல், பாசஇயல், பசுஇயல், வேதாகமஇயல் முதலிய 16 இயல்களையும் தோத்திரப் பாடல்களையும் கொண்டது. இவற்றுடன் திருக்குறள், நைடதம், பாரதம், நமச்சிவாயமாலை, இலக்கணம், சூடாமணி நிகண்டு முதலியனவும் அங்க கணிதம், எண்சுவடி முதலியனவும் படிப்பிக்கப்பட்டன.

யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணையில் 1848இல் சைவப் பிரகாச வித்தியாசாலையைத் தாபிக்க நாவலர் தமிழ்நாட்டில் சிதம்பரத்தில் அதைவிடப் பெரிய அளவில் ஒரு வித்தியா சாலையையும் சைவமடத்தையும் நிறுவ ஆசைகொண்டு 1862ஆம் ஆண்டு வைகாசி மாதம் ஒரு விக்கியாபனம் வெளியிட்டார். "யாதானும் ஒரு சமயத்தை மெய்யென்று நம்புகிறவன் அந்தச் சமயத்தின் வழி ஒழுகும் ஒழுக்கம் இல்லாதபொழுது பயன் பெறான்" என்று தொடங்கி, கல்வியின் பயன் கிறித்துவ சமயிகள் பாடசாலைகளைத் தாபித்துத் தம் சமயத்தை வளர்க்கும் திறன், திருக்கோவையார், சிவதருமோத்திரம், தேவாரம் ஆகிய நூற்களை மேற்கோள்காட்டி, சிதம்பரத்திலே சில முயற்சிகள் செய்யக் கருதுகின்றேன் என்று கூறி, திருவீதியில் இடம் வாங்கல் முதலான பதினான்கு கருத்துக்களைக் கூறி விரிவானதோர் வேண்டுகோள் விடுத்தும் தமிழ்நாட்டில் போதிய பணம் சேராமையால் யாழ்ப்பாணத்தவர் கொடுத்த பொருளையும் கொண்டு 1864ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 28ஆம் நாள் யாழ்ப்பாண வித்தியாசாலை மாதிரியில் சிதம்பரத்திலும் ஒரு வித்தியாசாலையைத் தாபித்தார்.

இப்பாடசாலையில் 1865இல் 180 மாணவரும் 1866இல் 204 மாணவரும் 1868இல் 213 மாணவரும் பயின்றதாக இதன் ஆவேதனம் கூறுகின்றது. இப்பள்ளியின் ஆவேதனங்கள் பின்னர் வெளியிடப்பட்டவை என்பது ஐயமே. ஆறு வகுப்புகள் இருந்த இப்பள்ளியில் பாடங்கள் நடத்தப்பட்டதாகவும் அதன் பாடத் திட்டங்கள் கீழேயுள்ளபடியென்றும் 1865 ஆவேதனத்தில் நாவலர் குறிப்பிடுகின்றார்.

முதல் வகுப்பு - சூடாமணி நிகண்டு, திருக்குறள் உரை, திருச்செந்தில் நீரோட்டயமக அந்தாதி, மூன்றாம் பாலபாடம், பெரியபுராணம், நைடதம், பாரதம், அங்க கணிதம், சொல்ல எழுதல் - இரண்டாம் வகுப்பு - சூடாமணி, திருக்குறள், சிவாலய தரிசனவிதி, மூன்றாம் பால பாடம், எண்சுவடி, சொல்ல எழுதுதல்;

நான்காம் வகுப்பு, மூன்றாம் வகுப்புப் போலவே சூடாமணி பாலபாடம், எண்சுவடி - சொல்ல எழுதுதல்; ஐந்தாம் வகுப்பு - இரண்டாம் பாலபாடம், நமசிவாய மாலை, சொல்வாத முதல், இலக்கணம், ஆறாம் வகுப்பு - முதற் பிரிவு முதற்பால பாடம், இரண்டாம்பிரிவு இரண்டாம் பால பாடம்.

சதாசிவம்பிள்ளை, மட்டுவில் வேலுப்பிள்ளை முதலியோர் சிறப்புற நடத்திய இப்பள்ளி 1945இல் நடுநிலைப்பள்ளியாகவும், 1949இல் உயர்நிலைப்பள்ளியாகவும் தற்போது ஆறுமுகநாவலர் மேல்நிலைப்பள்ளி என்ற பெயரிலும் சிதம்பரம் மேலைச் சந்நிதித் தெருவில் சீரும் சிறப்புமாக இயங்கி வருகிறது. சைவப்பிரகாச வித்தியாசாலை அறக்கட்டளை அதன் நிர்வாகத்தை நடத்துகிறது. 1870இல் மீண்டும் ஒரு விக்கியாபனம் வெளியிட்டு 80,000 ரூபாய் பொருள் திரட்ட எண்ணி மிகப்பெரிய அளவில் நடத்த விரும்பினார். அது அவரது வாழ்நாளில் நடைபெறாது போயிற்று.

1872ஆம் ஆண்டில் யாழ்ப்பாணத்திலுள்ள வெஸ்லியன் மிஷன் ஆங்கிலப் பாடசாலையில் விபூதி பூசிக்கொண்டு கல்வி கற்கப்போகும் மாணவர்கள் வெளியே துரத்தப்பட்டனர். அவர்கள் நாவலரிடம் வந்து விபூதி பூசிச்சென்றதால் பள்ளியிலிருந்து வெளியேற்றப்பட்டோம்; விபூதி பூசாமல் போக நாங்கள் விரும்பவும் இல்லை என்றும் தாங்கள் எங்களுக்கிரங்கி ஒரு ஆங்கிலப் பள்ளியைத் தாபிக்க வேண்டுமெனவும் வேண்டுகோள் விடுத்தனர். நாவலரும் இரங்கி 1872ஆம் ஆண்டு தை மாதம் 22ஆம் நாள் வண்ணார் பண்ணை சைவாங்கில வித்தியாசாலை என்னும் பெயரில் ஒரு ஆங்கிலப் பாடசாலையை நிறுவி, கூகேஸ் என்னும் ஐரோப்பியரைத் தலைமையாசிரியராகவும் நியமித்தார். ஆறு வகுப்புகளும், ஆறு ஆசிரியர்களும் உள்ள பள்ளி அது. அங்கே படிப்போர் முதல் வகுப்பிற்குக் காலாண்டு 1/4 ரூபாய், இரண்டாம் வகுப்பிற்கு 1 ரூபாய், 3ஆம் வகுப்பிற்கு $1^1/_4$ ரூபாய், 4ஆம் வகுப்பிற்கு 2 ரூபாய், 5ஆம் வகுப்பிற்கு $5^1/_2$ ரூபாய், 6ஆம் வகுப்பிற்கு 6 ரூபாய் வீதம் கட்டணம் செலுத்திப் படிக்க வேண்டும் என்றும் ஏற்பாடு செய்தார். இப்பாடசாலையில் மிஷன் பள்ளி போலவே பாடத் திட்டங்கள் வகுக்கப்பட்டிருந்தன. பைபிளுக்குப் பதில் சைவ சமயம் படிப்பிக்கப்பட்டது. மற்றும் கணிதம், பூமிநூல், ஆங்கிலம் முதலிய எல்லாப் பாடங்களும் ஒன்றாகவே இருந்தன. அது நான்காண்டுகள் சிறப்பாக நடைபெற்றது. பின்னர் மாணவர் தரும் கட்டணம் குறைந்ததாலும்,

சமீபத்தில் வேறு பள்ளிகள் உள்ளன என்று கூறி அரசின் உதவி கிடைக்கப் பெறாமையாலும், சைவசமயிகள் உதவி கொஞ்சமும் கிடைக்காததாலும் அப்பள்ளியை நாவலர் மூடிவிட்டார்.

1872இல் கோப்பாயிலும் புலோலியிலும் இரு சைவப் பிரகாச வித்தியாசாலைகளைத் திறக்க உதவி செய்தார். கோப்பாய் வித்தியாசாலைக்கு நாவலர் வண்ணார்பண்ணைப் பாடசாலைப் பொருள் கொண்டு நடத்த வேண்டிய நிலை வந்தது.

இவ்வாறு பலவிடங்களிலும் பள்ளிகளை நிறுவித் தன் கல்வி மரபை நிலைநாட்டிய நாவலர் மேலும் பல வழிகளிலும் தன் கல்விக் கொள்கைகளை நிலைநாட்ட முயன்றார்.

> ''சைவ சமயத்தையும் தமிழையும் வளர்க்க சொற்பொழிவு செய்யும் முறையை அறிமுகம் செய்ததுடன் அவ்வாறு செய்ய வேறு பலரையும் பழக்கியமையும் தமிழ்க்கல்வி மரபில் நாவலர் புகுத்திய செழுமை மிக்கதொரு மாற்றமாகும்"

என "நாவலர் கல்வி மரபும் இன்றைய தேவையும்" என்னும் தலைப்பில் யாழ்ப்பாணப் பல்கலைக்கழக முதுநிலைப் பேராசிரியர் கலாநிதி இ. குமார வடிவேல் வண்ணை நாவலர் மகாவித்தியாலயம் 150ஆவது ஆண்டு நிறைவு விழா மலரில் குறிப்பிட்டுள்ளார்.

தமிழ் மரபுக்கல்வியின் ஒரு அங்கமாகவும் முதியோரது சமயக்கல்வியை வளர்ப்பதாகவும், பொது மக்கட்தொடர்பு சாதனமாகவும் விளங்கிய புராணப் படலமரபைப் பலப்படுத்தும் வகையில் அமைந்திருந்த இம்மாற்றம் சாதாரண மக்கள் பெரும்பான்மையினரான வாசிக்கத் தெரியாத மக்கள் மத்தியில் சமய, சமூகப் பொருளாதார அரசியல் அறிவையும் விழிப்புணர்வையும் ஏற்படுத்தி மதமாற்ற முயற்சிகளை மழுங்கச் செய்யும் முயற்சியுடன் அவர்கள் ஒழுக்க வாழ்வு வாழவும் கல்வி கற்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டவும் பெரிதும் உதவிற்று.

நாவலரின் சொற்பொழிவுகளால் மக்கள் மத்தியில் ஏற்பட்ட மாற்றங்களையும் விழிப்புணர்வையும் நீண்ட பட்டிய லிட்டுக் காட்டிய "ஆறுமுக நாவலர் சரித்திரம்" ஆசிரியர் த. கைலாசபிள்ளை அப்பட்டியலைப் பின்வரும் வாக்கியத்துடன் நிறைவு செய்துள்ளமை குறிப்பிடத்தக்கது. "கல்வியில் குறைவுடை

யோரும் கல்வியில்லாதவர்களுமாகிய இருதிறத்தாரும் கல்வியில் மேம்பட்ட செல்வம் பிறிதொன்றுமில்லை எனக் கண்டு கல்வி கற்கத் தொடங்கினார்கள்." சமயாச்சாரியார்கள் தலந்தோறும் சென்று பதிகங்கள் பாடி இறையருளையும் சைவசமயத்தையும் பரப்பினர். ஆனால் நாவலரோ தான் போன இடங்களிலெல்லாம் சொற்பொழிவுகள் செய்து சைவ சமயத்தையும் தமிழ்க் கல்வியையும் பரப்பினார்.

சைவப்பத்திரிகையொன்று நடத்தி மக்களது சமய அறிவை வளர்க்கும் தமது திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கத்தோடு "உதயபானு" என்னும் பெயரில் பத்திரிகை யொன்று வெளியிடும் தமது எண்ணத்தை விளம்பரம் ஒன்றில் வெளியிட்டாராயினும் நாவலரது அந்த நோக்கம் அவர் வாழ் நாளில் கைகூடவில்லை. இது நாவலரது கல்வி மரபின் பிறிதொரு அணுகுமுறையாகும். சைவக்குருமார்களையும், சைவப் பிரசாரர்களையும், சைவாசிரியர்களையும் பயிற்றுவிக்கும் திட்டம் நாவலர் கல்வி மரபின் இன்னொரு கூறாகும். சைவ சமயமும் தமிழும் நிலைத்துச் செழித்து மக்களை நல்வழிப்படுத்தும் ஒரு வாழ்க்கை நெறியாக விளங்க வேண்டுமானால் சைவப் பெருமக்களும், திருக்கோயில் அர்ச்சகரும், சிவாச்சாரியர்களும், குருமார்களும் தமிழில் சைவசாத்திர தோத்திரப் பொருளுணர்ச்சி பெறுதல் வேண்டும் என்பது நாவலரின் உறுதியான கருத்து.

சைவக் குருமார்கள் பூசைகள், கிரியைகள், விழாக்கள் நடத்துவதோடமையாது சமயப்பிரச்சார நடவடிக்கைகளிலும், வாழ்வின் அவலங்களில் சிக்கித்தவிக்கும் மக்களுக்கு ஆறுதல் கூறி அரவணைக்கும் செயற்பாடுகளிலும் ஈடுபடவேண்டியவர்கள் என்பதையும் நாவலர் நன்குணர்ந்திருந்தார். சைவ சாத்திரக் குருமார்கள் தோத்திரப் பொருளுணர்ச்சி பெற்றுச் சீர்திருந்தியவர் களால் உண்மைச் சமயிகளாகவும் சைவசித்தாந்த உணர்வறிவைப் பயிற்றுபவர்களையும் வாழவைப்பதற்குக் கல்வி ஒன்றே சிறந்த சாதனம் என்பதை நன்குணர்ந்திருந்த நாவலர் சைவப்பிரகாசர் களையும், குருமார்களையும், சைவாசிரியர்களையும் பயிற்று விக்கக்கூடிய பெரியதொரு பாடசாலையை உருவாக்க வேண்டியதின் தேவையை உணர்ந்தார்.

இது கிறித்தவர்கள் நடத்தும் இறையியற் கல்லூரிகளையும், ஆசிரியப் பயிற்சிக் கல்லூரிகளையும் ஒத்ததாக அமையவேண்டும் என்று திட்டமிட்டார். தான் தொடங்கிய சிதம்பரம் வித்தியா

சாலையிலேயே இதை நடத்திக் காட்டவேண்டும் என்று விரும்பி 1868, 1870 ஆண்டுகளில் துண்டுப்பிரசுரங்கள் வழி நாடு முதுவதும் வேண்டுகோள் விடுத்தும் ஊர் ஊராய்ச் சொற்பொழிவுகள் செய்தும் பிரச்சாரப்படுத்தினார்.

> "இக்கருத்தை நானே நடை முறைப்படுத்த வேண்டும் என்னும் கருத்து எனக்கு இல்லை. யாவர் குத்தினும் அரிசியானாற்போதும். இத்தருமம் நிறை வேறினாற் போதும். அன்று அவர் இட்ட திட்டத்தின் மதிப்பு 80,000 ரூபாய் (தற்போதைய பல கோடி ரூபாய்க்குச் சமமானது)"

> "என் இம்மைப் பயன்கள் எல்லாவற்றையும் இழந்தும் பலராலே பலவகை இடையூறுகளை அனுபவித்தும் வருத்தமுறும் உண்மையைத் திருவுளமிரங்கி என் கருத்தை யான் எடுத்த தேகம் விடுமுன் நிறைவேற்றியருளும் பொருட்டு இறைவன் திருவடி களைப் பணிந்து பிராத்திக்கிறேன்"

என்று முடிவடையும் ஆவேதனத்தின் இறுதிப்பகுதி நாவலரின் உள்ளக்கிடக்கையைப் படம்பிடித்துக் காட்டுவதுடன் படிப்போரையும் மெய்சிலிர்க்க வைக்கிறது. இப்பயிற்சி, நிறைவேறாத நாவலர் கல்வி மரபின் ஒரு முக்கிய அங்கம் என்பது வெளிப்படை.

சைவாகம மேம்பாட்டில் அக்கறை உள்ளவர்களை ஒன்று கூட்டிச் சைவப்பிரகாச சமாஜம் என்ற பெயரில் சைவ நிறுவன மொன்றை நாவலர் 1879ல் உருவாக்கினார். ஆனால் அதை நிலை பெறச்செய்ய அதிக நாட்கள் அவர் உயிரோடிருக்கவில்லை. சைவ சமயத்தை நிறுவனப்படுத்தி அதன் மூலம் சைவ சமூகத்தின், தமிழ் மக்களின் சமய, சமூக, கல்வி, பொருளாதார, அரசியல் நிலையை வலுப்படுத்துவதும் நாவலரின் குறிக்கோளாக இருந்தது எனக் கருதலாம்.

நாவலர் கல்வி மரபு சைவ சமய வளர்ச்சியை மட்டுமன்றிச் சமுதாய வளர்ச்சியையும் நோக்கமாகக் கொண்டது. நாவலர் கல்விப் பணியைப் பற்றி விமர்சிக்கும் சிலர் அவர் சைவ சமயத்தை வளர்க்கும் நோக்குடன் மட்டுமே கல்விப் பணியாற்றினார் என்ற கருத்தை முன் வைப்பதுண்டு. இது சரியான கருத்தல்ல. நாவலர் காலத்திருந்த சூழ்நிலைகளே நாவலர் சைவ சமயக் கல்வியை முதன்மைப்படுத்த வைத்தன. கிறித்தவ சமயத்தினர் தமது

சமயத்தைக் கல்வியை ஊடகமாகக் கொண்டு வளர்த்துவர, சைவர்களும், குருமார்களும் பெரும்பான்மையினரும் தமது சமயக்கருத்தை அறியாதவர்களாய் அறியாதவருக்குப் போதிக்காதவராய், இருந்த நிலைமையே நாவலரைச் சமயக் கல்விக்கு முதன்மை கொடுக்கும் கல்விக்கூடங்களை ஆரம்பிக்கத் தூண்டிற்று. மிசனரிமார்களால் யாழ்ப்பாணச் சமூகம் பெற்ற நன்மைகளை மதித்த நாவலர் அவர்கள் கல்வியை மத மாற்றத்திற்காகப் பயன்படுத்துவதைத்தான் எதிர்த்தார். நாவலர் காலத்திலே கிறிஸ்தவப் பள்ளிகளிலும் சமயக்கல்வியும், ஆங்கிலமும், இலத்தீனும், தர்க்கசாஸ்திரமும், தமிழும், வரலாறும், புவியியலும் தான் கற்பிக்கப்பட்டன என்பதையும் இக்காலத்தைப் போல் விஞ்ஞானக் கல்வி எங்குமே கற்பிக்கப்படவில்லை என்பதையும் நாம் கருத்திற்கொள்ள வேண்டும். நாவலரது வண்ணார் பண்ணை சைவவித்தியாசாலை கிறித்தவ மதப் போதனைக்குப் பதிலாகச் சைவசமயப் போதனையைச் செய்தது. ஆங்கிலம், வடமொழி, தமிழ் ஆகியவற்றிற்கு முதலிடம் வழங்கப் பட்டிருந்தன. நாவலர் பாடசாலையில் கணிதம், தர்க்கம், வரலாறு, புவியியல், வானியல் யாவும் தமிழில் கற்பிக்கப்பட்டன. எந்த மாணவனுக்கும் கல்வியூட்டுவதற்கு அவனுடைய தாய் மொழியே மிகச் சிறந்தது என்பதே கல்வி நிபுணர்களதும் உளநூல் வல்லுனர்களதும் முடிவு. பல கால அனுபவமும், பற்பல ஆய்வு களும் தான் இம்முடிவுக்குக் காரணம். எந்தவித ஆய்வுமின்றி நாவலர் நூற்றி ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரே இம்முடிவுக்கு வந்துவிட்டார். நாவலர் காலத்திலே இருந்த முக்கியமான யாழ்ப்பாணப் பள்ளிகளில் எல்லாம் போதனாமொழி ஆங்கில மாகவே இருந்தது. நாவலர் தொடங்கிய வண்ணார் பண்ணை சைவப்பிரகாச வித்தியாசாலையிலோ பூமிநூல், வைத்தியம், சோதிடம், வேளாண்மை, வணிகம், அரசநீதி, சிற்பம் யாவும் தமிழிலேயே முதன் முதலாகப் பயிற்றுவிக்கப்பட்டன என்பது அவரது சாதனை.

சைவ சமயிகள் தமது சமயத்தின் மகிமையை அறிந்து அதனைக் கைக்கொள்ளுதற்குரிய கல்வி போதிக்கப்படல் வேண்டும். கல்வி என்ற போர்வையில் வேற்று மதங்கள் சைவர் களிடையே திணிக்கப்படுவதை அனுமதிக்கக்கூடாது என்பதே நாவலர் பெருமானின் கல்விக் கொள்கை என்பதையும் நவீனத் தொழில்நுட்பங்கள், அணுகுமுறைகளை உள்வாங்கியும், ஆங்கிலம் போன்ற மொழியைக் கற்பித்தும் அதன் மூலம்

மக்களின் சமூக, பொருளாதார, அரசியல் தராதரத்தை உயர்த்த வேண்டுமென்ற கொள்கையுடைய முற்போக்காளராக நாவலர் விளங்கினார்.

"ஆடுவோமே பள்ளு பாடுவோமே" என்று பாடிய பாரதி ஒரு தீர்க்கதரிசி. இலங்கை சுதந்திரம் பெற்றது 1948இல். 1945இல் இலவசக் கல்வியைக் கன்னங்கரர் ஆரம்பித்து வைத்தபோது "விலை மதிக்க முடியாத முத்து" என வானளாவப் புகழ்ந்தனர். நாவலர் இத்திட்டத்தை ஆரம்பித்தது 1846இல். எவ்வித ஆரவாரமுமின்றித் தன் வீட்டுத் திண்ணையிலே இலவசக் கல்வியை நடத்தியவர் நாவலர். இலங்கைக் கல்வித்துறையிலேயே ஏற்படுத்தப்பட்ட மிகப்பெரிய திருப்பமான "தாய்மொழி மூலம் கல்வி" என்னும் திட்டம் தொடங்கியது 1946ல். 1957லே பள்ளி இறுதி, 1964லே இளங்கலைத் தேர்வு, பின்னர்ப் பல்கலைக் கழகங்களில் தாய்மொழிக்கல்வி நடப்பாக்கியது. நாவலர் அதனை நடைமுறைப்படுத்தியது 1848இல். தமிழகத்தில் கூட 1950க்குப் பின்னரே கல்லூரிகளில் தாய்மொழிக்கல்வி பயிற்றுமொழியானது. இலங்கையிலே சமயக்கல்வி கட்டாயப் பாடமாகியது 1955ல். நாவலர் செய்தது 1848ல். பாடநூற்களைத் தயாரிக்கச் சிறப்புக் குழுக்களை இலங்கை அண்மைத்தது மிக அண்மையில். நாவலர் அமைத்தது 1848ல். கல்வித் கொள்கையில் நூறு ஆண்டுக் காலமாக எங்கெல்லாமோ இருட்டிலே தப்பிய இலங்கை அரசு இன்று நாவலர் கல்வி மரபே சிறந்த மரபு என்று தலை மேல் வைத்துக் கொண்டாடுகிறது என்பதற்கு மேற்குறித்தவைகளே சான்று பகரும். இத்துறையிலே நாவலர் பெருமான் ஒரு தீர்க்கதரிசி என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

◆

# நாவலரின் சுவடி நூல்கள் பதிப்பு வரலாறு

தமிழில் அச்சுக் கலையின் தோற்றத்திற்குப் போர்த்துக்கீசியர்களின் வருகையே முக்கியக் காரணமாக அமைந்தது. 1495ஆம் ஆண்டு வெனிஸ் நகரில் ஆண்டஸ்மானியூடல் ரோமன் என்பார் ஓர் அச்சகத்தை நிறுவினார். அதனை அடுத்து மூன்றாண்டுகளுக்குப் பின் 1498ஆம் ஆண்டு வாஸ்கோடகாமா இந்தியாவிற்குக் கடல் வழியாக வந்தார். அவரைத் தொடர்ந்து இந்தியா வந்த போர்த்துக்கீசியர்கள் இந்தியர்களைக் கிறித்தவத்திற்கு மதமாற்றம் செய்வதில் ஈடுபட்டனர். இதற்காக இந்தியாவில் உள்ளவர்களுக்கு இந்திய மொழிகளில் ஏசுமதக் கேள்வி-பதிலும், பிரார்த்தனை நூல்களும் அச்சிட்டுக் கொடுக்க வேண்டியிருந்தது. முதலில் தமிழ் நூல்களே அச்சிடப்பெற்றன.

'லூசோ தமிழ்ச் சமய வினாவிடை' என்ற நூல் மூன்றாம் ஜான் மன்னரின் உத்தரவுப்படி தென்னிந்தியாவில் இருந்த வின்சண்டு நாசரத்து, ஜியாஜ்கார்வில்லோ, தாமஸ் தா-கிரஸ் என்ற மூன்று கிறிஸ்தவர்களால் போர்த்துக்கீசியத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டு, கி.பி.1554இல் அச்சடிக்கப்பட்டது. இதுவே இந்திய மொழியில் மேல்நாட்டில் வெளிவந்த முதல் நூலாகும்.

1556ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 6ஆம் நாள் கோவாவிலிருந்து வந்த போர்த்துக்கீசியக் கப்பல் அச்சுப் பொறியையும் அச்சடிப்பாளர்களையும் இந்தியாவிற்கு முதன் முதலாகக் கொண்டு வந்தது. கொச்சிப் பகுதியிலுள்ள அம்பலக் காடு என்னும் இடத்தில் இருந்த ஏசு சபையின் அச்சகத்தில்தான் மரத்தில் செதுக்கப்பட்ட தமிழ் எழுத்துக்களைக் கொண்டு முதலில் தமிழ் நூல் வெளியிடப்பட்டது. 1577இல் கொச்சியில் தமிழ் எழுத்துக்கள் முதன்முதலில் மரத்தில் செதுக்கப்பட்டன. 1578ஆம் ஆண்டு திருநெல்வேலிப் பகுதியைச் சார்ந்த புன்னைக்காயல் என்னும் இடத்தில் ஜோ-டி-வாரியா என்பவர் மர அச்சுக்களைச் செதுக்கிச் சில தமிழ் நூல்களைப் பதிப்பித்தார்.

இவரே தமிழ் மொழிக்கு முதன்முதலாக அச்சுருவம் அமைத்துக் கொடுத்துள்ளார். இந்தியாவில் முதன்முதலில் அச்சான புத்தகம் 1578ஆம் ஆண்டு வெளிவந்த "Doctrina Christan" என்ற தமிழ் நூலாகும்.

சீகன்பால்கு என்னும் பாதிரியாரின் வேண்டுகோளுக் கிணங்க ஜெர்மனியிலிருந்து ஓர் அச்சு எந்திரமும் சில தமிழ் எழுத்துக்களும் 1713ஆம் ஆண்டு தரங்கம்பாடிக்கு வந்து சேர்ந்தன. இதுவே தமிழ்நாட்டில் தோன்றிய முதல் அச்சுக்கூடமாகும். இவ்வச்சகம் தொடங்கி 99 ஆண்டுகள் கழிந்து சுவடிகளில் முடங்கிக் கிடந்த பழந்தமிழ் இலக்கியங்கள் அச்சுத் தேரேறி உலாவரத் தொடங்கின. அதன் விளைவாக 1812ஆம் ஆண்டு திருக்குறள் மூலபாடம் மலையப்பபிள்ளை குமாரன் ஞானப் பிரகாசனால் அச்சில் பதிப்பிக்கப்பட்டது. இதுவே முதல் சுவடிப் பதிப்பாகும். இப்பதிப்பைத் தொடர்ந்து பலர் சுவடிப் பதிப்பு களை வெளியிட்டுள்ளனர். ஆனால் சுவடிப் பதிப்புத் துறையில் ஆறுமுக நாவலரின் பதிப்புகள் ஏற்படுத்திய தாக்கத்தைப் பிறரின் பதிப்புகள் ஏற்படுத்தவில்லை.

நாவலருக்கு முன் பதிப்பித்தவர்கள் ஏதேனும் ஒரு நூலையோ அல்லது சில நூல்களையோ பதிப்பித்துத்தான் தம் பதிப்புப் பணிஸ்ய நிறுத்திக் கொண்டனர். ஆனால் நாவலர் தன் வாழ்நாள் முழுவதையும் பதிப்புப் பணிக்காகவே செலவிட்டுள்ளார்.

**நாவலரின் பதிப்புக் கொள்கைகள்**

1. எந்த நூலையும் பிழையில்லாத செம்பதிப்பாக வெளியிட வேண்டும் என்பது நாவலரின் முதன்மையான பதிப்புக் கொள்கையாகும்.
2. மூலபாடங்களை எக்காரணங் கொண்டும் திருத்துவதில்லை. உள்ளது உள்ளவாறே பதிப்பித்தல்.
3. பாடபேதங்கள் சுட்டுவதில்லை.
4. பாடல்களைச் சந்தி பிரிக்காமல் சேர்த்தே அச்சிடுதல்.
5. பாடல்களின் இடையில் எவ்விதக் குறியீடும் இடம்பெறுதல் கூடாது.
6. பிரதிகளின் ஆதாரமில்லாமல் ஒன்றையும் தாமாகத் திருத்தக் கூடாது.

7. தமக்கு முன்னிருந்த ஆசிரியர்களது துணை இல்லாமல் தாமாகச் சித்தாந்த நூல்களிலாவது, இலக்கண நூல்களிலாவது எதையும் சேர்த்தெழுதாமை.

8. தாம் பதிப்பிக்கக் கருதிய பல நூல்களையும் பல பிரதி களோடு ஒப்பு நோக்கிய பிறகே பதிப்பித்து வெளியிடுதல்.

போன்றவற்றை நாவலர் தம் பதிப்புக் கொள்கைகளாகக் கொண்டிருந்தார்.

**பதிப்புத் தன்மைகள்**

1. நாவலர் மொத்தம் 40 நூல்களைச் சுவடியிலிருந்து பதிப்பித்துள்ளார் என மேலே குறிப்பிடப்பட்டது. இவரின் பதிப்புக்களை 1. மூலப்பதிப்புகள், 2. மூலமும் உரையும் கொண்ட பதிப்புகள், 3. புத்துரைப் பதிப்புகள் என்று மூன்று வகைகளில் அடக்கலாம்.

2. நாவலர் தாம் பதிப்பித்த பல நூல்களை வெளியிடும் போது அவற்றிற்கான பல பிரதிகளை ஒப்புநோக்கிய பிறகே வெளியிடுவதை ஒரு கொள்கையாகக் கொண்டிருந்தார். ஆனால் ஒப்பு நோக்குதற்குப் பயன்பட்ட பிரதிகளைப் பற்றிய விவரங்கள் அடங்கிய பட்டியல் இவரது பதிப்பு களில் காணப்படவில்லை. எனினும் நூலின் முகப்புப் பக்கத்தில் பல பிரதிகளை ஒப்புநோக்கிய செய்தி குறிப்பிடப் பட்டுள்ளது.

3. நாவலர் பதிப்பித்த நூல்களில் பெரும்பான்மையும் "பதிப்புரை" எதுவும் நாவலரால் எழுதப்படவில்லை.

4. நாவலர் தமது பதிப்புகளில் பொருளடக்கம் தருதல், பாடல் குறிப்பு அகராதி தருதல், பிழை திருத்தம் காட்டுதல் போன்ற பல பணிகளைச் செய்துள்ளார். மேலும் இவரது ஒவ்வொரு பதிப்பிலும் அந்நூலின் முகப்புப் பக்கத்தில் அந்நூல் பற்றிய செய்தி, நூலுக்கு உரை இருப்பின் இன்னார் உரை என்ற குறிப்பு, நூலை வெளியிடத் துணை நின்றவர் பற்றிய செய்தி, நூலினைப் பதிப்பித்த தன்மை, நூல் அச்சிட்ட இடம், பதிப்பகம், பதிப்பித்த ஆண்டு போன்ற விவரங்களைக் காண முடிகிறது.

5. நாவலர் தாம் பதிப்பித்த எல்லா நூல்களிலும் அவ்வந் நூல்களில் அடங்கியுள்ள உள்ளடக்கங்களைச் "சூசிபத்திரம்"

என்ற தலைப்பில் பதிப்பித்துள்ளார். "சூசி" என்ற சொல்லுக்கு உள்ளுறை என்று பொருள் கொள்ளுகின்றார்.

6. நாவலரின் பதிப்புகளில் பல்வேறு வகையான இணைப்புகள் இடம்பெற்றுள்ளன. அவற்றை முன்னிணைப்புகள், பின்னிணைப்புகள் என்று இரண்டு வகையாகப் பகுக்கலாம். முன்னிணைப்புகளாக முகவுரை, வரலாறு, சரித்திரச் சுருக்கம், சிறப்புப்பாயிரம், சிறப்புப் பாக்கள், நூலாசிரியர் வரலாறு, நூல் பற்றிய சிறப்புச் செய்திகள், சருக்கவகராதி, பதிகவகராதி போன்றவையும், பின்னிணைப்புகளாகச் சூத்திர முதற்குறிப்பகராதி, பாட்டு முதற்குறிப்பகராதி, பாவியலதிகார வகராதி, புராணவகராதி, பிழை திருத்தம், புத்தகப் பிரகடனப் பத்திரம் போன்றனவும் இடம் பெற்றுள்ளன. உ.வே.சா.வின் பதிப்புப் பணிக்கு ஒரு வழிகாட்டுதலாக இவை இருந்திருக்கும்.

7. நாவலர் தம் பதிப்பில் நிறுத்தக்குறியீடுகளை இடமறிந்து முதன்முதலில் பயன்படுத்தியுள்ளார்.

8. நன்னூல் காண்டிகை உரைப்பதிப்பில் ஒவ்வொரு நூற்பாவுக்கும் தலைப்பு கொடுக்கப்பட்டுள்ளது. தலைப்பு ஒரு சொல்லில் அமையாமல் ஒரு தொடராக அமைந் துள்ளது.

9. நாவலரின் திருக்குறள் பதிப்பிற்குத் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, தியாகராசச் செட்டியார், தெய்வநாயகம் பிள்ளை, சுப்புராயச் செட்டியார் போன்றோர் சிறப்புப் பாயிரம் வழங்கியுள்ளனர். அச்சிறப்புப் பாயிரத்தில் நூல், நூலாசிரியர், பதிப்பாசிரியர் போன்றோர் பெருமைகள் பேசப்பட்டுள்ளன.

10. நாவலர் பதிப்பித்த பெரும்பான்மையான நூல்களில் நூலாசிரியர் வரலாறு இடம்பெறவில்லை. ஆனால் இவர் பதிப்பித்த 'இலக்கணக் கொத்தில்' அந்நூலை இயற்றிய சுவாமிநாத தேசிகர் வரலாறு பற்றிய செய்திகளை எழுதியுள்ளார்.

11. நாவலர் தமது பதிப்புகள் சிலவற்றில் தாம் பதிப்பித்த நூல்கள் பற்றியும் பதிப்பித்துக் கொண்டிருக்கும் நூல்கள் பற்றியும் 'பிரகடனப் பத்திரிகை' என்ற தலைப்பில் குறிப்பிட்டுள்ளார்.

**கண்டனங்கள்**

1. 1856ஆம் ஆண்டு ஆறுமுக நாவலர் சூடாமணி நிகண்டை முதலில் பதிப்பித்தபோது முன்பிருந்தபடியே பதிப்பித்தார். அதனைப் பின்னர் அச்சிட்டபோது வேளாளரைச் சூத்திரர் என்று மாற்றி, வைசியருக்குரிய இரண்டு பாட்டினையும் திருத்தி 'மருவிய ஏழு' என்பதற்கு 'மருவிய ஆறு' என அமைத்ததால் பெரும் கிளர்ச்சி ஏற்பட்டது.

2. 1884ஆம் ஆண்டு பெரிய புராணத்தைப் பதிப்பித்து வெளியிட்டபோது, தமது யாழ்ப்பாண மரபு வழக்கை யொட்டிச் சில பாடல்களை இயற்றிச் சேர்த்திருப்பதாகக் கடலூர் கனகசபைப்பிள்ளை தமது நூலில் எடுத்துக் காட்டிக் கண்டித்துள்ளார்.

3. ஆறுமுக நாவலர் கையொப்பமிட்டுத் திருத்திய விவிலிய மொழிபெயர்ப்பைத் தமிழ் கற்றவர் வியந்து போற்றினர். ஆனால், தஞ்சாவூர், திருநெல்வேலியில் உள்ள கிறித்தவர்கள் அது 'யாழ்ப்பாணத் தமிழாக இருக்கிறது" என்று அதனை ஏற்க மறுத்துவிட்டனர். நாவலர் எளிய பழகு வடசொற் களைத் தேர்ந்தெடுக்காமல் கடின வடசொற்களைத் தேர்ந் தெடுத்துக் கொண்டது அவர் செய்த தவறு என்று "கிறிஸ்தவத் தமிழ் வேதாகமத்தின் வரலாறு" என்ற நூலில் திரு. சபாபதி குலேந்திரன் குறிப்பிட்டுள்ளார்.

**தொகுப்புரை**

1. ஆறுமுக நாவலர் பதிப்பித்த ஓலைச் சுவடி நூல்கள் 8 வகையான பொருண்மைகளில் அமைந்துள்ளன. அதில் எண்ணிக்கையில் சமயம் தொடர்பான பதிப்புகளும் (14), அதனைத் தொடர்ந்து இலக்கணம் (6), நீதி (5), சிற்றிலக்கியம் (5), புராணம் (5), திருமுறை (3), நிகண்டு (1), ஆற்றுப்படை (1) போன்ற பதிப்புகளும் இடம்பெற்றுள்ளன.

2. நாவலரவர்களின் பதிப்புகளில் சில திருக்கயிலாய பரம் பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள், சிதம்பரம் சைவப் பிரகாச வித்தியா சாலைத் தரும பரிபாலகர் (அறங்காவலர்) விசுவநாதபிள்ளை, இராமநாதபுர சமத்தானம் பொன்னு சாமித் தேவர் போன்றவர்களின் தூண்டுதலாலும் உதவியாலும் வெளி வந்துள்ளன.

3. நூல்களைப் பதிப்பிப்பதற்கென்று 1850ஆம் ஆண்டு சென்னை நகரில் தங்கசாலைத் தெருவில் தனக்கெனச் சொந்தமான ஓர் அச்சியந்திர சாலையை நிறுவினார். "வித்தியானுபாலன அச்சியந்திர சாலை" என்ற பெயரால் நிறுவப்பட்ட அந்த அச்சகம் இன்றும் இயங்கி வருகிறது.

4. பழங்கால நூற்பதிப்புகளில் நூலின் முகப்புப் பக்கம் மிகவும் முக்கியமானதாக அமைந்திருக்கும். நூல் பற்றிய பல செய்திகளை அதில் அறிந்து கொள்ளலாம். அம்மரபை ஒட்டியே நாவலர் பதிப்புகளின் முகப்புப் பக்கங்களும் அமைந்துள்ளன.

5. நாவலர் பல ஆண்டுகள் மாணவர்களுக்குத் தமிழ் இலக்கண, இலக்கியங்களைக் கற்பிக்கும் பணியில் ஈடுபட்டிருந்ததாலும், இலக்கண நூல்களைச் செம்மையுற ஆராய்ந்திருந்ததாலும் மாணாக்கர்கள் உள்ளங்களை அறிந்து ஏற்கக்கூடிய அளவில் நன்னூல் காண்டிகையுரையை எழுதியுள்ளார். நன்னூலுக்குப் பல உரைகள் இருப்பினும் இவரின் உரையே மாணவர் உள்ளங்கொள்ளத்தக்கதாய், கற்பதற்கு ஏற்றதாய் அமைந் துள்ளது.

6. நன்னூல் காண்டிகை தவிர வேறு இலக்கண நூல்களுக்கு நாவலர் உரை எழுதவில்லை. இலக்கியங்களுக்கே உரை எழுதியுள்ளார். அதிலும் சைவ சமயம் தொடர்பான இலக்கியங்களுக்கே அதிகமாக உரை எழுதியுள்ளார்.

7. நாவலர் சைவசித்தாந்த சாத்திரங்களின் காவலராக இருந்த போதிலும் சமய நூல்கள் மட்டுமல்லாமல் இலக்கண, இலக்கிய, நிகண்டு, புராணம் தொடர்பான நூல்களையும் பதிப்பித்துள்ளார்.

8. நாவலர் பதிப்புகள் பலவற்றில் அவ்வந்நூல்களின் சிறப்புக் குறித்தும் நூலின் பதிப்பாசிரியரான நாவலரைப் பற்றியும், தமிழறிஞர் பலர் பாடிய சிறப்புப் பாயிரச் செய்யுள்கள் இடம் பெற்றுள்ளன.

9. நாவலர் பதிப்புகளில் அந்த நூல் பதிப்பிப்பதற்காகச் சுவடிகளைத் தேடிய செய்தி, சுவடி தந்துதவியவர்கள் பற்றிய செய்திகள் இடம்பெறவில்லை.

10. தமிழ் இலக்கியங்களில் திருக்குறள் பரிமேலழகர் உரையை முதன்முதலில் பதிப்பித்தவர் நாவலரே. இப்பதிப்பின்

செம்மையைக் கண்ட உ.வே. சாமிநாதையர் திருக்குறளைப் பதிப்பிக்கவில்லை.

11. நாவலர் 19ஆம் நூற்றாண்டில் ஏராளமான உரைநடை நூல்களை எழுதிப் பலராலும் "வசன நடை கைவந்த வல்லாளர்" எனப் பாராட்டப்பெற்றார். சைவ சமயத்தை இகழ்ந்தவர்களை எதிர்த்துக் கண்டன நூல்களை எழுதிச் சைவத்தை வளர்த்தார்.

12. ஆசிரியராக, பதிப்பாசிரியராக, உரையாசிரியராக, சொற்பொழிவாளராக, நூலாசிரியராக, ஆராய்ச்சியாளராக விளங்கிய நாவலர் தம் வாழ்நாள் முழுவதையும் தமிழுக்காக அர்ப்பணித்துத் திருமணம் செய்து கொள்ளாமல் கட்டைப் பிரம்மச்சாரியாக இருந்தார்.

நாவலர் சைவத்தையும் தமிழையும் இரு கண்களாகப் போற்றிப் பாதுகாத்து வந்தார். ஆனால் அவர் நூல்களைப் பதிப்பிப்பதற்குப் பட்ட துன்பங்களை அல்லது அனுபவங்களை நம்மால் முழுமையாக அறிய இயலவில்லை. உ.வே. சாமி நாதையரைப் போன்று தன் வரலாற்றைத் தானே நாவலர் எழுதியிருப்பின் பதிப்புப் பணியின்போது ஏற்பட்ட கண்டனங் களையும் அனுபவங்களையும் நாம் அறிவதற்குத் துணையாக இருந்திருக்கும்.

**நாவலரின் சுவடிப் பதிப்புகள் (கிடைக்கக் கூடியவை)**

| எண் | நூற்பெயர் | பதிப்பு ஆண்டு |
|---|---|---|
| 1. | திருக்குறள் | 1861 |
| 2. | நன்னூற் காண்டிகையுரை | 1880 |
| 3. | பிரயோக விவேகம் | 1882 |
| 4. | நல்வழி | |
| 5. | உவமான சங்கிரகம் - V | 1926 |
| 6. | திருமுருகாற்றுப்படை | 1857 |
| 7. | திருவகுப்பு | 1867 |
| 8. | நால்வர் நான்மணி மாலை | 1866 |
| 9. | திருச்செந்தினீரோட்டகயமகவந்தாதி | 1851 |
| 10. | கந்தரலங்காரம் - 2 | 1867 |
| 11. | திருப்பாடற்றிரட்டு | 1866 |
| 12. | நன்னெறி | 1861 |
| 13. | கோயிற் புராணம் | 1868 |

| | | |
|---|---|---|
| 14. | சேதுபுராணம் | 1866 |
| 15. | சிவக்ஷேத்திர விளக்கம் | 1901 |
| 16. | கொலை மறுத்தல் | 1915 |
| 17. | சிவஞான போதம் | 1885 |
| 18. | ஆத்திசூடி | 1893 |
| 19. | மூதுரை | 1914 |
| 20. | தேவாரத் திரட்டு | |
| 21. | பதினொராந் திருமுறை - 3 | 1862 |
| 22. | சௌந்தர்யலகரி | 1876 |
| 23. | சூடாமணி நிகண்டு | 1867 |
| 24. | திருக்கோவையார் | 1860 |
| 25. | தருக்க சங்கிரகம் | 1861 |
| 26. | சிதம்பர மும்மணிக்கோவை | 1867 |
| 27. | பெரியபுராணம் | 1884 |
| 28. | கந்தபுராணம் -2 | 1883 |
| 29. | தொல்காப்பியச் சூத்திர விருத்தி - 6 | 1956 |
| 30. | திருப்புகழ் | 1885 |
| 31. | புட்பவிதி - 3 | 1867 |
| 32. | திருவாசகம் - 6 | 1894 |
| 33. | திருவிளையாடற்புராணம் - 2 | 1869 |
| 34. | உபநிடதம் - 2 | 1873 |
| 35. | சைவசமயநெறி | 1868 |
| 36. | இலக்கணக்கொத்து - 2 | 1891 |
| 37. | நன்னூல் விருத்தியுரை - 2 | 1854 |
| 38. | மருதூரந்தாதி - 3 | 1895 |
| 39. | தொல்-சொல் | 1868 |
| 40. | விநாயகர் கவசம் - 2 | 1868 |

உ

கணபதி துணை.

# சூடாமணி நிகண்டு,

## மூலமுமுரையும்.



இவை

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரவர்களால்

பரிசோதித்து,

மேற்படியூர்

சதாசிவப்பிள்ளையால்

சென்னபட்டணம்:

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.

ஆறும் பதிப்பு.

மன்மதவரு சித்திரைமீ.

இதன்விலை ரூபா - க.

பரமபதி துணை.

# நன்னூற் காண்டிகையுரை.

நல்லூர்

## ஆறுமுகநாவலர்

திருத்தியும் விளக்கியுங் கூட்டியும்

புதுக்கியது.

இது

மேற்படியூர்

சதாசிவப்பிள்ளையால்

சென்னபட்டணம்:

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

விக்கிரமஞு சித்திரைமீ.

இதன் விலை ரூபா - உ.

உ

கணபதி துணை.

திருவாலவாயுடையார் திருமுகப்பாசுரம் முதலிய

பிரபந்தங்கள் அடங்கிய

# பதினோராந் திருமுறை.

---

இது

புத்தூர் இராமநாதச்செட்டியார் குமாரர்

வேங்கடாசலச் செட்டியார்

கேட்டுக்கொண்டபடி

நல்லூர்

## ஆறுமுகநாவலரவர்கள்

பலபிரதிரூபங்களைக்கொண்டு ஒருவாறாராய்ந்து,

சிதம்பரசைவப்பிரகாசவித்தியாசாலைத் தருமபரிபாலகர்

விசுவநாதபிள்ளையால்,

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

மூன்றாம் பதிப்பு.

துந்துபி௵ ஆடிமீ.

உ கணபதி துணை.

# திருச்செந்திநிரோட்டக

# யமகவந்தாதி.

துறைமங்கலம்

# சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்தது.



இஃது

யாழ்ப்பாணத்திற்

சைவப்பிரகாசவித்தியாசாலைக்கதிபதியாகிய

நல்லூர்

# ஆறுமுகநாவலரால்

செய்யப்பட்டவுரையுடன்

தமது வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.



சாதாரண ஞூ பங்குனி மீ

இதன்விலை - அணா - ரு.

உ

கணபதி துணை.

தெய்வப்புலமைத்

# திருவள்ளுவநாயனார்

அருளிச்செய்த

தமிழ்வேதமாகிய

# திருக்குறண்மூலமும்,

பரிமேலழகருரையும்.

இவை

இராமநாதபுரசமஸ்தானம்

ம. ா. ா. ஸ்ரீ

## பொன்னுச்சாமித்தேவரவர்கள்

வேண்டுகோளின்படி,

யாழ்ப்பாணத்து நல்லூர்

## ஆறுமுகநாவலரால்

பலபிரதிரூபங்களைக்கொண்டு

பரிசோதித்து,

சென்னபட்டணம்

வாணிநிகேதனவச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

துன்மதி௵ வைகாசி௴.

உ

கணபதி துணை.

# திருமுருகாற்றுப்படை.

மதுரைக் கடைச் சங்கத்து மகா வித்துவானாகிய

## நக்கீரதேவர்

அருளிச்செய்தது.

பெரும்பான்மையும் நச்சினார்க்கினியார்

உரைக்கருத்தைத் தழுவி,

யாழ்ப்பாணத்து நல்லூர்

## ஆறுமுகநாவலரவர்கள்

செய்த உரையுடன்

சிதம்பரசைவப்பிரகாசவித்தியாசாலைத் தருமபரிபாலகர்

பொன்னம்பலபிள்ளையால்

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

பதினோராம் பதிப்பு.

பிங்கள ௵ மார்கழி மீ.

உ

கணபதி துணை.

பட்டணத்துப்பிள்ளையார்

அருளிச்செய்த

# திருப்பாடற்றிரட்டு.

---

இது

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரால்

சென்னபட்டணம்:

கலாரத்நாகரம்

என்னும்

அச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டது.

---

அக்ஷய௵ கார்த்திகைமீ.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# பெரியபுராணம்

என்று வழங்குகிற

# திருத்தொண்டர்புராணம்.

---

சேக்கிழார்நாயனார்

அருளிச்செய்தது.

---

இஃது

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரவர்களால்

காரைக்காலம்மையார் புராணம்வரையில் பரிசோதித்து,

ஒவ்வொருபுராணத்துக்கும் இறுதியில்

அவர்களால் எழுதப்பட்ட சூசனத்தோடு

மேற்படியூர்

சதாசிவப்பிள்ளையால்

சென்னபட்டணம்:

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை ரூபா - உ.



1884.

# ஆறுமுக நாவலர் பதிப்புகள்

பழந்தமிழ் இலக்கிய வெளியீடுகளுக்குக் கால்கொண்டவர்; உரைநடை நூலாசிரியர்களில் தலைசிறந்தவர்; வசனநடை கைவந்த வல்லாளர்; நூலாசிரியராகவும், உரையாசிரியராகவும், சமயத் தலைவராகவும் விளங்கியவர்; யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் என்று பல்வேறு வகையான பாராட்டுதல் களைப் பெற்றவர். அவருடைய பணிகளில் முதலிடம் வைத்து எண்ணத் தக்கது பதிப்புப் பணியே ஆகும். நாவலர்தம் பதிப்புகள் அனைத்தையும் வைத்துக் கொண்டு ஆராயின் ஆய்வு விரியும் என்பதால் ஒருசில பதிப்புகளை மட்டும் ஆதாரமாகக் கொண்டு இக்கட்டுரை அமைகிறது.

### பதிப்புகள்

இவர்தம் பதிப்புகளை இரண்டு வகைகளாகப் பகுக்கலாம். அவை, அவரே இயற்றிப் பதிப்பித்த நூல்கள், சுவடிப் பதிப்புகள் ஆகும்.

## I. இயற்றிப் பதிப்பித்தவை

நாவலர் பெருமான் அவர்கள் தேவைக்கேற்பப் பல நூல்களைத் தாமே இயற்றிப் பதிப்பித்திருக்கின்றார். இந்நிலையில், இவர் இயற்றிப் பதிப்பித்த நூல்களை நான்கு வகைகளாகப் பாகுபடுத்தலாம். 1. சைவ சமய நூல்கள், 2. கிறித்துவ மதக் கண்டன நூல்கள், 3. வசன நூல்கள், 4. பாட நூல்கள் ஆகும்.

### 1. சைவ சமய நூல்கள்

மக்களிடையே சைவ சமயக் கருத்துக்கள் எளிதாகச் சென்றடையும் வண்ணம் பல நூல்களை நாவலர் பெருமான் இயற்றியிருக்கின்றார். இந்நூல்கள் சைவ சமயக் கருத்துகளை நிலை நாட்டும் தன்மைத்தாய் விளங்குகின்றன. சைவ சமயக் கருத்துகளை எளிமையாக்கிப் பிற சமயத்தினரும் சைவத்தை

எளிமையாக உணரும் வண்ணம் சைவ சமயத்தின் பிழிவாக, **'சைவ சமய சாரம்'** என்ற நூலையும், சைவசமய நூல்களில் காணப்படக் கூடிய சில முக்கியமான விதிகளை மக்கள் எளிதில் உணரும் வண்ணம் **சிவாலய தரிசன விதி, நித்திய கருமவிதி, சிரார்த்த விதி, தர்ப்பண விதி** ஆகியவற்றையும் குருவிற்கும் மாணவர்க்கும் உள்ள உறவு நிலைகளைப் பற்றியும் அதற்குற்ற நியதிகளைப் பற்றியும் **குரு சிஷ்யக்கிரமம்** எனும் நூலையும் இயற்றிப் பதிப்பித்திருக்கின்றார்.

**2. கிறித்துவமதக் கண்டன நூல்கள்**

இந்தியாவில் கிறித்துவர்கள் தங்கள் மதத்தைத் தீவிரமாகப் பரப்பிக் கொண்டிருந்த காலத்தில் வாழ்ந்து, சைவ சமயக் கொள்கையில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தவர் ஆறுமுக நாவலர். கிறித்துவர்கள் கிறித்துவம் பரப்புவதற்கு இந்தியாவி லிருக்கும் இந்திய மதங்களான சைவம், வைணவம் ஆகியவற்றை இகழ்ந்து, கிறித்துவத்தின் பெருமையை எளிய மக்களும் உணரும் பொருட்டு எடுத்துக்கூறத் தலைப்பட்டனர். கிறித்துவர்களின் சைவ சமய இகழ்ச்சிகளுக்குப் பதில் தரும் விதமாக நாவலர் பெருமான் சைவ சமயத்தின் பெருமையை உணரும் பொருட்டுக் கிறித்துவமதக் கண்டன நூல்கள் பலவற்றை இயற்றிப் பதிப்பித்திருக்கின்றார். இந்நிலையில் **சைவ தூஷண பரிகாரம், மித்தியாவாத நிரசனம், சுப்பிர போதம், வச்சிரதண்டம்** ஆகிய நூல்களை இயற்றிப் பதிப்பித்திருக்கின்றார்.

**3. வசன நூல்கள்**

இலக்கியங்கள் பெரும்பாலும் செய்யுள் வடிவமாகவே இருப்பதால் அவற்றைப் பெரும்பாலோர் படிப்பதேயில்லை. தமிழறிஞர் ஒருசிலரிடம் மட்டும் இருந்த தமிழிலக்கியத்தை - குறிப்பாக, சைவ இலக்கியத்தை மக்களிடையே கொண்டு சென்ற பெருமை ஆறுமுக நாவலருக்கேயுரியது. நம்முடைய சைவ இலக்கியங்கள் பலவற்றை எளிய தமிழில் வசனமாக ஆக்கித்தந்தவர் நாவலர் பெருமான். இவ்வகையில் **பெரியபுராண வசனம், திருவிளையாடற்புராண வசனம், கந்தபுராண வசனம், பெரியபுராண சூசனம்** ஆகிய நூல்களை உருவாக்கித் தந்திருக்கின்றார். இதனால் சைவ இலக்கியங்களின் கருப் பொருளை அனைவரும் நுகர்ந்தனர். சைவப் புராணங்களை வசனமாக்கியதன் மூலம் மக்கள் சைவ சமயத்தை எளிதில் உணர முற்பட்டனர். இதுவே, அக்காலக் கிறித்துவமதப் பிரச்சாரத்திற்கு ஒரு முட்டுக் கட்டையாக விளங்கியது எனலாம்.

### 4. பாட நூல்கள்

எளிய முறையில் சைவ சமயக் கருத்துக்களையும், புராணக் கதைகளையும் எழுதிய ஆறுமுக நாவலர் மாணவர்கட்கும் எளிய முறையில் பாடங்களை இயற்றியிருக்கின்றார். மாணவர்கள் முறையாகக் கல்வி கற்க வேண்டும் என்பதற்காகப் 'பாலபாடம் 1', 'பாலபாடம் 2', 'பாலபாடம் 3', 'பாலபாடம் 4' என்ற முறையில் நூல்களை இயற்றிப் பதிப்பித்திருக்கின்றார். இன்றளவும் இப்பாடமுறை சிறந்ததாகக் கருதப்பெற்று, நாவலர் தொடங்கி இன்றுவரை பல பதிப்புகள் வெளிவந்திருக்கின்றன. இலக்கணம் பயில்வோர்க்கு வினாவிடை அமைப்பில் 'இலக்கண வினா-விடை'யையும், சைவம் பயில்வோர்க்கு வினாவிடை அமைப்பில் 'சைவ வினா-விடை'யும் இயற்றிப் பதிப்பித்திருக் கின்றார்.

## II. சுவடிப்பதிப்புகள்

நாவலர் பெருமான் அவர்கள் ஓலைச்சுவடிகளிலிருந்து பல நூல்களை அச்சேற்றம் செய்திருக்கின்றார். இவர்தம் முயற்சிக்குப் பிறகே சுவடிப்பதிப்புகள் பெருக ஆரம்பித்தன எனலாம். இவர்தம் சுவடிப் பதிப்புகளை மூன்று நிலைகளாகப் பகுத்துக் காணலாம். அவை 1. மூலப் பதிப்புகள், 2. மூலமும் உரையும் கொண்ட பதிப்புகள், 3. புத்துரைப் பதிப்புகள் ஆகும்.

### 1. மூலப் பதிப்புகள்

மூல நூலாசிரியரின் கருத்துப்படி ஓலைச்சுவடியில் உள்ளதை உள்ளபடியே செய்யுள்/உரைநடை வடிவமாகப் பதிப்பிப்பதை 'மூலப்பதிப்புகள்' என்பர். இதில் பதிப்பாசிரியரின் குறிப்புகள் - பாடவேறுபாடுகள் ஆகியன அடிக்குறிப்பில் இடம் பெறும். இந்நிலையில் நாவலர் பெருமான் அவர்கள் காவியம், புராணம், திருமுறை, சிற்றிலக்கியம், இலக்கணம் போன்ற பொருண்மைகளில் பதிப்பித்திருக்கின்றார். அதாவது, காவியப் பதிப்பாக வில்லிபுத்தூரார் பாரதத்தையும், புராணப்பதிப்பு களாகச் சேதுபுராணம், கந்தபுராணம், பெரியபுராணம் போன்ற வற்றையும், திருமுறைப் பதிப்புகளாகத் திருவாசகம், திருக்கோவையார் போன்றவற்றையும், சிற்றிலக்கியப் பதிப்பு களாகத் திருச்செந்தூரகவல், நால்வர் நான்மணிமாலை, துறைசையந்தாதி, சிதம்பர மும்மணிக்கோவை, குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் போன்றவற்றையும், இலக்கணப்

பதிப்புகளாக உவமான சங்கிரகம், இரத்தினச் சுருக்கம் போன்ற வற்றையும் குறிப்பிடலாம்.

### 2. மூலமும் உரையும் கொண்ட பதிப்புகள்

மூல நூலாசிரியரின் கருத்திற்கு உரையாசிரியர் கூறும் விளக்கங்களையும் ஒருசேரக் கொண்ட சுவடிகளை அடிப் படையாகக் கொண்டு பதிப்பிப்பதை 'மூலமும் உரையும் கொண்ட பதிப்புகள்' என்பர். இந்நிலையில் நாவலர் பெருமான் இலக்கணம், நீதிநூல், சமயம், திருமுறை, நிகண்டு போன்ற பொருண்மைகளில் பதிப்பித்திருக்கின்றார். அதாவது, இலக்கணப் பதிப்புகளாக நன்னூல் விருத்தியுரை, நன்னூல் காண்டிகையுரை, தொல்காப்பியச் சூத்திரவிருத்தி, இலக்கணக்கொத்துரை, தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையம், இலக்கண விளக்கச் சூறாவளி போன்றவற்றையும், நீதிநூற் பதிப்பாகத் திருக்குறள் பரிமேலழகருரை, சமயநூற் பதிப்புகளாகக் கொலை மறுத்தல், தருக்க சங்கிரகவுரை, அன்னபட்டீயம், பிரயோக விவேகம், திருச்சிற்றம்பலக் கோவையுரை போன்றவற்றையும், திருமுறைப் பதிப்பாகத் திருக்கோவையார் நச்சினார்க் கினியருரையையும், நிகண்டுப் பதிப்பாகச் சூடாமணி நிகண்டுரை யையும் குறிப்பிடலாம்.

### 3. புத்துரைப் பதிப்புகள்

மூல நூலாசிரியர்/உரையாசிரியர் ஆகியோரின் கருத்துக்கேற்பப் பதிப்பாசிரியர் தாமே ஒரு புத்துரை எழுதிப் பதிப்பிப்பதைப் 'புத்துரைப் பதிப்பு' என்பர். இந்நிலையில் நாவலர் பெருமான் அவர்கள் நீதிநூல், புராணம், சமயம், சிற்றிலக்கியம் போன்ற பொருண்மைகளில் பதிப்பித்திருக்கின்றார். அதாவது, நீதிநூற் பதிப்புகளாக ஆத்திசூடி, கொன்றைவேந்தன், நன்னெறி, நல்வழி, வாக்குண்டாம் போன்றவற்றையும், புராணப் பதிப்பாகக் கோயிற்புராணத்தையும், சமயநூற் பதிப்புகளாகத் திருமுரு காற்றுப்படை, சைவசமய நெறி, சிவதருமோத்தரம் போன்ற வற்றையும், சிற்றிலக்கியப் பதிப்புகளாகத் திருச்செந்தில் நீரோட்ட யமகவந்தாதி, மருதூரந்தாதி, சௌந்தரியலகரி போன்றவற்றையும் குறிப்பிடலாம்.

## பதிப்புமுறை

சுவடிப்பதிப்பு எவ்வாறு அமைய வேண்டும் என்று வரையறை செய்தவர்களுள் யாழ்ப்பாணம் நல்லூர் ஆறுமுக

நாவலர் முதன்மையாகத் திகழ்கின்றார். ஆறுமுக நாவலர் பதிப்பித்த பல்வேறு வகையான பதிப்புகளில் இருந்து இவர்தம் பதிப்புமுறையைக் காணலாம். பொதுவாக, இவர்தம் பதிப்பு முறையைப் பொதுக்கூறு, சிறப்புக்கூறு என்று இரண்டு கூறுகளாகப் பாகுபடுத்திக் காணலாம்.

### அ. பொதுக்கூறு

ஆறுமுக நாவலரின் பதிப்புகளில் பொதுவாகக் காணப் படக் கூடிய சில கூறுகளைப் 'பொதுக்கூறு' எனலாம். அதாவது, தலைப்புப் பக்கம், உள்ளுறை, முன்னிணைப்புகள், நூல் அமைப்பு, எண் அமைப்பு, பின்னிணைப்புகள், கட்டமைப்பு போன்ற கூறுகள் நாவலர்தம் பதிப்புகளில் பெரும்பான்மை பொதுத்தன்மை வாய்ந்தவையாக இருக்கின்றன.

### 1. தலைப்புப் பக்கம்

நாவலரின் பதிப்புகளின் தலைப்புப் பக்கத்தில் நூல் பற்றிய முழுமையான தகவல்களை ஒரு முன்னுரை போன்று அமைத்திருக்கின்றார். அதாவது, நூற்பெயர், நூலாசிரியர் பெயர், பதிப்பிக்கத் தூண்டியவர், பதிப்பாசிரியர், வெளியீட்டாளர், வெளியிட்ட அச்சகம் மற்றும் இடம், பதிப்பு விபரம் பதிப்புக் காலம், பதிப்புரிமை போன்ற குறிப்புகளைத் தலைப்புப் பக்கத்தில் அமைத்திருக்கின்றார். எடுத்துக்காட்டு எதிரில் உள்ளது.

### 2. உள்ளுறை

பதிப்பிற்குள் இடம்பெற்றிருக்கும் தலைப்புகள் எந்தெந்தப் பக்கங்களில் அமைந்திருக்கின்றன என்பதை முன்கூட்டியே தெரிவிக்கும் விதமாகத் தலைப்புப் பக்கத்திற்கு அடுத்து அமைவது உள்ளுறையாகும். இந்த உள்ளுறையை ஆறுமுக நாவலர் அவர்கள் 'சூசி பத்திரம்' என்கின்றார். நூலுள் இடம் பெற்றிருக்கும் பல்வேறு வகையான தலைப்புகள் (தலைப்பு, உட்தலைப்பு) அமையப்பெற்றிருக்கும் பக்க எண்ணை இதனுள் சுட்டிச் செல்கின்றார்.

### 3. இணைப்புகள்

நூலுக்கு அணி சேர்க்கும் விதமாக அமைவது இணைப்புகள். இவ்விணைப்புகள் நூல் பகுதிக்கு அரணாகத் திகழ்பவை. நாவலரின் பதிப்புகளில் பல்வேறு வகையான இணைப்புகள் இடம்பெற்றிருக்கின்றன. இவர்தம் பதிப்புகளில்

கணபதி துணை

# கோயிற்புராணம்

தில்லைவாழந்தணரும் திருக்கைலாசபரம்பரைச்
சைவசித்தாந்த குரவருமாகிய
கொற்றவன்குடி
உமாபதி சிவாச்சாரியார்
அருளிச்செய்தது

இஃது

யாழ்ப்பாணத்து நல்லூர்
ஆறுமுக நாவலரவர்கள்
செய்த புத்துரையுடன்
சிதம்பர சைவப் பிரகாச வித்தியாசாலைத்
தருமபரிபாலகர்
Mudir. G. சுப்பிரமணியம் J.P. அவர்களால்
சென்னபட்டணம்
வித்தியாநுபாலன யந்திரசாலையில்
அச்சிற்பதிப்பிக்கப்பட்டது

4-ம் பதிப்பு
விலை ரூபாய் 1.4.0.

1952
நந்தன வைகாசி மீ

முன்னிணைப்புகள், பின்னிணைப்புகள் என்ற இரண்டு வகையான இணைப்புகள் இடம்பெற்றிருக்கின்றன. முன்னிணைப்புகளாக முகவுரை (பெரியபுராணம் மற்றும் கந்த புராணம் மட்டும்), வரலாறு (நூல் வரலாறு, உரையாசிரியர் வரலாறு ஆகியன தேவையேற்படும் போது மட்டும்), சரித்திரச் சுருக்கம், சிறப்புப் பாயிரம் (திருக்குறள் பரிமேலழகர் உரை - 1860ஆம் ஆண்டு பதிப்பிற்குத் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, சி. தியாகராசச் செட்டியார், ச. தெய்வநாயகம் பிள்ளை, சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியிருக்கின்றனர்). சிறப்புப் பாக்கள் (திருக்கோவை யார்-1861ம் பதிப்பிற்குத் திருவாவடுதுறையாதீன வித்துவான் தாண்டவராய சுவாமிகள், திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, தியாகராசச் செட்டியார், சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார், திரிசிரபுரம் மு. முருகையப்பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாக்கள் பாடியிருக்கின்றனர்). நூலாசிரியர் வரலாறு, நூல் பற்றிய சிறப்புச் செய்திகள், சருக்கவகராதி, பதிகவகராதி போன்றனவும் பின்னிணைப்புகளாகச் சூத்திர முதற் குறிப்பகராதி, பாட்டு முதற்குறிப்பகராதி, பாவியலதிகாரவகராதி, திருக்குறளகராதி, புராண,வகராதி, பிழைதிருத்தம், புத்தகப் பிரகடனப் பத்திரம் போன்றனவும் இடம்பெற்றிருக்கின்றன. இவ்வகையான இணைப்புகள் நூலுக்கேற்றவாறு சிலவற்றை விடுத்துப் பதிப்பிக்கப் பெற்றிருப்பதைக் காணமுடிகின்றது.

**4. நூல்**

நாவலர் பெருமானின் பதிப்புகளில் நூல் பகுதி பல்வேறு விதமாக அமைந்திருப்பதைக் காணமுடிகின்றது. அதாவது, மூலப் பகுதியாகவோ, மூலமும் உரையும் கொண்ட பகுதியாகவோ, உரைப் பகுதியாகவோ, மூலம் உரை (திருமுருகாற்றுப்படை 1849) தனித் தனியாகவோ இருக்கும். மேலும், அடிக்குறிப்பு கொண்டதாகவும், நூலுக்கு முன்னும் பின்னும் ஆறு+ஆறு வெற்றுத் தாள்கள் கொண்டதாகவும் ஒவ்வொரு பதிப்பும் அமையப்பெற்றிருக்கும். சூடாமணி நிகண்டுப் (1897) பதிப்பில் ஒவ்வொரு அச்சுத் தாளுக்கிடையே ஒரு வெற்றுத்தாள் வைத்துப் பதிப்பித்திருக்கின்ற நேர்த்தியையும் இவர்தம் பதிப்புகளில் காணமுடிகின்றது. 16 பக்கங்கள் கொண்டது ஒரு பாரம். நூல் எத்தனை பாரம் கொண்டது என்பதைக் குறிக்க ஒவ்வொரு பாரத்தின் தொடக்கத்திலும் பாரம் எண்-தமிழெண்ணாகக் கொடுத்திருக்கின்றார்.

### 5. எண்ணமைப்பு

ஆறுமுக நாவலர் பெருமானின் பதிப்புகளில் எண் பல நிலைகளில் அமைந்திருப்பதைக் காணமுடிகிறது. இதனைப் பின்வருமாறு வரிசைப்படுத்திக் காணலாம்.

1. நூற்பா அல்லது செய்யுளின் தொடக்கத்தில் (இடப்பக்கம்) நூலில் இடம்பெற்ற அனைத்து நூற்பா அல்லது செய்யுளுக் கான தொடரெண் கொடுத்திருக்கின்றார்.
2. நூற்பா அல்லது செய்யுளின் இறுதியில் (வலப்பக்கம்) நூலில் இடம்பெற்ற சருக்கம், இயல், அதிகாரம் போன்றவற்றுக்கான தனியெண் கொடுத்திருக்கின்றார். மேலும், உரை இருப்பின் உரைப்பகுதியையும் சேர்த்துத் தனியெண் கொடுத்திருக் கின்றார்.
3. தலைப்புக்கு என்று தனியெண் கொடுத்திருக்கின்றார். அதாவது உள்தலைப்பு, இயல் தலைப்பு, பாடற்பொருள் தலைப்பு ஆகியவற்றுக்கும் தனியெண் கொடுத்திருக்கின்றார்.
4. தொகை வருமிடங்களிலும் எண் கொடுத்திருக்கின்றார்.
5. எடுத்துக்காட்டுக்கு வரிசை எண் கொடுத்திருக்கின்றார்.
6. முன்னிணைப்பு, நூல்பகுதி, பின்னிணைப்பு ஆகியவற்றுக்கும் தனியெண் கொடுத்திருக்கின்றார்.
7. **௧, ௨, ௩** என்ற முறையில் எண்ணமைப்பு அமைத்திருக் கின்றார். ஆனால், க, ய, ௩ என்ற அமைப்பை நாவலர் பெருமான் கையாளவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

### கட்டமைப்பு

நாவலர் பெருமான் அவர்கள் வெளியிட்ட அனைத்துப் பதிப்புகளின் கட்டமைப்பும் முழு காலிக்கோ பைண்டிங் செய்யப் பெற்றதாகவே இருக்கின்றது.

இவற்றையெல்லாம் பார்க்கும் போது ஆறுமுக நாவலர் நூலுக்கு உள்ளும் வெளியும் எவ்வாறெல்லாம் அமையவேண்டும் என்பதில் கவனத்தோடு இருந்திருக்கின்றார் என்பது தெள்ளத் தெளிவாகத் தெரிகின்றது.

### ஆ. சிறப்புக் கூறுகள்

ஆறுமுக நாவலர் தம்முடைய பதிப்புகளில் நிகழ்த்திய சில சிறப்புக் கூறுகளை இரண்டு நிலைகளாகப் பகுக்கலாம். அ. அடிக்

குறிப்பின் தன்மைகள்; ஆ. நூற் பகுதிக்குள் நாவலரின் பதிப்பு உத்திகள் ஆகும்.

அ. அடிக்குறிப்பின் தன்மைகள்

ஆறுமுக நாவலர் அவர்களின் பதிப்புகளில் அடிக் குறிப்புகள் எவ்வாறெல்லாம் அமைந்திருக்கின்றன என்பதைப் பட்டியலிட்டுப் பார்க்கும்போது, அவை பதினெட்டு வகைகளாக அமைந்திருப்பதைக் காணமுடிகிறது. அவை பின்வருமாறு:

1. பாடலின் செய்திக்குரிய பதவுரை கூறிய பிறகு அதையொத்த சிலவற்றை அடிக்குறிப்பில் வரிசைப்படுத்துதல். எடுத்துக் காட்டாக, இலக்கணக் கொத்து மூலமும் உரையிலும் முதலாவது வேற்றுமையியலின் 9ஆவது சூத்திரத்திற்கு உரையாசிரியர் இரண்டு தொல்காப்பியர் சூத்திரங்களை உரைவிளக்கமாகக் காட்டியிருக்கின்றார். இதற்கு நாவலர் அவர்கள்

   "இவ்விரண்டுந் தொல்காப்பியச் சூத்திரம், முன்னையது (வினைசெயிடத்தினிற் காலத்தின்) உருவினை யேற்ற சொற்பல பொருள்படுதற்கும், பின்னையது (பொருண்மை சுட்டல் வியங்கோள் வருதல்) உருவு நோக்கிய சொற்பல பொருள்படுதற்குங் காட்டப்பட்டன. முன்னையதற்கு உதாரணம்: தட்டுப்புடைக்கண் வந்தான், மாடத்தின் கணிருந்தான், கூதிர்க்கண் வந்தான் எ-ம், பின்னையதற்கு உதாரணம்: ஆவுண்டு, செல்க எ-ம். வரும்"

   என்று குறிப்பிட்டிருக்கின்றார்.

2. உரையின் நடுவே வரும் சொல்லிற்கு மேலும் விளக்கம் தர முற்படும் போது உடுக்குறியிட்டு அடிக்குறிப்பில் விளக்கம் தருதல். எடுத்துக்காட்டாக, திருக்குறள் பரிமேலழகர் உரைப்பதிப்பில் "இருள்சேர் இருவினை" என்னும் திருக்குறள் உரைக்கு நாவலர் பெருமான்,

   "ஈண்டு நல்வினை என்றது அழிதன் மாலையவாய துறக்கவின்ப முதலிய காமியங்களைப் பயப்பனவாகிய வேள்வி முதலியவற்றை. இவை வீட்டுக்கு நேரே வாயிலாகிய தத்துவ ஞானத்தைப் பயவாமை மாத்திரையேயன்றித் தீவினைபோல அது நிகழவொட்டாது தடைசெய்து நிற்றலு முடையவனவாம். ஆதலால், இந்நல்வினை தீவினை

இரண்டும் ஒருவனுக்கு ஞானத்தைத் தடுத்துப் பந்த முறுத்தற் கண் பொன்விலங்கும் இரும்பு விலங்கும் போலத் தம்முள் ஒப்பனவாம் என்க. சரியை, கிரியை, யோகங்கள் ஞானம் வாயிலாக வீடு பயத்தலின் ஈண்டு நல்வினை என்றது அவற்றையன்றென்க"

என்று மேலும் விளக்கம் தருகின்றார்.

3. உரையில் வேறுபாடு தோன்றுமிடத்து உடுக்குறியிட்டு அடிக்குறிப்பில் விளக்குதல், நன்னூல் விருத்தியுரையில் வேறுபாடுகள் தோன்றுமிடங்களில் அடிக்குறிப்பாகத் தம்முடைய கருத்தையும் பாடவேறுபாடுகளையும் நாவலர் பெருமான் குறிப்பிடுகின்றார். அதாவது, நன்னூல் சிறப்புப் பாயிர உரையில் சிவஞான முனிவர் 'விமரிசம்' என்ற ஒரு சொல்லைப் பயன்படுத்துகிறார். இதற்கு நாவலர் 'விமரிசனம் - சிந்தித்தல், விமரிசனமெனினுமொக்கும்' என்கின்றார். மேலும்,

"ஈண்டு உரையாசிரியரெனப்பட்டார் இளம்பூரணர், ஆதியிலக்கணமாகிய தொல்காப்பியத்திற்கு முன்னருரை செய்தமையால் இவருக்கு உரையாசிரியரென்னும் பெயர் வழங்குவதாயிற்று"

என்று உரையாசிரியர் யார் என்று விளக்குகின்றார்.

4. ஒரு நூலின் விளக்கத்தினை மற்றொரு நூலில் கண்டு கொள்க என்று அடிக்குறிப்பில் உடுக்குறியிட்டு நூற்பெயர் சுட்டுதல். தொல்காப்பியம் சொல்லதிகாரம் வேற்றுமை மயங்கியல் 31ஆம் நூற்பாவிற்குச் சேனாவரையர் உரையில் ஆகுபெயரும் அன்மொழித் தொகையும் ஒன்றே என்று சேனாவரையர் உரை வகுத்திருப்பதற்குச் சிவஞான முனிவர் அவர்களின் தொல்காப்பியச் சூத்திர விருத்தி 34ஆம் பக்கத்தில் ஆகு பெயரும் அன்மொழித்தொகையும் ஒன்றென்றல் பொருந்தா மையை எடுத்துச் சொல்லியிருப்பதை இங்குச் சுட்டிக் காட்டு கின்றார். இதேபோல், வேற்றுமை மயங்கியலில், 'இறுதியு மிடையுமே', 'பிறிது பிறிதேற்றலும்' என்னும் சூத்திரங் களுக்குச் சேனாவரையர் முதலாயினார் உரைத்த உரையை மறுத்துச் சிவஞானமுனிவர் வேற்றுரை யுரைத்தார். தொல்காப்பியச் சூத்திரவிருத்தி 38, 39, 34, 35ஆம் பக்கங்களில் காண்க என்று குறிப்பிடுகின்றார்.

5. உரைப்பகுதியில் இடம்பெற்றிருக்கும் மேற்கோளுக்கு உடுக் குறியிட்டு அடிக்குறிப்பில் நூற்பெயர் சுட்டுதல். அதாவது, உரைப்பகுதியில் மேற்கோளாகக் காட்டும் பாடலைக் கொடுத்துவிட்டு அப்பக்கத்தின் அடிக்குறிப்பாக அப்பாடல் இடம்பெற்றிருக்கும் நூற்பெயரையும் செய்யுள் எண்ணையும் குறிப்பிடுகின்றார். குறிப்பாக, திருமுருகாற்றுப் படை - திருச்சீரலைவாய் 'விண்செலன் மரபினையர்' என்ற வரிக்கு உரை வரைந்தவர்,

**நிலமிசை வாழ்க ரலமர நீரத்**
**தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்**
**காலுண வாகச் சுடரொடு கொட்கு**
**மவிர்சடை முனிவரு மருள**

எனும் பாடலை மேற்கோளாகக் காட்டுகின்றார். இம்மேற்கோள் பாடல் எங்குள்ளது என்பதைக் குறிக்க அடிக்குறிப்பில் 'புறநானூறு 43ஆம் செய்யுள்' என்று குறிப்பிடுகின்றார்.

6. உரையாசிரியரின் கருத்துக்கு மேலும் விளக்கம் தேவைப் படும் போது உடுக்குறியிட்டு அடிக்குறிப்பில் விளக்குதல், அதாவது, இலக்கணக்கொத்து (மூலமும் உரையும்)ப் பாயிர உரையில் அகர உயிரானது உருவெழுத்து, ஒலியெழுத்து, உணர்வெழுத்து, தன்மையெழுத்து என்று பொருள் கூறியவிடத்து நாவலர் "எழுத்துக்கள் உருவெழுத்து முதலிய நான்கு பகுதியவாதலும் அவற்றினிலக்கணமும் வருஞ் சூத்திரங்களாலுணர்க

க. **உருவே ஞுணர்வே யொலியே தன்மை**
**யெனவீ ரெழுத்து மீரிரு பகுதிய**

உ. **காணப் பட்ட வுருவ மெல்லா**
**மாணக் காட்டும் வகைமை நாடி**
**வழுவி லோவியன் கைவினை போல**
**வெழுதப் படுவ துருவெழுத் தாகும்**

ங. **கொண்டவோர் குறியாற் கொண்ட வதனை**
**யுண்டென் றுணர்வ துணர்வெழுத் தாகும்**

ச. **இசைப்படு புள்ளி னெழாஅல் போலச்**
**செவிப்புல னாவ தொலியெழுத் தாகும்**

ரு. **முதற்கா ரணமுந் துணைக்கா ரணமுந்**
**துணைக்கா ரணத்தொடு தொடரிய வுணர்வு**

மவற்றொடு புணர்ந்த வகத்தெழு வளியின்
மிடற்றுப்பிறந் திசைப்பது தன்மை யெழுத்தே

என்றவர், இன்னும் நான்கு பகுதியாவதாலும் அவற்றினிலக்கண மும் வருஞ்சூத்திரங்களாலுணர்க:

க. வடிவுபெயர் தன்மையுண் முடிவு நான்கா
நடைபெறு நாவலர் நாடிய வெழுத்தே

உ. கட்புல னில்லாக் கடவுளைக் காட்டுஞ்
சட்டகம் போலச் செவிப்புல வொலியை
யுட்கொளற் கிடுமுரு பாம்வடி வெழுத்தே

ந. வடிவுமுதன் மும்மையின் வழங்கு மெழுத்திற்
படுபல பகுதிக் கிடுபெயர் பெயரே

ச. தான முயற்சி தரக்கொளச் செவிப்புல
னாயவொலி தன்மை யெழுத்தா கும்மே

ரு. உருவமுதன் மும்மையோ டொன்றிய வியல்பை
மருவவுளந் துணிவ துண்முடி வெழுத்தே

என்று குறிப்பிடுகின்றார்.

7. உரையாசிரியரின் கருத்துக்கு வலிமையூட்டும் விதமாக உடுக்குறியிட்டு அடிக்குறிப்பில் மேற்கோள் பாடல்களைச் சுட்டுதல். 'எந்நன்றி கொன்றார்க்கும்" என்னும் திருக்குறள் உரை விளக்கத்தில் "பெரிய அறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலையறுத்தலும் மகளிர் கருவினைச் சிதைத்தலும், பார்ப்பார்த்தடித்தலும் முதலிய பாதகங்களைச் செய்தல்" என்னும் பரிமேலழகரின் உரையானது புறநானூற்றுப் பாடலான, 'ஆன்முலை யறுத்த அறணி லோர்க்கும்' (புறம். 34) எனத் தொடங்கும் பாடலுக்கு ஒப்பானது என்று அப்பாடலை எடுத்துக் காட்டுகின்றார்.

8. அருஞ்சொற்பொருள் தருதல், எடுத்துக்காட்டாக நாவலர் பதிப்பில் இடம்பெற்ற சில அருஞ்சொற் பொருள்கள் பின்வருமாறு:

இந்திரஞாலங் - இந்திரசாலம் (கீர்த்தித் திருவகவல்)

சோத்தம் - இழிந்தார் செய்யுமஞ்சலி (ஆசைப்பத்து.பா. 4)

தோரியமகளிர் - ஆடிமுதிர்ந்த மகளிர்
(தொல்.சூத்திரவிருத்தி, ப.12)

விமரிசம் - விமரிசனம், சிந்தித்தல் (நன்.விருத்தியுரை சிறப்புப் பாயிரவுரை)

குழல்வாய்மொழியம்மை - திருக்குற்றாலத்தெழுந்தருளியிருக்கும் தேவி திருநாமம் (திருக்கோவையார், பா. 94)

சமவாயம் - ஒற்றுமை (இலக்கணக் கொத்துரை, நூ. 42)

சையோகம் - கூட்டம் (இலக்கணக்கொத்துரை, நூ. 42)

9. விளக்கவுரை தருதல்
10. இடப்பெயர்களைச் சுட்டுதல்
11. தொகை விளக்கம் தருதல்
12. பிற பிரதிகளில் இல்லாதவற்றைச் சுட்டுதல்
13. பிற நூல்களை மேற்கோள் சுட்டுதல்

அ. மேற்கோள் பாடல்களின் நூற்பெயர் முதலானவை சுட்டுதல்

ஆ. மேற்கோள் தொடரை முழுமை செய்தல்

14. இலக்கணக் குறிப்பு தருதல். நாவலர் பதிப்புகளில் ஆங்காங்கு இலக்கணக் குறிப்பைச் சுட்டும் தன்மையைக் காண முடிகின்றது. குறிப்பாகத் திருவாசகம் கீர்த்தித்திருவகவல் என்னும் பகுதியில் "கோடி - கொடி, கொடியென நீட்டல் விகாரம் பெற்றது" என்று குறிப்பிட்டிருக்கின்றார்.
15. வடமொழிக் கருத்துரைத்தல்
16. சிறப்புப்பெயர் சுட்டுதல்
17. பாடவேறுபாடு காட்டுதல்
18. புராணக்கதைக் கூறுகளைக் காட்டுதல்

**ஆ. நூற்பகுதிக்குள் நாவலரின் பதிப்பு உத்திகள்**

ஆறுமுக நாவலர் பதிப்புகளின் நூற்பகுதி பல உத்திகளைப் பெற்றுள்ளது. அதாவது, பொருளுக்கேற்பப் பாடலமைப்பை மாற்றிப் பொருளுரைக்கும் தன்மை, மாற்றுரை கூறும் தன்மை, திருத்தப் பதிப்பு, உரையில் சொல்லையும் பொருளையும்

வேறுபடுத்தும் தன்மை, மூலத்தினின்றும் பாடலை வேறு படுத்தும் தன்மை, நூலின் தொடக்கம் - முடிவு அமைப்பு, கூடுதல் விளக்கம் தருதல், பிழை சுட்டும் தன்மை, புறவுரை சுட்டும் தன்மை, புதிய சொல்லாட்சி, அச்சுத் தன்மை, மாணவர் பதிப்பு, நாவலர் பதிப்பில் சில குறைபாடுகள் போன்ற பல்வேறு உத்திகளைக் காணலாம்.

## 1. பொருளுக்கேற்பப் பாடலமைப்பை மாற்றிப் பொருளுரைத்தல்

> "புசிக்க பயற்றினையு மில்வாழ்வான் போனம்
> புசிக்கலுமா நத்தமெனும் போது" (சைவசமய நெறி. 173)

> இ-ள். இல்வாழ்வான் பயற்றினையும் புசிக்க - இல்வாழ்வானாவன் அவ்விரண்டு திதியினும் பயற்றைப் புசித்திருக்கக் கடவன்; - நத்தம் எனும்போது போனம் புசிக்கலும் ஆம் - அது கூடாதாகில் நத்த மென்னுங் காலத்திலே அன்னம் புசித்தலுந் தகும். எ-று.

என்பதில் பாடல் அமைப்பை முன்-பின்னாக மாற்றி நேர்ப் பொருளை உணர்த்துவதில் நாவலர் பெருமான் கைவந்தவர் என்பது தெரிகின்றது.

## 2. மாற்றுரை கூறுதல்

ஒன்றிற்கு மேற்பட்ட பொருளுரைக்குமிடத்துப் பாடலுரையின் உரிய பொருளையும் சருக்கத்தின் இறுதியில் அவ்வுரையின் மாற்றுரையாகச் சுட்டிக்காட்டுகின்றார். அதாவது, கோயிற் புராணம் - திருவிழாச் சருக்கம் 28ம் பாடலில்

> "நண்ணித் தினகரன் முதலோர் கிழமைகொ ணலமார் நவமணி யணிமேவ" (28:1) எனும் தொடருக்கு இப்பாடலின் பொருளில் "தினகரன் முதலோர் கிழமை நண்ணி நலம்கொள் ஆர் நவமணி அணி மேவப் பண்ணி - சூரியன் முதலிய நவக்கிரகங்களுக்கும் உரிமை பொருந்திய அழகு கொண்டு நிறைந்த நவரத்தினங்களினாலும் ஆபரணங் களைப் பொருந்தச் செய்து -"

என்றவர் அச்சருக்கத்தின் இறுதியில், நண்ணிக் கொள் நலம் ஆர் நவமணி என்பதற்குப் பானுவார முதலிய ஏழு வாரத்தினும் பொருந்தி ஆராய்ந்து கொள்ளப்படும் தன்மை பொருந்திய நவரத்தினங்கள் எனப் பொருள் கூறலும் உண்டு.

மாணிக்கம், முத்து, பவளம், மரகதம், புருடராகம், வச்சிரம், நீலம், கோமேதகம், வைடூரியம் என்னும் நவரத்தினங் களுள்ளும் மாணிக்கம் முதலிய ஏழும் முறையே பானுவார முதலிய ஏழு வாரங்களிலும் பரிக்ஷிக்கற்பாலன. கோமேதகம் பானு வாரத்தினும் வைடூரியம் சோம வாரத்தினும் பரிக்ஷிக் கற்பாலன"

என்று மாற்றுரையையும் குறிப்பிடுகின்றார்.

### 3. திருத்தப் பதிப்பு

நாவலர் பெருமான் வெளியிட்ட பதிப்புகளில் பல பதிப்புகள் திருத்தப் பதிப்புகளாக வெளிவந்திருக்கின்றன. திருமுருகாற்றுப்படை முதற்பதிப்பில் இல்லாததை இரண்டாம் பதிப்பில் சேர்த்திருக்கின்றார். "போர்மிகு பொருந குரிசிலு மெனப்பல" (திருமுரு. 276) 'குரிசிலு' மென்ற உம்மை அளவையின் என்பதனோடு கூட்டப்பட்டது என்னும் உரைப் பகுதியும்; "விளிவின்...... றிருணிற" (திருமுரு. 292-93) என்பதில் உள்ள 'இன்றி' என்பது 'இன்று' எனத் திரிந்து நின்றது என்னும் உரைப்பகுதியும் முதற்பதிப்பில் இடம்பெறவில்லை. அதன்பிறகு வந்த பதிப்புகளில் இவ்வுரைப்பகுதி இடம்பெற்றுள்ளதைக் காண முடிகிறது.

அதேபோல், 1839ஆம் ஆண்டில் 'சூடாமணி நிகண்டு' தாண்டவராய முதலியாரால் விசாகப் பெருமாளையருடைய கல்வி விளக்க அச்சுக்கூடத்தில் அச்சிட்டு முதன் முதலில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதில் வேளாளரை வைசியர் என்றே குறிப்பிடப்பட்டிருந்தது. நாவலர் அவர்கள் சூடாமணி நிகண்டுரையை 1849இல் பதிப்பிக்கும் போது வேளாளரை வைசியர் என்றே பாடங்கொண்டு பதிப்பித்தார். அதன்பிறகு மறுபதிப்பு வெளியானதில் வேளாளரைச் சூத்திரர் என்று மாற்றி, வைசியருக்குரிய இரண்டு பாடல்களையும் திருத்தி, "மருவிய எழு' என்பதற்கு 'மருவிய ஆறு' என மாற்றிப் பதிப்பித்திருக்கின்றார்.

### 4. சொல்லையும் பொருளையும் வேறுபடுத்தும் தன்மை

நாவலர் பெருமான் பல நூல்களுக்குப் புத்துரை வரைந் திருக்கின்றார். அவர்தம் உரைகளில் சொல்லையும் பொருளையும் வேறுபடுத்திக் காட்டும் தன்மை சுவடிப் பதிப்புலகில் தனிச்சிறப்பு வாய்ந்ததாக அமைந்திருக்கின்றது. 'சைவ சமய நெறி' எனும் நூல்

ஆசிரியரிலக்கணம், மாணாக்கரிலக்கணம், பொதுவிலக்கணம் என மூன்று இயல்களாக அமைந்துள்ளது. குறிப்பாக விபூதி தரிக்கும் தானங்கள் பற்றி,

**"சிரநெற்றி காது திரண்ட கழுத்து**
**னுரந்தோளி னாபி தனிலும்"**

இ-ள்: சிரம் - உச்சியிலும் - நெற்றி - நெற்றியிலும் - காது - காதுகளிலும் - திரண்ட கழுத்தின் - திரண்ட கழுத்திலும் - உரம் - மார்பிலும் - தோளின் - புயங்களிலும் - நாபிதனினும் - உந்தியிலும் - எ.று (191)

என்று குறிப்பிட்டிருக்கின்றார். இங்கு நாவலரின் பதிப்பு முறை யொன்றைக் காணவேண்டும். உரையுள் சிறுகோடு (-) பெருங் கோடு (___) என இட்டிருக்கின்றார். சிறுகோடு, சொல்லுக்கும் பொருளுணர்த்தும் சொல்லுக்கும் இடையில் உள்ளது. பெருங்கோடு, ஒரு சொல்லையும் மற்றொரு சொல்லையும் வேறுபடுத்திக் காட்டவல்லது. இதேபோல், கோயிற் புராணத்தில் ஒன்றினின்று ஒன்றை வேறுபடுத்திக்காட்ட ;- மற்றும் ,- என்ற குறியீடுகளைப் பயன்படுத்தியுள்ளார்.

**5. மூலத்தினின்றும் பாடலை வேறுபடுத்தும் தன்மை**

நூல் பதிப்பிக்கும் காலத்து நாவலர் பெருமான் மூல நூலாசிரியரின் வாக்கை நுணுகி ஆய்ந்து இவ்வாக்கு நூலாசிரியருடையதல்ல என்பதைத் துணிச்சலாக எடுத்துக் காட்டுகின்றார். திருக்கோவையார் என்கின்ற திருச்சிற்றம்பலக் கோவையாரில் முதலில் இடம்பெற்ற,

**"எண்ணிறைந்த தில்லை யெழுகோ புரந்திகழக்**
**கண்ணிறைந்து நின்றருளுங் கற்பகமே – நண்ணியசீர்த்**
**தேனூறு செஞ்சொற் றிருக்கோவை யென்கின்ற**
**நானூறு மென்மனத்தே நல்கு" (விநாயக வணக்கம்)**

**"ஆரணங் காணென்ப ரந்தணர் யோகிய ராகமத்தின்**
**காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலதென்ப**
**நேரணங் காணென்ப ரெண்ண ரெழுத்தென்ப**
**ரின்புலவோர்**
**சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே"**
**(நூற் சிறப்பு)**

ஆகிய பகுதிகள் மூல நூலாசிரியர் வாக்கல்ல என்றும், அவை பிற்காலத்தான்றோரராற் செய்யப்பட்டன என்றும் சுட்டிக் காட்டுகின்றார்.

### 6. நூலின் தொடக்கமும் முடிவும்

ஒவ்வொரு நூலின் தலைப்புப் பக்கத்தின் முதலில் பிள்யைார்சுழி போட்டுக் 'கணபதி துணை' என்று தொடங்கு கின்றார். மேலும், சமய நூல்களாயின் 'திருச்சிற்றம்பலம்' என்று கூடுதலாகச் சேர்த்துக் கொள்கின்றார். ஒவ்வொரு நூலின் இறுதியில் 'திருச்சிற்றம்பலம்' என்று முடிப்பவர் 'இலக்கணச் சுருக்கம்' என்னும் நூலின் இறுதிப் பகுதியில் 'பரமபதி துணை' என்று முடித்திருக்கின்றார். நாவலர் பதிப்புகளில் இவ்வாறு ஒரு முறையற்ற தன்மையையும் காணமுடிகிறது.

### 7. கூடுதல் விளக்கம் தருதல்

நாவலர் பெருமானின் பதிப்புகளில் உரையாசிரியர் கூறிய கருத்துக்கு வலுவூட்டும் வகையில் மேலும் பல கருத்துக்களைப் பல்வேறு இடங்களில் புகுத்தியிருக்கின்றார். குறிப்பாக, நல்வழி பதிப்பில், பதவுரை, இதனது தாற்பரியம் ஆகிய பகுதிகளுக்கு மேலும் நீண்ட விளக்கம் தருகின்றார். 'சிவாயநமவென்று' எனவரும் பாடலுக்கு அவ்வாறு விளக்கம் தரும் அவர் நிறைவில் 'அது திருநாவுக்கரசு நாயனார் முதலிய மெய்ஞ்ஞானிகள் சரித்திரங்களாலும் அறிக' எனக் கூடுதல் விளக்கம் தருகின்றார்.

### 8. பிழை சுட்டும் தன்மை

நூலாசிரியர் கூறிய கருத்தை அப்படியே போற்றும் தன்மை கொண்டவரல்லர் நாவலர். இலக்கண விளக்கத்தில் ஏற்பட்ட மாறுபட்ட கருத்துகளைச் சுட்ட சிவஞான முனிவர் இலக்கண விளக்கச் சூறாவளி என்றொரு நூலை யாத்தார். இந்நூலின் சொல்லதிகாரப் பெயரியலில் 'ஒன்றே பல' எனத் தொடங்கும் நூற்பாவிற்குச் சிவஞான முனிவர் "ஆண்பால் பெண்பா லென்னும் வழக்கு உயர்திணைக்கே யன்றி அஃறிணைக் கின்றென்றார்". இக்கருத்தினை நாவலர் பெருமான் "ஆண்பா லெல்லா மாணெனற் குரிய", "பெண்பா லெல்லாம் பெண்ணெனற் குரிய" என்று மரபியற் சூத்திரங்களையும், "ஆண்மை சுட்டிய பெயர் பெண்மை சுட்டிய பெயரென்னுங் குறியீடுகளையும், களிறு பிடி முதலிய வழக்குகளையும் மறந்தாற்போலும்" என்று சிவஞான முனிவரின் கருத்தில் ஏற்பட்ட பிழையைச் சுட்டிக் காட்டுகின்றார்.

### 9. புறவுரை சுட்டும் தன்மை

நாவலர் பெருமான் புத்துரை வழங்குமிடத்து, மூல நூலாசிரியரின் கருத்துக்கு மாறுபட்ட கருத்தைச் சுட்டும் தன்மையைக் காணமுடிகிறது. அதாவது, ஆத்திசூடி - கொன்றை வேந்தன் புத்துரைப் பதிப்பில் (1853) 'சனி நீராடு' என்பதற்கு நாவலர் பெருமான் உரைவழங்குமிடத்து, 'புதன்கிழமையிலும் முழுகலாம்' என்று உரைக்குப் புறம்பாக விளக்குவதை உணர முடிகிறது. இது உலகத்தோடு ஒட்ட ஒழுகுந் திறனை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது எனலாம்.

### 10. புதிய சொல்லாட்சி

நாவலர் தம்முடைய பதிப்புகளில் பல்வேறு வகையான புதிய சொல்லாட்சிகளைப் பயன்படுத்தியிருக்கின்றார். நாவலரின் நல்வழி உரையில் 'ஒருவன் பிறன்மனையாளை இச்சிக்கின்' என்றெழுதுவது இக்காலத்தில் 'பயணித்தல்' என்றெழுதுமாப் போலே அமையக்கூடும் என்கின்றார். அதுபோல, 'வெகுசனம்' என்ற சொல்லை முதன்முதலில் நாவலர் தான் கையாண்டுள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

### 11. அச்சுத் தன்மை

நாவலர் அவர்களின் பதிப்புகளில் அச்சுவேறுபாடு, அச்சுப் படித் திருத்துதல் போன்றவற்றிற்குச் சிறப்பிடம் தந்திருக்கின்றார். இயல் தலைப்பு, உள்தலைப்பு, நூற்பா, உரை, அடிக்குறிப்பு போன்ற ஒவ்வொன்றிற்கும் வெவ்வேறு வகையான புள்ளிகளில் அச்சுக்களைத் தேர்ந்தெடுத்து அச்சிட்டிருக்கின்றார். மேலும், நாவலர் பெருமான் வசன நூல்களை உருவாக்கும் போது தாமே அச்சுக்கூடத்திற்குச் சென்று, அங்கு இவர் சொல்லச் சொல்ல அச்சக ஊழியர்கள் அச்சுக்கோப்பர் என்பர். நாவலர் பதிப்பித்த நூல்களில் அச்சுப்பிழைகள் இல்லை என்று எல்லோரும் பாராட்டும் அளவுக்கு நூலைப் பதிப்பித்துள்ளார். எவ்வளவு கூர்ந்து கவனித்தாலும் சில அச்சுப்பிழைகள் வருவது இயல்பு. இருப்பினும், அவற்றையும் கண்டெடுத்து நூலின் இறுதியில் பிழைதிருத்தம் என்ற பகுதியில் சுட்டிக்காட்டிப் பிழையற்ற பதிப்பைக் கொண்டுவருவார்.

"ஆறுமுக நாலவர் வேறொரு பாஷையிலே நினைத்து ஈழத் தமிழில் எழுதுகிறவரில்லை. வீண்சொல், அடை எதுவும்

இல்லை. இன்னோசையை இவரின் நடை இயல்பாய்ப் பெறும்"

என்கின்றார் பேராசிரியர் கைலாசபிள்ளை (ஆறுமுக நாவலர் சரித்திரம்).

### 12. மாணவர் பதிப்பு

நாவலர் அவர்கள் பயன்படுத்துவோர்க்கு ஏற்பத் தம்முடைய பதிப்பை அமைத்துக் கொள்வார். இவரின் நன்னூல் காண்டிகையுரைப் பதிப்பு மாணவர்களை மையமாகக் கொண்டு பதிப்பிக்கப்பட்டது எனலாம். அதாவது, நன்னூல் காண்டிகை உரைப் பதிப்பில், ஒவ்வொரு பகுதியின் இறுதியிலும் பரீக்ஷை வினாக்கள் என்ற பகுதியை அமைந்திருக்கின்றார். மேலும் உபாத்தியாயருக்கு அறிவித்தல் என்ற ஒரு பகுதியையும் நாவலர் அமைத்திருக்கின்றார். அதில் "உபாத்தியாயர் நாடோறும் தம் மாணாக்கர்களுக்குச் சொல்லும் பாடத்தை முன்னரே வீட்டில் அவதானத்தோடு வாசித்துச் செவ்வையாக ஆராய்ந்து உள்ளத்தில் அமைத்துக் கொள்ளவேண்டும்" என்று குறிப்பிடுகின்றார். நூலுக்கு இறுதியில் 'அப்பியாசம்' என்னும் ஒரு பகுதியையும் நாவலர் அவர்கள் அமைத்திருக்கின்றார். இலக்கணங் கற்றவர் இலக்கியத்தில் அவ்விலக்கணம் அமைந்துகிடக்குமுறையை ஆராய்ந்து விதியோடு கூறப் பயிலவேண்டும். அது செய்யப் பயிலாதவிடத்து இலக்கணக் கல்வியால் ஒருபயனுமில்லை" என்று இலக்கணப் பயிற்சியின் இன்றியமையாமையையும் குறிப்பிடு கின்றார்.

### 13. நாவலர் பதிப்பில் சில குறைபாடுகள்

சுவடிப்பதிப்பில் இன்றைய தேவை என்ற அடிப்படையில் பார்க்கும் போது நாவலர் பெருமானின் பதிப்புகளில் சில குறைபாடுகள் இருக்கத்தான் செய்கின்றன. பதிப்புரை, சுவடிச் செய்தி, முகவுரை (பெரியபுராணம், கந்தபுராணம் தவிர) போன்றவை இன்றைய சுவடிப்பதிப்பில் தேவையாகக் கருதப் பெறுகின்றன. ஆனால் இவை நாவலர் பதிப்புகளில் காணப்பட வில்லை. பதிப்புரை இல்லாததினால் இவர்தம் பதிப்பு முறைகள், பதிப்புக் கொள்கை, முந்தைய பதிப்புகள் பற்றிய விவரம், பதிப்பில் செய்துள்ள மாற்றம் ஆகிய எதையும் இவர்தம் கூற்றாக அறிய முடிவதில்லை.

பல்வேறு சுவடிகளை ஆராய்ந்து ஒப்புமை செய்து பாட வேறுபாடுகளைக் குறித்து முழுமையாக்கும் பணி சுவடிப்பதிப்புப் பணிகளில் முக்கியமானதாகும். நாவலர் அவர்கள் எந்தப் பதிப்புப் பணியை மேற்கொண்டாலும் அதற்குப் பல சுவடிகளை ஆதாரமாகக் கொண்டு ஒப்புநோக்கி ஆய்வு செய்த பின்னரே அச்சிடுவார். சுவடிகளின் ஆதாரம் இல்லாமல் இவராக எதையும் திருத்துவதில்லை. இது, சுவடிப்பதிப்பின் நேர்மை எனப்படுகிறது. இவர் பதிப்பித்த நூல்களின் தலைப்புப் பக்கத்தில் "யாழ்ப் பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரவர்களால் பல பிரதிருபங் களைக் கொண்டு பரிசோதித்து அச்சிற் பதிப்பிக்கப் பட்டது" என்னும் குறிப்பிருக்கும். ஆனால் எப்பிரதிகளை ஒப்பு நோக்கினார் என்ற குறிப்பு எந்தப் பதிப்பிலும் குறிப்பிடுவதில்லை. இதனால் நாவலர் அவர்கள் பார்வையிட்ட சுவடிகளை அறிய முடியாத நிலை உருவாகிறது.

## முடிவு

நாவலர் பதிப்பில் பல நிறை குறைகள் இருந்தாலும் அவரின் பதிப்பு நோக்கம் இதுதான் என்று வெளிப்படையாகத் தெரிகின்றது. அதாவது, ஓலைச்சுவடியிலுள்ள நூல்களை எப்படியாவது அச்சேற்றம் செய்துவிட வேண்டும். பிழையற்ற பதிப்பு கொண்டு வரவேண்டும். நூலாசிரியரின் கருத்தறிந்து அடி மாற்றம், சொற்களைத் திரித்தல் போன்ற எவ்வித மாற்றமுமின்றி மூலபாடத்தைத் தந்து திருத்தமான பதிப்பைச் செவ்விய வடிவமைப்புடன் கொண்டுவரவேண்டும் போன்ற நோக்கங்களை ஆறுமுக நாவலருடைய பதிப்புகளில் காணலாம்.

### துணை நூல்கள்

1. **ஆத்திசூடி, கொன்றைவேந்தன்,** ஆறுமுக நாவலர் (பதி.), வித்தியா நுபாலன் யாந்திரசாலை, சென்னை, 9ஆம் பதிப்பு, சர்வசித்து வருடம், சித்திரை மாதம்.

2. **இலக்கணக்கொத்து மூலமும் உரையும்,** ஆறுமுக நாவலர் (பதி.), வித்தியா நுபாலன யந்திரசாலை, சென்னை, 2ஆம் பதிப்பு, விகிர்தி வருடம், பங்குனி மாதம்.

3. **கோயிற்புராணம்,** ஆறுமுக நாவலர் (பதி.), வித்தியா நு பாலன யந்திரசாலை, சென்னை, 4ம் பதிப்பு, 1952.

4. **சூடாமணி நிகண்டு**, ஆறுமுக நாவலர் (பதி.), வித்தியாநு பாலன யந்திரசாலை, சென்னை, 2ம் பதிப்பு, விளம்பி வருடம், மார்கழி மாதம், 1898.

5. **சைவ சமய நெறி**, ஆறுமுக நாவலர் (பதி.), வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை, 7ம் பதிப்பு, இரக்தாக்ஷி வருடம், தை மாதம்.

6. **திருக்குறள் பரிமேலழகர் உரை**, ஆறுமுக நாவலர் (பதி.), வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை, 1860.

7. **திருக்கோவையார் நச்சினார்க்கினியர் உரை**, ஆறுமுக நாவலர் (பதி.), வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை, 1861.

8. **திருமுருகாற்றுப்படை**, ஆறுமுக நாவலர் (பதி.), வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை, 19ம் பதிப்பு, 1967.

9. **திருவாசகம்**, ஆறுமுக நாவலர் (பதி.), வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை, இராக்ஷச வருடம், தை மாதம், 1915.

10. **தொல்காப்பியம் சூத்திரவிருத்தி, இலக்கண விளக்கச் சூறாவளி**, ஆறுமுக நாவலர் (பதி.) வித்தியாநுபாலன யந்திர சாலை, சென்னை, 2ம் பதிப்பு, விகிர்தி வருடம், பங்குனி மாதம்.

11. **தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையம்**, ஆறுமுக நாவலர் & சி.வை. தாமோதரம் பிள்ளை (பதி.), வித்தியாநு பாலன யந்திரசாலை, சென்னை, விய வருடம், ஆனி, 1886.

12. **நன்னூல் காண்டிகையுரை**, ஆறுமுக நாவலர் (பதி.) வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை, 2ம் பதிப்பு, சுபகிருது வருடம், மார்கழி மாதம், 1902.

13. **நன்னெறி**, ஆறுமுக நாவலர் (பதி.) வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை, 3ம் பதிப்பு, இராக்ஷச வருடம், சித்திரை மாதம்.



# ஆறுமுக நாவலரின் சமயப்பணிகள்

தமிழ்நாடும் இலங்கையும் அரசியல், மொழி, சமுதாய, கலாசாரத் தொடர்பு கொண்டுள்ளன. தமிழ் ஆர்வம் கொண்டு தமிழ் வளர்த்த பெரியோர் பலரை இலங்கை ஈன்றெடுத்திருக் கிறது. சமயம், கல்வி, இலக்கியம், இலக்கணம் முதலான பல்வேறு துறைகளிலும் அவர்கள் தொண்டாற்றியுள்ளார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்கவர் இருவர்; ஒருவர் ஆறுமுக நாவலர்; மற்றொருவர் சி.வை. தாமோதரம் பிள்ளை.

## தெய்வத் தமிழ்க் குடும்பம்

சைவமும் தமிழும் சிறந்து விளங்கும் இலங்கையிலுள்ள யாழ்ப்பாணம் பெருமைப்படத்தக்க பல அறிஞர்களைத் தந்துள்ளது. இலக்கண அறிஞர் சி.வை. தாமோதரம்பிள்ளை, யாழ்இசை அறிஞர் விபுலாநந்தர், கிறித்துவக் கவிஞர் கனகசபைப் புலவர், உரையாசிரியர் கதிரைவேற்பிள்ளை போன்றோர் யாழ்ப்பாணத்தில் பிறந்த தமிழறிஞர்கள்.

சைவத் தமிழில் மிகுந்த ஈடுபாடுகொண்ட அறிஞர் யாழ்ப்பாணத்து நல்லூரில் பிறந்த கந்தப்பிள்ளை. இவர் இராம விலாசம், சந்திரகாரம் முதலிய 20 நாடகங்களை எழுதிய புலவர். கார்காத்த வேளாளர் குலத்தில் பிறந்த இவர் தனது மரபுக்கே உரிய தெய்வ பக்தியும், தமிழ்ப்புலமையும் பெற்றுத் திகழ்ந்தார். இவரது திருமகனாராய் ஆறுமுக நாவலர் பிறந்து, தெய்வத் தமிழைப் போல் வளர்ந்தார். 1822 முதல் 1889 வரை 67 ஆண்டுகள் வாழ்ந்த ஆறுமுகநாவலர் சமயச் சீர்த்திருத்தராகவே வாழ்ந்திருந்தார்.

## ஆசான் ஊட்டிய சமய உணர்வு

தந்தையார் தந்த சைவத்தமிழ் உணர்வு, மழலைப் பருவம் முதல் ஆறுமுக நாவலரைச் சமயப்பற்று கொள்ளச் செய்தது.

இளமைப்பருவத்தில் நாவலர்க்குக் கல்வி புகட்டிய இருபாலைச் சேனாதிராய முதலியார் என்னும் இவரது ஆசிரியர் பல சைவத்தமிழ் நூல்களை எழுதியவர். 'நல்லைக் குறவஞ்சி' என்ற நாடகம் அவர் எழுதியவைகளில் குறிப்பிடத்தக்க ஒன்று. சரவண முத்துப் புலவர் என்பவரிடத்திலும் நாவலர் தமிழ் கற்றார்.

பெரியபுராணம், கந்தபுராணம் முதலிய தெய்வீகக் காவியங்களையும், திருக்குறள் முதலான சங்க நூல்களையும் கற்பித்து ஆறுமுக நாவலரை ஆழ்ந்த தமிழறிவு கொண்டவராக ஆசிரியர்கள் உருவாக்கினர்.

நிலத்து இயல்பால் நீர்திரிந்தற்றாகும் மாந்தர்க்கு
இனத்துஇயல்ப தாகும் அறிவு (குறள். 452)

இல்லச் சூழலும், பயிலும் கல்விச் சூழலும் நாவலரின் தமிழறிவையும், பக்தி உணர்வையும் மேலோங்கச் செய்தன. சைவமும் தமிழும் தமது இரு விழிகளாகப் போற்றினார் நாவலர்.

**பன்மொழி அறிவும் பைபிளும்**

தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம் என்ற மும்மொழி வித்தகராய் நாவலர் விளங்கினார். எனவே, வடமொழிக் காப்பியங்களையும், ஆங்கில இலக்கியங்களையும் பிழையறக் கற்றார். அவற்றைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்க முன் வந்தார்.

> "சென்ற நூற்றாண்டில் தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பதற்கும், ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்ப்பதற்கும் வல்லவராக விளங்கினார். பைபிள் மொழிபெயர்ப்புக்குப் பெருந்துணையாக இருந்து செம்மைப்படுத்தியவர்"

என்று முனைவர் மு.வ. அவர்கள் இவரைப் பாராட்டுகிறார்.

**எழுதிய உரையும் நூல்களும்**

தமிழ் இலக்கணம், சங்க இலக்கியம், சைவ சமயப் புராணங்கள் ஆகிய மூன்று துறைகளிலும் நாவலர் ஈடுபாடு கொண்டிருந்தார். இத்துறைகளில் ஆழ்ந்து பல நூல்களைக் கற்றுத் தெளிந்து, அவற்றை யாவரும் ஏற்கும் வகையில் எளிமைப்படுத்தி எழுதினார். கடினமான பாடல்களுக்கு நுட்பமான உரைவிளக்கம் எழுதி வெளியிட்டார். விழுமிய கருத்துக்களை விழுதுகளாய் வளரும் இளையவருக்காக அழகிய முறையில் பாடங்களாய் எழுதிப் படிக்க வைத்தார்.

**கண்டனக் குரல் எழுப்பியவர்**

தனது சைவ மதத்தைப் பிறர் நிந்தனை செய்தால் அதனை ஏற்கும் சமயப் பொறை இவரிடம் இருந்தது இல்லை. எனவேதான் அநாதியாய், ஆதியும் அந்தமும் இலாத இந்தச் சைவத்தைத் தூற்றியவர் மேல் கண்டனக் குரல் எழுப்பினார். அவரது வினாக்களுக்குப் பதில் தரும் வகையில் 'கண்டன நூல்' எழுதி வெளியிட்டார். சைவம் என்ற சமய நிலை கடந்து சென்று அருட்சோதி ஆண்டவரைக் கடவுளாக வணங்கிய அருட்பிரகாச இராமலிங்க வள்ளலார் மேல் மருட்பா வழக்கு தொடுக்கும் நிலைக்கு ஆளானார்.

இவர் நைட்டிக பிரமசரியம் அநுட்டித்தவர். கல்வி அறிவு மட்டுமின்றித் தெய்வ வழிபாடும் உடையவர். சைவ நிந்தை பொறாதவர்.

> "இவர் செய்த சிறுநூல்கள் அராலி சித்திவிநாயகர் விருத்தம், நல்லை கைலாசப்பிள்ளையார் மங்கள விருத்தம், வசன நூல்கள், பெரியபுராண வசனம், பாலபாடங்கள், இலக்கணச் சுருக்கம் என்பன. இவர் தமது பொருள்களைத் தமிழ்க் கல்வி விருத்தியின் பொருட்டு உபயோகித்து வண்ணார் பண்ணை யிலும் சிதம்பரத்திலும் சைவப்பிரகாச வித்யாசாலை ஸ்தாபித்த தமிழ் அறிஞர்"

என்று அறிஞர் ஆ. சிவங்காரவேலு முதலியார் அபிதான சிந்தாமணியில் இவரைப் பாராட்டியுள்ளார்.

நாவலர் அவர்களின் சைவ சமயப்பற்று ஆழங்காண இயலாததாகவும், எதிர்ப்புகளைக் கண்டு அஞ்சாது மறுப்பு சொல்வதாகவும் அமைந்திருந்தது. தான் ஈட்டிய பொருளை யெல்லாம் சைவத் தமிழ்ப்பணிக்காகச் செலவிட்டார். பள்ளிகளை நிறுவிக் கல்வியைப் பரப்புவதும், அச்சகங்களை அமைத்து நூல்களை வெளியிடுவதும் ஆகிய பணிகளில் முழு நேரமும் ஈடுபட்டுத் தொண்டு செய்து "தமக்கென முயலா நோன் தாள், பிறர்க்கென முயலுநர் உண்மையானே" என்ற புறநானூற்று (182) வரிகளுக்குச் சான்றாய் வாழ்ந்தார்.

**பெரியபுராணத்தைப் பரப்பும் பணி**

63 நாயன்மார்களின் அருள் வரலாற்றையும், அவர் சிவன் அருள்பெறச் செய்த தொண்டு வழிகளையும் 'நாவலர்' பெரிதும்

போற்றினார். பெரியபுராணத்திற்கு யாவரும் புரிந்து கொண்டு படிக்கும் வகையில் எளிய உரை தீட்டினார்.

**உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்**
**நிலவு உலவிய நீர்மலி வேணியன்**
**அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவான்**
**மலர்சிலம்படி வாழ்த்தி வணங்கு வாம்**

என்ற சேக்கிழாரின் திருத்தொண்டர் புராண முதற்பாடலுக்குச் சிறந்த உரை எழுதினார். உலகெலாம் உணர்ந்து, ஓதிட அரியவன் சோதி வடிவில் பிழம்பாய் நின்றவனின் மலர் சிலம்படி குளிர்மையானது என்றும், ஏத்துவார் மனங்களில் ஏறி அமரும் தன்மையது என்றும் உரை எழுதினார்.

உரை எழுதுவதிலும், மொழிபெயர்ப்பு நூல் எழுதுவதிலும், பிழை இல்லாமல் மெய்ப்புத் திருத்தி நூல்களைப் பதிப்பிப்பதிலும் 'நாவலர்' வல்லவர்.

சைவ சமயத்தைப் பலரும் புரிந்து கொள்ள, 'சைவ சமயப் பால பாடம்' எழுதினார். தனது சொத்துகளை விற்று இதனைச் செய்தார். மேலும் இப்பணிக்குப் பொருள் வேண்டி வீடுவீடாகச் சென்று அரிசிப் பிச்சை எடுத்தும், அச்சகத்தை நடத்தியுள்ளார். "கற்கை நன்றே கற்கை நன்றே, பிச்சைப் புகினும் கற்கை நன்றே" என்று தமிழ் நெறிப்புலவர் அதிவீரராம பாண்டியர் நறுந் தொகையில் (35) பாடியுள்ளதைப் போல 'நாவலர்' ஏழ்மையிலும், பிறர் உதவிநாடி, பாடநூல்களை அச்சிட்டும், பாட சாலைகளை நிறுவியும் தொண்டு செய்துள்ளது குறிப்பிடத்தக்க செயலாகும்.

பழந்தமிழ்ச் சமயமான சைவத்தையும், பழந்தமிழ் இலக்கணத்தையும், விளக்கமாக உரை எழுதிப் பதிப்பித்தலும் அதுபற்றி விளக்கமாகச் சொற்பொழிவு ஆற்றுவதிலும் வல்லவராய் 'நாவலர்' விளங்கினார்.

**நாவலரின் நூல்கள்**

சைவ சமய வளர்ச்சிக்கு உதவும் நூல்கள் பலவற்றை நாவலர் எழுதினார். உரை விளக்கம் தந்த நூல்கள் ஒருவகை. அப்படியே பதிப்பித்த நூல்கள் மறுவகை. தனது கருத்தை விளக்கச் சுயமாக எழுதிய நூல்கள் மூன்றாம் வகை. வசனம் எழுதினவை நான்காம் வகை.

## உரைநடைத் தந்தை நாவலர்

உரைநடை வழியில் 'நாவலர்' செய்த நூல்கள் யாவுமே, தமிழ்கூறு நல்லுலகம் போற்றத்தக்கனவாகும்.

சைவ சமய வளர்ச்சிக்காக, 'வித்தியா நுபாலன யந்திரசாலை' எனும் அச்சகத்தை, சிதம்பரத்திலும், சென்னையிலும் நிறுவித் தன் வழி தானே பரிசோதித்து அவர் வெளியிட்ட நூல்கள் உரைநடை வளர்ச்சிக்கும், சைவத்தின் உயர்ச்சிக்கும் உதவின.

'உரைநடைத் தந்தை" என்று அறிஞர் மு.வ. அவர்கள் 'தமிழ் இலக்கிய வரலாற்றில்' நாவலர் அவர்களைப் பின்வருமாறு போற்றியுள்ளார்.

> "யாழ்ப்பாணத்துத் தமிழ் அறிஞருள் சிறப்பிடம் பெற்று விளங்கியவர் ஆறுமுக நாவலர் (கி.பி. 1822 - 1889). அவர் சில காலம் தமிழ்நாட்டுக்கு வந்து, சென்னையில் தங்கித் தமிழ்த் தொண்டு செய்தலும் உண்டு.
>
> சைவ சமயப் பற்று மிகுந்த அவர், பெரிய புராணம் முதலான நூல்கள் பரவுவதற்குப் பெரும்பணி புரிந்தார்.
>
> சென்ற நூற்றாண்டில் தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பதற்கும், ஆங்கில நூல்களைத் தமிழில் மொழி பெயர்ப்பதற்கும் வல்லவராக விளங்கினார். பைபிளின் தமிழ் மொழிபெயர்ப்புக்குப் பெருந்துணையாக இருந்து செம்மைப்படுத்தியவர் என்பர்.
>
> தமிழில் எழுத்துப்பிழை இல்லாமல் நூல்களை அச்சிட்டுத் தரும் வகையில் சிறந்த வழிகாட்டியாக விளங்கினார். மாணவர்களுக்கு உரிய தொடக்கப் பாடப் புத்தகங்களை எளிய தமிழில் - இலக்கணப் பிழை அற்ற தமிழில் - தாமே எழுதினார்.
>
> சைவ சமயத்தை விளக்கிக் கூறும் நூல்களை இயற்றினார். இலக்கணத்தை எளிதில் கற்பதற்கு உதவும் நூல்களும் எழுதினார்.
>
> சென்ற நூற்றாண்டில் தமிழில் உரைநடை வளர்ச்சி பெறத் தொடங்கிய சூழ்நிலையில், அதற்கு நல்ல வழிகாட்டிப் பிழையற்ற எளிய உரைநடைத் தமிழை வளர்த்தார்.
>
> தமிழ் உரைநடையின் தந்தை என்று அவரைக் குறிப்பிட்டுப் போற்றுதல் தகும்."

சமயக்குரவர்கள் நால்வராலும், நாயன்மார்களாலும் போற்றித் துதிக்கப்பட்ட தில்லை நகரை, நாவலரும் போற்றித் துதித்தார். நாளும் நடராஜ பெருமானை வழிபட்டுச் சிதம்பரத்தி லேயே சில நாள்கள் தங்கினார்.

சமயத்தொண்டினை இரண்டு வகையில் ஆற்ற முயன்றார் நாவலர். படிக்க நூல்களையும், படிப்பிக்கப் பள்ளிக்கூடங் களையும் ஆக்கித் தந்தார். இளைஞர்கட்கு வந்து பயிலப் பள்ளி உதவியது. எல்லா வயதினருக்கும் தந்துமகிழ நூல்கள் உதவின.

பாடசாலையையும், அச்சகசாலையையும் சென்னையிலும், சிதம்பரத்திலும் நாவலர் நிறுவினார். 'ஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவப் பிரகாச வித்தியாசாலா அறக்கட்டளை" மூலம் சிதம்பரத்தில் 'சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலை' எனும் பள்ளியை நடத்த ஏற்பாடு செய்தார். வித்யாநுபாலன அச்சகத்தை நிறுவினார். அதன் மூலம் சைவசமய நூல்களை மலிவு விலையிலும், எளிய தமிழிலும், எல்லோரும் ஏற்கும் வண்ணம் வழங்கினார்.

நடராஜ பெருமான் மேல் தனக்கு இருந்த அன்பையும், பக்தியையும் வெளிக்காட்ட 'சிதம்பரமான்மியம்" என்னும் நூலை 1867இல் வெளியிட்டார்.

### சிதம்பர மான்மியம்

ஒன்பது சருக்கங்கள் கொண்ட இந்தநூல் சிதம்பரத் தலத்தின் சிறப்புகளைச் சாற்றுகிறது.

> ஆன்மாக்கள் வழிபட்டு உய்யும் பொருட்டு, எண்ணில்லாத முக்கிய ஸ்தலங்களைப் பூமியில் வைத்தருளினார். அவை களுள்ளே, அறுபத்தெட்டுத் தலங்கள் சிறந்தன. அவ்வறுபத் தெட்டுத் தலங்களுள்ளே, திருவாரூர், காசி, சிதம்பரம் என்னும் மூன்று தலங்கள் மிகச் சிறந்தன. திருவாரூரிலே பிறந்தவர்களும், காசியிலே இறந்தவர்களும், சிதம்பரத்திலே சிவபெருமானுடைய திருவடிகளைத் தரிசித்தவர்களும் முத்தியை அடைவார்கள்.

> படைத்தல் உடுக்கையினின்றும், காத்தல் அபயகரத்தி லிருந்தும், அழித்தல் கையில் ஏந்திய அக்னியில் இருந்தும், மறைத்தல் முயலகன் மேல் ஊன்றிய பாதத்தில் இருந்தும், அருளல் எடுத்த இடது குஞ்சிதபாதத்தில் இருந்தும், ஐந்தொழில்களை ஆடிக்கொண்டே செய்கிறார் ஆடலரசர்.

தில்லை ஆலயத்தைச் சுற்றி உள்ள பத்துத் திருக்குளத் தீர்த்தங்களின் சிறப்புகள், தில்லை மூவாயிர அந்தணர் மகிமை, ஆண்டுக்கு ஆறுமுறை நிகழும் அபிஷேக உற்சவங்கள், தில்லை ஆலயத்தை வழிபடும் நியமங்கள், அதன் உட்பொருள், 'அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலத்துள் செய்ய வேண்டிய அன்ன தானங்கள், செய்யத்தகாத சிவத்துரோகங்கள் ஆகிய பற்பல ஆன்மிகச் செய்திகள் 'சிதம்பர மான்மியம்', என்னும் நூலில் விரவிக்கிடக்கின்றன.

பெரியபுராண வசனம்

தில்லையில் எல்லையிலாப் பக்தி கொண்ட நாவலர், இங்குள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் அநபாய சோழன் தலைமையில் 12ஆம் நூற்றாண்டில் அரங்கேற்றப்பட்ட 'திருத் தொண்டர் புராணத்திலும்' மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தார்.

பெரியபுராணம் செய்யுளைப் பதிப்பித்தும், பெரியபுராண வசனம், பெரியபுராண சூசனம் ஆகிய உரைநூல்களை எழுதி வெளியிட்டும், தனது பக்தியை வெளிக்காட்டினார்.

"இந்தத் தமிழ் மண்ணிலே பிறந்து, இந்தத் தமிழ் மண்ணிலே வாழ்ந்து, இந்தத் தமிழ் மண்ணிலே பக்தி நெறி தழைக்கச் செய்த நாயன்மார்களைப் பாடிய பெருங்காப்பியம், பெரியபுராணம் முற்றிலும் தமிழ்நாட்டுப் புண்ணியர்களைப் பாடிய சிறப்புமிக்க புண்ணியநூல் ஆதலால் பெரியபுராணம் 'தேசிய காப்பியம்' எனப் போற்றப்படுகிறது.

> "சேக்கிழார் தில்லையிலேயே தம் புராணத்தைப் பாடி அரங்கேற்றினார் என்பது உமாபதிசிவாசாரியர் 'திருத் தொண்டர் புராண வரலாறு' என்னும் சேக்கிழார் புராணத்துள் கூறும் வரலாறு. 'உலகெலாம்' என்று பெருமான் அடியெடுத்துக் கொடுத்தல் என்பன ஒப்புக் கொண்டால், இதை ஒப்புக் கொள்வதில் தடை எழ நியாய மில்லை. அன்றியும், தில்லையைக் குறிப்பிடும் இடத்து இவர் காட்டும் ஈடுபாடும், சொல்லும், பொருள் பொதிந்த அடைமொழிகளும், தில்லையில் அரங்கேற்றம் நடை பெற்றது என்று ஒப்புக்கொள்ளச் செய்யும். தில்லையை நூற்றுக்கணக்கான முறைகள் சொல்லுகிறார்"

என்று வரலாற்றறிஞர் மு. அருணாசலம் 'தில்லை'யில் நடந்த அரங்கேற்றத்தை உறுதி செய்கிறார்.

தில்லை ஆலயத்தின் சிறப்பினையும், பெரியபுராணச் சிறப்பினையும் 'நாவலர்' தனது நூலின் வாயிலாகவும் சொற் பொழிவின் வாயிலாகவும் நிலைபெறச் செய்துள்ளதைக் காணலாம்.

### கந்தபுராணச் செய்யுள்

நாவலர் கந்தபுராணத்தைப் பற்றிச் சொற்பொழிவு செய்வதில் நாவன்மை கொண்டிருந்தார். தமிழ்க்கடவுளாகிய முருகனது வரலாற்றைக் கச்சியப்ப சிவாச்சாரியர் காஞ்சியிலுள்ள குமரக்கோட்ட ஆலயத்தில் அரங்கேற்றியதையும், அதில் 'திகட சக்கரம்' எனும் புணர்ச்சி இலக்கண விதி கூற முருகனே முன்வந்து நின்றதையும் கூறிக் கேட்பவர் உள்ளங்களில் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட நெகிழும் வண்ணம் உரையாற்றுவார்.

கந்தபுராணச் செய்யுளை இருபாகங்களாகப் பதிப்பித்து வெளியிட்டார். இந்த நூலே நாவலரால் முதன்முதல் அச்சிடப் பட்ட நூல் ஆகும்.

> "சிவபுராணங்களிற் சிறந்தது, இன்சுவை அளிப்பது, பக்தியை விளைப்பது தினந்தோறும் 'பாராயணத்திற்குரியது. இந்நூலை ஒருவர் முறையாகப் படித்தால், எல்லா விஷயங்களையும் அறிந்த பண்டிதராவர்"

என்று அவர் தனது பிரகடனப் பத்திரத்தில் வெளியிட்டுள்ளார்.

### கந்தபுராண வசனம்

புலவர்களும், படித்தவர்களுமே கந்த புராணச் செய்யுளைப் படித்து உணரமுடியும். பாமர மனிதர் வேலவன் கதையை அறிய நாவலர் 'கந்த புராண வசனம்' உரைநடை நூலை எழுதினார்.

கந்தபுராண வசனத்தில் ஒருசிறு பகுதியே இவரால் எழுதமுடிந்தது. இவர் விட்ட பணியை இவரது மாணவர்கள் பூர்த்தி செய்து நூலாக வெளியிட்டனர்.

### பெரியபுராண சூசனம்

பெரிய பெரிய கருத்துக்களையும், நாயன்மார்களின் கதைகளையும் 'பெரிய புராணம்' பேசுகிறது. 63 நாயன்மார்கள் 9 தொகை அடியார்கள் பற்றிய விரிவான செய்திகளைப் பெரிய புராண வசனம் என்ற உரைநடை நூலாக நாவலர் எழுதி வெளி

யிட்டார். தமிழ் வசன நடைக்கு இந்த நூல் முன்னோடியாகவும், வழிகாட்டியாகவும் அமைந்தது.

இலங்கையில் உள்ள தமிழ்ப் பாடசாலைகளில் 'பெரிய புராண வசனம்' பாடப்புத்தகமாக வைக்கப்பட்டது. மாணவர்கள் விரும்பிக் கற்றனர். இவரது வசன நூலுக்குப் பின்னர்ப் பலவசன நூல்கள் பெரியபுராணத்திற்கு வந்தும், 'நாவலர்' நூலுக்குத் தனிஇடம் இருந்தது. பெரியபுராணத்தில் ஆழ்ந்துள்ள சைவ சித்தாந்த சாத்திரக் கருத்துக்களைச் சுருக்கமாக விளக்க வேண்டிப் 'பெரிய புராண சூசனம்' என்னும் சிறுநூலை 12 அணா விலையில் வெளியிட்டார். இந்த நூலின் பிற்பகுதியையும் அவர் முடிக்க முடியாமல் போனது. அதையும் இவரது மாணாக்கர் முடித்து வெளியிட்டனர்.

### திருவிளையாடற் புராண வசனம்

ஆலவாய் எனப் போற்றத்தகும் மதுரை மாநகரில் சிவபெருமான் செய்த 64 திருவிளையாடல்களைப் பரஞ்சோதி முனிவர் 'திருவிளையாடற் புராணம்' என்ற தெய்வீக இலக்கிய மாகப் பாடியுள்ளார். சைவத் தமிழையும், சித்தாந்தக் கருத்துக் களையும் கொண்டது இந்நூல். தமிழின் பெருமையினை வீறு கொண்டு விளம்பும் இந்நூலின் மதுரைக் காண்டம், கூடல் காண்டம், திருவாலவாய்க் காண்டம் ஆகியன பற்றி 'நாவலர்' வசன நடையில் சிறப்புடன் விளக்கியுள்ளார்.

குதிரைகளின் இலக்கணம், இரத்தின இலக்கணம் முதலான அரிய செய்திகளையும் வெளிப்படுத்தியுள்ளார்.

கி.பி. 16ஆம் நூற்றாண்டில் தோன்றிய பரஞ்சோதி முனிவரின் வடமொழித் தென்மொழிப் புலமையினையும், பக்தி நயங்களையும், பதி, பசு, பாசமாகிய முப்பொருள் உண்மையி னையும் நாவலர், யாவரும் அறியும் வண்ணம் உரைநடைத் தமிழில் தெளிவுடன் விளக்கியுள்ளார்.

### சேது புராணம்

இராமன் இராவணனை வதை செய்ய இலங்கை நோக்கிச் சென்றான். வழியில் நளன் என்னும் வானரத் தச்சன், குரங்குகளைக் கொண்டு கட்டிய அணை மூன்று நாளில் கட்டி முடிக்கப் பட்டது. சேது அணை இராமேசுவரத்தையும் இலங்கையையும்

இணைக்கிறது. அருள்மிகு இராமநாதர்; பர்வதவர்த்தினி ஆலயம் விளங்கும் இந்த இராமேசுவரத்தின் புனிதத்தைப் பற்றி 'நிரம்ப அழகிய தேவர்' என்னும் புலவர் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் பாடியது சேது புராணம். திருமறைக் காட்டில் தோன்றி, கருணை ஞானப் பிரகாசரிடம் சிவதீட்சை பெற்று, மதுரையில் வாழ்ந்த இவர், பரஞ்சோதி முனிவரின் இனிய நண்பர்.

சேது புராணத்தைப் பதிப்பித்த நாவலர் இராமேசுவரத்தின் புனிதத்தைப் பட்டியலிட்டுக் கூறுகிறார். தீர்த்தங்கள் பலவற்றின் பெயர்களும், கடலின் சிறப்பும், இராமன் சீதையின் மூலமாக இங்கு அமைத்த இலிங்கத்தின் சிறப்புகளையும், சைவ சித்தாந்தப் பேருண்மைகளையும் வெளியிட்டுள்ளார்.

இராமநாதபுர சமஸ்தான அதிபராய் இருந்த பொன்னு சாமித் தேவர் வேண்டுகோளின்படி நாவலர் இந்த நூலை அச்சிட்டு வெளியிட்டதை இதில் குறிப்பிட்டுள்ளார்.

**பெரிய நாயகியம்மை விருத்தம்**

1955இல் வெளியான இந்நூலின் முதல் பக்கச் செய்திகள் இங்கே கொடுக்கப்பட்டுள்ளன.

எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்த யாப்பில் அமைந்த இந்த நூலை 'நாவலர்' உரை எழுதத் தொடங்கி முடியப் பெறாமையால் திரு. க.வ. திருவேங்கட நாயுடுவைக் கொண்டு எழுத வைத்துப் பதிப்பித்தார். சிவமணம் கமழும் வகையில் இந்த நூலினை நாவலர் பதிப்பித்துள்ளார்.

**சைவ சமய நெறி**

சிதம்பரம் மறைஞான சம்பந்தர் அருளிச்செய்த 'சைவ சமய நெறி' என்னும் தலைப்பில் அமைந்த 727 திருக்குறள் யாப்பில் எழுந்த பாடல்களுக்கு 'நாவலர்' சைவ சமயநெறியுரை எழுதியுள்ளமை, சைவ உலகம் போற்றத்தக்கதோர் செயலாகும்.

310 பக்கங்களில், நல்ல கட்டமைப்புடன், யாவரும் ஏற்கும் வகையில் நாவலர் உரை எழுதி 1955இல் 1 ரூபாய் 4 அணாவிற்கு, சென்னை, 300 தங்கசாலைத் தெருவில் தான் அமைத்த வித்தியா நுபாலன யந்திரசாலையில் அச்சிட்டு வழங்கியுள்ளார்.

மறைஞான சம்பந்தரின் குறளுக்கு நாவலர் உரை எழுதுகையில்,

கணபதி துணை

துறைமங்கலம்

சிவப்பிரகாச சுவாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# பெரியநாயகியம்மை விருத்தம்
# பிக்ஷாடன நவமணிமாலை

(உரையுடன்)

யாழ்ப்பாணத்து நல்லூர்
ஆறுமுக நாவலரவர்கள்
சிதம்பரசைவப்பிரகாச வித்தியாசாலைத்
தருமபரிபாலகர்
ச. பொன்னுஸ்வாமி அவர்களால்

சென்னை
வித்தியாநுபாலன யந்திரசாலையில் அச்சிடப்பட்டன

அக்டோபர் 1955 விலை அணா 4

"நல்லார் தொழும் வெண்ணெய் நல்லூர்ச் சிவாலயத்துட் பொல்லார் தாள் - எண்வகைப் பத்திகளையுடைய நல்லோர்கள் வணங்கா நின்ற திருவெண்ணெய் நல்லூரின் கணுள்ள சிவாலயத்தில் எழுந்தருளியிருக்கும் பொல்லாப் பிள்ளையாருடைய திருவடிகளே - யாம் ஆடும் போது - யாஞ் சிரசின்மேல் சூடும் மலர்களாம் என்றவாறு"

என்று உரை எழுதி "தொண்டரடி" எனத் தொடங்கும் திருத் தொண்டர் புராண சாரப் பாடலையும் மேற்கோள்காட்டி விளக்கியுள்ளார்.

நாவலர் இந்த 727 மறைஞானக் குறளிலும் உள்ள சைவ தத்துவ நெறியினை விளக்கிய திறம் போற்றுதற்குரியது.

**சைவ சமயத்தின் உட்பொருள்**

அச்சக்சாலை தில்லையிலும், சென்னையிலும் நிறுவியும், பாடசாலை தில்லையில் நிறுவியும் தொண்டின் வழியே சைவ சமயத்தை நாவலர் நிலைபெறச் செய்தார்.

பாடசாலை நிறுவியதோடு நில்லாமல், பாடநூல்களைத் தெய்வத் தமிழோடு தமிழ்மணம் கமழ அச்சிட்டுத் தந்த சிறப்பு நாவலருக்கே உரியதாகும்.

எவ்வுயிரும் பராபரன் சந்நியதாகும்
இலங்கும் உயிர் உடலனைத்தும் ஈசன் கோயில்
- சிவஞான தீபம்

சி என்பது சூரியகலை என்றும், வ என்பது சந்திர கலை என்றும் யோக நூல்கள் கூறும். சிவம் என்பது கடவுள் இயல்புகள் எல்லாவற்றையும் தன்னகத்தே அடக்கியுள்ள ஒரு பெருஞ் சொல்லாகலான், அதுவே சிறப்பாகச் சைவ நன்மக்களாலும் மற்றவர்களாலும் கொள்ளப்பட்டது. இச் சிவசம்பந்தமுடைய சமயமும் சைவம் என்னும் பெயர்பெற்றது.

திரு.வி.க. அவர்களின் கருத்துப்படியே நாவலரும் பொதுமை காணும் சைவப்பற்றுக் கொண்டிருந்தார். பைபிளின் தமிழ் மொழிபெயர்ப்புக்கும் துணை நின்றார். சைவ நூல்களையும் அச்சிட்டு வெளியிட்டார்.

"ஏடுதூக்கிப் பள்ளி செல்லும் சிறுவரே, நாடுவிக்கும் தலைவராக நாளை வரப்போகிறார்" என்று குழந்தைக் கவிஞர்

அழ. வள்ளியப்பா பாடினார். அதுபோல நாளைய இளைய தலைமுறை, தமிழரின் பண்பாடு, சமயத்தை உணரும் வகையில் நாவலர் பிள்ளைகளுக்குப் 'பாலபாடங்கள்' எழுதினார்.

"பிராதக்காலப் பிரார்த்தனம் (காலை நேர இறை வழிபாடு, சாயங்காலப் பிரார்த்தனம் (மாலை நேர வழிபாடு)" என்று இறைமணம் கமழ முதல் பாலபாடத்தின் முதல் பாடத்தைத் தந்துள்ளார்.

பழந்தமிழ் மக்களின் சமய நிலையை ஆய்ந்த அறிஞர் பலர் 'சைவமே' மிகவும் பழங்காலந்தொட்டுத் தமிழர் பின்பற்றி வந்ததைக் கூறியுள்ளனர்.

அறிஞர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் பழந்தமிழ் மக்களின் சமயநிலையை ஆய்ந்து கூறியுள்ள கருத்து இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

> "யாண்டும் சிவபெருமானே முதலில்வைத்துக் கூறப்படு கின்றார். அன்றியும், அவர் பிறவா யாக்கைப் பெரியோன் எனவும், பகவன் எனவும் இறையோன் எனவும், தலைமைத் தோன்றக் கூறப்படுதலும் சிந்திக்கற் பாலது? வேறிடங்களில் இன்னும் வெளிப்படையாகவும் சிவபிரானுக்கு முதன்மை கூறப் பெற்றுள்ளது.
>
> **"நீரும் நிலனும் தீயும் வளியும்**
> **மாக விசும்போடு ஐந்துடன் இயற்றிய**
> **மழுவாள் நெடியோன் தலைவனாக**
> **மாசற விளங்கிய யாக்கையர்"**
>
> என மாங்குடி மருதனார் மதுரைக் காஞ்சியில் பாடியுள்ளார்.
>
> **"நுதல் விழி நாட்டத்து இறையோன் முதலாப்**
> **பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் ஈறாக"**
>
> எனக் கூலவாணிகன் சாத்தனார் மணிமேகலையிலும் கூறியிருத்தல் நோக்குக.
>
> இவ்வாற்றான் தொன்றுதொட்டுத் தமிழ் மக்கள் முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபட்டு வந்த தெய்வம் சிவபெருமானே என்பது வெள்ளிடை மலைபோல் தெள்ளிதின் விளங்கும்"

நாவலர் அவர்கள் பாலபாடங்கள் பல எழுதி, சைவத் தமிழ்ப் பற்றினையும், சிவபக்தியையும் வளர்த்தார் என்பதற்கு, ந.மு.வே. நாட்டார் அவர்கள் எடுத்துக்காட்டியுள்ளபடி, தொன்று தொட்டுத் தமிழ் மக்களின் முழுமுதற் கடவுளாகச் 'சிவன்' வழிபடப் பட்டு வந்ததே காரணமாகும்.

இரண்டாம் பாலபாடத்தில் மாணிக்கவாசகரின் வரலாறு மாணவர் ஏற்கும் வகையில் நிறைவாக, விரிவாகத் தரப் பட்டுள்ளது. நான்காம் பாலபாடத்தில், அருள், ஆசிரமம், ஆன்மா, இரசவாதம், ஈசுரத்துரோகம், கடவுள், கடவுள் வழிபாடு, சிரோத்தம், தமிழ், தமிழ்ப்புலமை, தருமம், தானம், தேவாலய தரிசனம், தேவாலயம், நல்லொழுக்கம், பசுக்காத்தல், புராண படனம், மடம், வியாதி தீர்த்தல் முதலான தலைப்புகள் முதல் பிரிவுகளில் அணி செய்கின்றன.

கந்தபுராணம், பெரியபுராணம், மகாபாரதம் ஆகியவற்றி லிருந்து இன்றியமையாச் செய்யுள்களும், பதவுரைகளும் இரண்டாம் பிரிவில் அடங்குகின்றன.

கடவுள் வழிபாடு பற்றிய இவர் கொள்கை

"கடவுளால் விரும்பப்படுபவைகளாவன: இரக்கம், வாய்மை, பொறை, அடக்கம், கொடை, தாய், தந்தை முதலிய பெரியோரை வழிபடுதல் முதலிய நன்மைகளாம். கடவுளால் வெறுக்கப்படுபவைக ளாவன: கொலை, புலாலுணவு, களவு, கள்ளுணல், வியபசாரம், பொய், செய்ந்நன்றி, மறத்தல் முதலிய தீமைகளாம்."

**'மருட்பா' வழக்கு**

பல்வகைச் சமயங்கள் தத்தம் சமயமே சிறந்தது என வாதிடும் பழக்கம் சங்ககாலம் முதலே இருந்து வந்திருக்கிறது.

**"ஒட்டிய சமயத்து ஊறுபொருள் வாதிகள்**
**பட்டி மண்டபத்துப் பாங்கறிந்து ஏறுமின்"**

என்று மணிமேகலைக் காப்பியம், சமயவிவாதங்கள் நடந்ததற்குச் சான்று கூறுகிறது. பிற மதங்கள் மட்டுமின்றி ஒரு மதத்திற் குள்ளேயே ஒருவர் கருத்துக்கு மறுப்புக் கூறி எதிர்க்கும் வழக்கம் இருந்துள்ளது.

'நாவலர்' பிறந்து வளர்ந்த இலங்கை மண்ணில் இத்தகு, சமயத் தொடர்பான மறுப்பு நூல்கள், கண்டன நூல்கள் தோன்றியிருந்தன.

'ஞானக்கும்மி' என்ற நூலுக்கு எதிர்ப்பாக 'அஞ்ஞானக் கும்பி' என்ற நூல் கண்டன நூலாக வெளிவந்துள்ளது. அஞ்ஞானக் கும்மிக்கும் மறுப்பு நூலாக 'அஞ்ஞானக்கும்மி மறுப்பு' இயற்றப்பட்டுள்ளது. 'சிவனும் தேவனா' என்ற நூலுக்குக் கண்டனம் தெரிவித்து, "சிவனும் தேவனா என்னும் தீய நாவுக்கு ஆப்பு" என்ற நூல் எழுந்தது.

யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர், கதிரைவேற்பிள்ளை முதலியவர்களும் கண்டன நூல்கள் எழுதியுள்ளனர்.

கதிரைவேற்பிள்ளை, 'அருட்பா அன்று மருட்பா' என்ற கண்டன நூல் எழுதினார்.

மறுப்புகளும், எதிர்ப்புகளும், கண்டன நூல்களும் மலிந்திருந்த காலம் அது. இராமலிங்க வள்ளலார்மேல் 'நாவலர்' 'மருட்பா' வழக்குத் தொடுத்தார்.

தவத்திரு ஊரன் அடிகளார் ஆராய்ந்து எழுதிய 'இராமலிங்க அடிகள் வரலாறு' என்னும் நூலில் இந்த வாதங்களையும் வழக்குகளையும் விரிவாக எழுதியுள்ளார். அதனை மேலே காண்போம்.

### அருட்பா மருட்பா வாதம்

அடிகளின் பாடல் திரட்டிற்குத் 'திருவருட்பா எனப் பெயரிட்டதும், அதன் பகுதிகளுக்குத் 'திருமுறை' எனப் பெயரிட்டதும், அடிகளைத் திருவருட் பிரகாச வள்ளலார் என வழங்கியதும் ஆறுமுக நாவலருக்கு உடன்பாடில்லை. அடிகளது பாடல்கள் அருட்பாக்கள் அன்று என்பதும் அவை மருட்பாக்கள் என்பதும், ஆதலின் திருவருட்பா என்னும் பெயர் அடிகளின் பாடல் தொகுதிக்குப் பொருந்தாது என்பதும் நாவலரின் வாதம்.

பட்டினத்தார் பாடற்றிரட்டு, குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு, தாயுமானவர் பாடற் றிரட்டு என்பன போன்று அடிகள் பாடல் தொகுதியும் 'இராமலிங்கம் பிள்ளை பாடல் திரட்டு' என்றோ, அல்லது 'இராமலிங்கம் பிள்ளை பிரபந்தத் திரட்டு' என்றோ வழங்கப்படவேண்டும் என்பது நாவலர் கருத்து.

திருமுறை என வழங்கத்தக்கவை பன்னிரு திருமுறைகளே என்பதும், வேறு எவற்றையும் திருமுறை என்னும் பெயரால் வழங்கக் கூடாது என்பதும் நாவலர் கொள்கை.

பழுத்த சைவராகிய ஆறுமுக நாவலருக்கு வள்ளற் பெருமானின் சமரச சன்மார்க்கக் கொள்கைகள் பிடிக்கவில்ல. அடிகளின் சீர்திருத்தக் கொள்கைகள் புறச்சமயத்தார்களுக்கு, முக்கியமாகக் கிறித்தவர்களுக்கு இடங்கொடுப்பதாக உள்ளனவென்று அவர் கருதினார். இக்காரணங்களால் வள்ளற் பெருமானின் மீது நாவலருக்கு ஒருவகை வெறுப்பு உண்டாயிற்று.

பெருமானையும் திருவருட்பாவையும் தூற்றி எழுதுபவ ரானார். 'போலியருட்பா மறுப்பு' என்று ஒரு கட்டுரையை எழுதி மாமண்டூர் தியாகேச முதலியார் பேரால் பதிப்பித்து 1868இல் வெளியிட்டார்.

நாவலர் எழுதிய 'போலியருட்பா மறுப்பு'க்கு மறுப்பாகப் 'போலி அருட்பா மறுப்பின் கண்டனம்' அல்லது 'குதர்க்காரண்ய நாச மஹாபரசு' என்னும் நூலைத் தொழுவூர் வேலாயுத முதலியார் எழுதினார்.

பிற்காலத்தில் இரண்டு பக்கமிருந்தும், பின்னும், சில மறுப்புகளும் கண்டனங்களும் வெளிவந்தன.

19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி புலவர்களிடையே வாதங்கள் மலிந்திருந்த காலம். ஏதாவது ஒரு வாதத்தில் கலக்காத புலவர்கள் புலவர்களாகவே மதிக்கப்படாத காலம். அருட்பா மருட்பா வாதங்கள் பின்னாளில் ஓய்ந்தன. மருட்பா வாதம் செத்தது. அவை அருட்பாக்களே என்னும் உண்மை நிலை பெற்றது.

### நாவலர் தொடுத்த வழக்கு

வாதத்தால் பயனில்லை என்றுணர்ந்த நாவலர் வழக்குத் தொடுக்கலானார்.

வள்ளற்பெருமான் சிதம்பரத்தில் செய்த சொற்பொழிவு ஒன்றில் தம்மைத் தூற்றியதாகவும், அவரும் அவரோடு சேர்ந்தவர்களும் தம்மை அடிக்கத் திட்டமிட்டிருப்பதாகவும் மஞ்சக்குப்பம் நீதிமன்றத்தில் 1869ஆம் ஆண்டில் வள்ளல் பெருமான் மீது நாவலர் ஒரு குற்ற (Criminal) வழக்குத் தொடுத்தார்.

நாவலர் வாதி; வள்ளற்பெருமான் பிரதிவாதி. யாழ்ப்பாணம் சௌந்தர நாயகம்பிள்ளை என்னும் வழக்கறிஞரை நாவலர் தம் பக்கத்தில் அமர்த்தியிருந்தார். வள்ளற் பெருமானுக்காக வழக்கறிஞர் அமர்த்தப்படவில்லை.

வழக்கு கேள்விக்கு (Hearing) எடுத்துக் கொள்ளப்பட்டது. வாதி, பிரதிவாதிகளுக்கு அழைப்பாணைகள் (சம்மன்) பிறப்பிக்கப்பட்டன. அடிகள் அழைப்பாணயை ஏற்று வழக்கின் கேள்வி நாளன்று நீதிமன்றத்திற்கு வந்தார்.

வழக்கு நடப்பதை வேடிக்கை பார்க்க நீதிமன்றத்தில் பெருங்கூட்டம் கூடியிருந்தது. விசாரணை தொடங்கும்நேரம் வந்தது. நீதிபதி தன் இருக்கையில் அமர்ந்தார். வாதியாகிய நாவலரும் ஓரிடத்தில் அமர்ந்திருந்தார்.

பிரதிவாதியை அழைக்க நீதிபதி கட்டளை இட்டார். நீதிமன்றச் சேவகன் பிரதிவாதியாகிய வள்ளற் பெருமானைப் பெயர் சொல்லி அழைத்தான்.

பெருமான் மன்றத்துக்குள் புகுந்தார். உடனே அங்குக் கூட்டமாக நின்றிருந்தவர் எல்லாம் வழிவிட்டு விலகினர். அமர்ந்திருந்தவர் எல்லாம் எழுந்து நின்று கைகூப்பினர்.

ஒருபால் அமர்ந்திருந்த நாவலரும் எழுந்து நின்று கை கூப்பினார். நீதிபதியும் தன் இருக்கையினின்றும் பாதி எழுந்து விட்டார். நீதிமன்றத்திற்கு எவ்வளவு பெரியவர் வரினும் நீதிபதி எழுந்திருத்தல் வழக்கமன்று. வள்ளற்பெருமானைக் கண்டவுடன் தன்னை அறியாமலே நீதிபதியும் எழலானார். பின்னர் நீதிபதி அமர்தற்குரியாரை அமரச் செய்து வள்ளற் பெருமானையும் அமரும்படிக் கேட்டுக்கொண்டு வழக்கு விசாரணையைத் தொடங்கினார். வாதி விசாரணை தொடங்கிற்று.

**நீதிபதி :** வாதியாகிய நீர் பிரதிவாதி நுழைந்தபோது எழுந்து நின்றது ஏன்?

**நாவலர் :** எல்லோரும் எழுந்து நின்றார்கள். நானும் எழுந்து நின்றேன்.

**நீதிபதி :** எல்லாரும் ஏன் எழுந்து நின்றார்கள்?

**நாவலர் :** பெரியவர் வருகிறாரே என்று எழுந்து நின்றார்கள்.

**நீதிபதி :** நீர் எதற்காக எழுந்து நின்றீர்?

நாவலர் : நானும் அதற்காகத்தான் எழுந்து நின்றேன்.

நீதிபதி : பெரியவர் வருகிறார் என்பதற்காகத்தானே.

நாவலர் : ஆம்.

நீதிபதி : பிரதிவாதியைப் பெரியவர் என்று நீரே ஒப்புக் கொள்கிறீர். அமர்ந்திருந்த நீர் பிரதிவாதி கோர்ட்டில் நுழைந்த போது எழுந்து நின்றீர். அதனோடு அன்றிக் கையையும் கூப்பினீர். பிரதிவாதியைப் பெரியவர் என்று ஒப்பும் நீர் வழக்குத் தொடர்ந்திருக்க வேண்டாம். வழக்குத் தொடுத்த நீர் உமது கட்சி உண்மையாயிருக்கும் பக்கத்தில் பிரதிவாதியைக் கண்டு எழுந்து நிற்க வேண்டாம். உமது கட்சியில் உண்மை இல்லை என்பது நம்முன் நிகழ்ந்த உமது செய்கையாலேயே தெளிவாகிவிட்டது. ஆகவே வழக்கைத் தள்ளுபடி செய்கிறோம்.

இவ்வாறு தீர்ப்பளித்து நீதிபதி இருக்கையினின்று எழுந்து தனியறைக்குச் சென்று விட்டார். கோர்ட் கலைந்தது. உண்மை வென்றது.

நாவலரும் வள்ளலாரும்

நாவலரது தமிழ்த்தொண்டுகளும், சைவத் தொண்டுகளும் சிறந்தனவே. அவரது வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரே ஒரு இரங்கத் தக்க நிகழ்ச்சி அவர் வள்ளற் பெருமான் திறத்தில் அபசாரப்பட்ட தேயாகும். வள்ளற் பெருமானை உணர்ந்து கொள்ளக் கூடிய பக்குவம் நாவலர்க்கு இல்லை.

இந்த நிகழ்ச்சியால் நாவலரின் துணிவும், சைவத் திரு முறைகளின் பெயரைக் காக்கும் நோக்கமும் விளங்கியது. ஆயினும் வள்ளற் பெருமான் மேல் அவர் காட்டிய அன்பும் மரியாதையும் எதிர்ப்பை மீறி நமக்கு விளங்குகின்றன.

நாவலர் காட்டும் நல்வழி

நிறைவாக ஆறுமுக நாவலரின் சமயப் பணிகளால் அறியத்தக்க செய்திகளைக் காண்போம்.

1. சைவ சமயத்தை இலங்கையிலும், தமிழகத்திலும் வளர்க்கத் துணை நின்றவர்.

2. பாடசாலை அமைத்தும், அச்சக சாலை அமைத்தும், தன் வாணாள் முழுதும் சேமித்த செல்வத்தையெல்லாம் சேவை செய்துள்ளார்.

3. வீடுதோறும் சென்று அரிசிப்பிச்சை கேட்டும், அதன் தொகையால் அச்சகத்தில் சைவ நூல்களை அச்சிட்டுள்ளார்.

4. எதிர்வரும் தலைமுறையான குழந்தைகள் மனவளம் பெற்று வளர, சைவத் தமிழைப் பாலபாடங்களாக, எளிமைப்படுத்தி எழுதி வழங்கியுள்ளார்.

5. பெரியவர்கள் சைவ சமயத்தை அறிய வினாவிடை நூல்களும், கந்த புராணம், பெரிய புராணம், திருவிளையாடற் புராணங் களை வசன நடையில் எழுதி, தானே மலிவு விலையில் வழங்கியுள்ளார்.

6. வள்ளலார் எழுதியவை மருட்பா என வழக்குத் தொடுத்துத் தோற்றாலும், வள்ளலார் அருளாளர் என உலகுக்கு எடுத்துக் காட்டி ஏற்றம் பெற்றுள்ளார்.

7. தன்னலம் கருதாத் தியாகியாக, பிரமச்சரியத்துடன் வாழ்ந்து உடல், பொருள், ஆவி அனைத்தையும், சைவமும் தமிழும் வளரத் தந்த கொடையாளர் ஆறுமுக நாவலர்.

### துணை நூல்கள்


1. தமிழ் இலக்கிய வரலாறு – டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், நறுமலர்ப் பதிப்பகம், 1978, ப. 253.

2. தமிழ் இலக்கிய வரலாறு – மு. வரதராசன், சாகித்திய அகாதெமி, புதுதில்லி, 1980, ப. 250.

3. தமிழ் இலக்கிய அகராதி, வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார், சென்டரல் புக் டிப்போ, 1957, ப. 562.

4. அபிதான சிந்தாமணி, ஆ. சிங்காரவேலு முதலியார், ஏசியன் எசுகேஷனல் சர்வீசஸஸ், புதுதில்லி, 1983,ப. 143.

5. சிதம்பரமான்மியம், ஸ்ரீ ஆறுமுக நாவலர், 1967, ப. 1.

6. பன்னிருதிருமுறைகள், உரையாசிரியர் புலவர் அ. மாணிக்கனார், பாகம். 19, வர்த்தமானன் பதிப்பகம், 1998, ப. 3.

7. சேக்கிழார், மு. அருணாசலம், காந்தி வித்தியாலயம், 1972, ப. 20.

8. பெரியநாயகியம்மை விருத்தம், பிக்ஷடான நவமணி மாலை, ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர், 1955, ப. 37.

9. சைவ சமய நெறி, ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர், 1955, ப. 1.

10. திருமந்திரம், திருமூலர், திருப்பனந்தாள் பதிப்பு, 1976, பாடல் 2397.

11. சைவத்தின் சமரசம், திரு.வி.க. 1944, ப. 24.

12. பாலபாடம், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர், வித்தியாநுபாலன அச்சகம், பதிப்பு 1978, ப. 34.

13. கட்டுரைத் திரட்டு, பகுதி 2, ந.மு. வேங்கடசாமிநாட்டார், 1951, ப. 34.

14. பாலபாடம், மூன்றாம் புத்தகம், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர், 1955, ப. 6.

15. பாலபாடம், நான்காம் புத்தகம், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர், 1969, ப. 7.

16. இராமலிங்க அடிகள் திருவரலாறு, ஊரன் அடிகள், 1976, ப. 455.



# வரலாற்றுப் பின்னணியில் ஆறுமுக நாவலர்

எந்த ஓர் ஆய்வையும் வரலாற்றுப் பின்னணியோடு பார்க்கின்றபோதுதான் அதன் உண்மையான நிலைகளும் முழுமையான விளக்கங்களும் விரிவான சூழல்களும் வெளிப் படுகின்றன. நடந்தவை நடந்தவையாகவே இருக்கட்டுமே என விட்டு விடக்கூடாது. அதனைச் சீர்தூக்கிப் பார்த்து நிறை குறைகளை அறிந்து எதிர்வரும் காலத்தில் எதையும் செம்மை யாகச் செய்ய வழி காண வேண்டும். ஒன்றன் வரலாற்றுச் சூழல் தெரிந்தால்தான், முன் நடந்தவற்றை உள்வாங்கிக் கொண்டு, தற்போது நடக்க வேண்டியதைச் செம்மைப்படுத்திக் கொள்ளவும், எதிரது போற்றவும் முடியும். இதனால்தான் பிரான்ஸிஸ் பெகான் (Francis Bacon) எனும் வரலாற்று அறிஞர் "History is a discipline which makes men wise" என்று கூறுவார். இந்த அடிப்படையில் ஆறுமுக நாவலர் கால வரலாற்றுச் சூழலைப் பற்றியும், அச்சூழலில் அவர் ஆற்றிய தொண்டுகள் பற்றியும் ஆராய்ந்து நிற்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சங்ககாலச் சமுதாயத்தில் அகத்தையும் புறத்தையும் வேறுபடுத்தி உணர்த்துவதற்குத்தான் அகப்புற இலக்கியங்கள் தோன்றின. சங்கம் மறுவிய காலத்தில் எது அறம்? எது மறம்? எனச் சமுதாயம் மயங்கிய போது திருக்குறள் தோன்றியது. ஆறாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை பிற சமயங்களின் தாக்கத்திலிருந்து சைவத்தையும் வைணவத்தையும் காப்பாற்றும் வரலாற்றுப் பின்னணியில்தான் பக்தி இலக்கியங்கள் தோன்றின. பத்தாம் நூற்றாண்டில் வாழ்வியல் மெய்விளக்கங்களைப் பட்டினத்தடிகள் விளக்கினார். பதினோராம் நூற்றாண்டில் சைவர் சமுதாய வரலாற்றைச் சேக்கிழார் தொகுத்தார். 13-14ஆம் நூற்றாண்டுகளில் மெய்விளக்க நூல்கள் தோன்றிச் சமயக் கோட்பாடுகளைச் செம்மையாக்கின.

இப்படி ஒவ்வொரு நூற்றாண்டிலும் சமுதாயத் தேவைகளை முழுமை செய்யப் பற்பல அறிஞர்கள் தோன்றினர். அந்த வரிசையில் 18ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வந்தவர்களில் தில்லையை மையமாகக் கொண்டு, தமிழ்ப் பணியும் சைவப் பணியும் ஆற்றியவர்களில் சிறந்தவர்களாக வள்ளலார் இராமலிங்க அடிகளையும், தவத்திரு ஆறுமுக நாவலரையும் அறிஞர் பலர் சுட்டுவதைக் காணலாம். இவ் இருவருள் இராமலிங்க அடிகள் சைவ சமய வளர்ச்சிக்காகத் திருவருட்பாவை அன்றைய சமுதாயத்திற்கு வழங்கியவர். பசிப்பிணி போக்க இயக்கம் தோற்றியவர். வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடியவர். அனைவரும் தாம் பெற்ற இன்பம் பிறரும் பெற வேண்டி இறைவனை வேண்டியவர்.

ஆனால், ஆறுமுகநாவலர் சைவத்தைப் பரப்ப, சைவ வினாவிடை எழுதி, எளிமையும் செம்மையும் ஒருசேர அமையு மாறு செய்தவர். தமிழ்மொழி வளர்ச்சிக்குப் பாடுபட்டவர். பாலபாடமெனும் கலைத்திட்டம் (Curriculam) முதன்முதலில் தமிழுக்கு ஆக்கியவர். இலக்கண உரைபல செய்தவர். சைவ சித்தாந்தத்தில் வல்லவர். சைவ நெறியில் சற்றுப் புதுமைகாண நினைத்த வள்ளலாரை எதிர்த்துச் சித்தாந்த நுட்பங்களைத் தெளிவுபடுத்தியவர். சைவ சித்தாந்தமே உயர்வுடையதென நிலைநாட்டியவர். இவர்தம் படைப்புக்கள் யாவையும் தமிழ்ச் சமுதாயம், மொழி, சமயம் ஆகியவற்றின் மேம்பாட்டை நோக்கியனவாகவே அமைந்தன. இவரது பணிகளுக்குக் காரணமான வரலாற்றுப் பின்னணிகளைக் காண விழைவதே இவண் நோக்கமாகும்.

### வரலாற்றுப் பின்னணி

ஆறுமுக நாவலர் காலத்தில் இந்திய நாடும் இலங்கைத் தீவும் அந்நியர் ஆட்சிக்குட்பட்டிருந்தமை யாவரும் அறிந்ததே. ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர், போர்த்துக்கீசியர் எனப் பலர் காலனிகள் அமைத்து ஆதிக்கம் செலுத்தி வந்தனர். இவர்களுள் போர்த்துக்கீசியர் தங்கள் மதக் கோட்பாடுகளை மதித்த அளவிற்குப் பிற மதக்கோட்பாடுகளை மதிக்கவில்ல. இதனால் சைவப் பெரியோர்கள் பலர் அல்லலுற்றனர். யாழ்ப்பாணத் தமிழர்கள் சைவத்தில் மிக ஆழமாகப் பற்று வைத்திருந்தனர். எனவே, இலங்கையை விட்டு இந்தியாவிற்குக் குடியேறினர். குறிப்பாகத் தமிழகத்தில் சிதம்பரத்திற்கும் வேதாரணியத்திற்கும்

அதிகம்பேர் வந்து தங்கினர். அப்படி வந்தவர்களில் குறிப்பிடத் தக்கவர் ஞானப்பிரகாசர்.

சைவ நெறியாளர்கள் பசுவைத் தெய்வமாக எண்ணி வணங்குபவர்கள். பொதுவாகப் புலால் உண்ணாதவர்கள். தினம்தினம் பசுவிற்கு உணவு தருவதைப் புண்ணியமாகக் கருதக் கூடியவர்கள். "யாவர்க்குமாம் பசுவிற்கு ஒரு வாயுறை" எனும் திருமந்திர நெறியில் நிற்பவர்கள். இப்படிப்பட்டவர்கள் முறை வைத்துக் கொண்டு தினம் தினம் பறங்கியர் வெட்டித் தின்பதற்கெனப் பசுக்களைக் கொடுக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இப்பசுக் கொலைப் பாவத்தைச் செய்ய விரும்பாமல் சைவர் பலர் யாழ்ப்பாணத்தை விட்டு வெளியேறினர். தங்களுக்குச் சொந்தமான பொன்னையும் பொருளையும் எடுத்துக் கொண்டு தமிழகத்திற்கு வரத்தொடங்கினர். அப்படி வந்தவர்கள் சிதம்பரத்திலும் வேதாரணியத்திலும் பெரும்பான்மையாகத் தங்கினர். ஓரிருமுறை பசுவதைபடப் பறங்கியர்க்குப் பசு கொடுத்த பாவத்தைப் போக்க அறப்பணிகள் ஆற்ற நினைத்தனர். தாங்கள் கொண்டுவந்த பொன்னையும் பொருளையும் அறக் குளம் தோண்டுவதற்கும் கோயில்களில் சிவப்பணி செய்வதற்கும் பயன்படுத்தினர்.

இந்த அடிப்படையில்தான் ஞானப்பிரகாசர் தில்லையில் ஓர் அறக்குளம் தொட்டார். அக்குளம் ஞானப் பிரகாசம் குளம் என அழைக்கப்படுகிறது. இவர் பெயரில் ஞானப்பிரகாசத் தெருவும் இன்றளவும் தில்லையில் விளங்குகிகிறது. மேலும், இக்குளக்கரையைச் சுற்றிலும் அறங்கள் பல நிலைபெற மடங்கள் பல நிலை நாட்டினர். சிவபுரி மடம், செவ்வாய்க் கிழமை மடம், வடக்குமடம், கீழை மடம், புண்ணியநாச்சி மடம், நாவலரின் சைவப்பிரகாச மடம், யானைக்குட்டி மடம் போன்ற பல மடங்கள் அக்காலத்தில் சிதம்பரத்தில் யாழ்ப்பாணச் சைவர் களால் ஏற்படுத்தப்பெற்றன. இம்மடங்கள் அறக்கட்டளைகள் அமைத்து அறம்பல செய்து வந்தன. செய்தும் வருகின்றன. இம்மடங்கள் இன்றைக்குப் பொதுவாகக் குறிக்கப்பெறும் சத்திரம் என்ற பொருளில் உள்ளவை அல்ல.

மடம் என்பது சைவர்கள் வாழும் வீடு எனும் பொருளில் விளங்குவது. முன்னோர் நிறுவிய அறக்கட்டளையை வழி வழியாகச் செயற்படுத்தி வரும் பரம்பரையினர் வாழும் இல்லற வீடுகளாக விளங்குவன.

இவ்வில்லற வீட்டினரில் தலைப்பிள்ளை தம்பிரான் எனும் பட்டமேற்று இல்லற நெறியில் வாழ்வார். அறக்கட்டளைகளையும் பேணி நிற்பார். இது அவர்களுடைய மரபு.

நாவலர் பெருமானும் மேற்கூறிய வழியில் நின்று அறக்கட்டளைகள் அமைத்தார். சிதம்பரம் நடராஜர் கோயில் அறக்கட்டளையும், நாவலர் கல்வி நிறுவன அறக்கட்டளையும் இதன்பாற்படுவன.

அன்றைய காலக்கட்டத்தில் இலங்கை வேறு, தமிழகம் வேறு என்ற நிலை கிடையாது. ஒரே தமிழ்கூறு நல்லுலகம்போல் திகழ்ந்ததெனலாம். மேலும், சொல்லப் போனால் இலங்கையிலிருந்து தமிழகத்திற்கும் தமிழகத்திலிருந்து இலங்கைக்கும் கொள்வன கொடுப்பன அதிகமாக நடைபெற்றன. யாழ்ப்பாணச் சைவர்கள் ஒவ்வொரு ஆண்டும் சிதம்பர நடராசர் கோயிலில் நடைபெறும் ஆனித்திருமஞ்சனத் தேர்த்தரிசனத் திருவிழாவிற்கும் மார்கழித் திருவாதிரைத் தேர்த்தரிசனத்திற்கும் வந்து பத்துப்பத்து நாட்கள் தங்கி நடராச பெருமானைக் கண்ணாரக் கண்டு களித்துச் செல்வதும் வழக்கமாகும். அப்படி வரும்போது சிலர் தங்கள் உறவினர் வீட்டிலும் (மடங்களிலும்) சிலர் தாங்கள் தங்குவதற்கெனத் தனி மடங்களும் அமைத்துத் தங்கினர். தங்களின் உறவினர்கட்கு யாழ்ப்பாணத்திலிருந்து பாக்கும், பனையாட்டும் (பனம்பழச்சாறும் வெல்லமும் சேர்த்துச் செய்த சீடைபோல் இருக்கும் பலகாரம்) பிறவும் கொண்டு வந்து கொடுப்பார்கள். தமிழகத்திலிருந்து சட்டிபானைகளும், வெங்காயம் போன்றவற்றையும் எடுத்துச் செல்வார்கள்.

நாவலர் காலத்தில் பல பெரியவர்கள் தோன்றித் தமிழையும், சமுதாயத்தையும், சைவத்தையும் போற்றி நின்றார்கள். அவர்களுள் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, இராமலிங்க அடிகள், அருணாசலக் கவிராயர், தொழுவூர் வேலாயுத முதலியார், கோபாலகிருஷ்ண பாரதியார், தாமோதரம் பிள்ளை, கதிரைவேற்பிள்ளை, மறைமலை அடிகள் போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களுள் வள்ளலார் இராமலிங்க அடிகள் சைவக் கோட்பாட்டில் மாறுபடுகின்ற இடங்களைச் சுட்டி எதிர்த்தவர் ஆறுமுக நாவலராவர். மறைமலையடிகள் வள்ளலார் கோட்பாட்டை ஆதரித்தவர். கதிரைவேற்பிள்ளை நாவலர் வழி நின்று மறைமலையடிகளைச் சொற்போருக்கு அழைத்தவர். எனவே, நாவலரைப் பற்றிப் புரிந்து

கொள்ள வள்ளலார், மறை மலையடிகள், கதிரைவேற்பிள்ளை ஆகிய மூவரின் வாதங்களையும் ஒப்புநோக்க வேண்டுவது அவசியமாகிறது.

**வள்ளலார் இராமலிங்க அடிகள்**

வள்ளலார் இன்றைய கடலூர் மாவட்டத்தில் தில்லையின் வடமேற்கே மருதூரில் தோன்றியவர். தமிழ்ப் புலமையும், இறையருளும் கைவரப் பெற்றவர். தமிழக மக்கள் யாவராலும் அறியப் பெற்றவர். ஆறுமுக நாவலர் காலத்தில் வாழ்ந்தவர் என்பதைவிட வள்ளலார் காலத்தில் நாவலர் வாழ்ந்தார் என்று கூறுவதே சிறப்பாகும். வள்ளலாரைப் பின்பற்றி அவர் பின் சென்ற கூட்டமே அதிகம் எனலாம். வள்ளலார் சிதம்பர நடராச பெருமானை வணங்கிப் போற்றிப் பாடியவர். நாவலர் பெருந் தகையும் நடராச பெருமானை வணங்கி நின்றவர். ஒரே காலம், ஒரே இடம், ஒரே இறைவன் என இருவரும் வரலாற்றுப் பின்னணியில் ஒன்றுபட்டவர்கள் என்ற போதிலும் சைவக் கோட்பாட்டில் வேறுபட்ட நிலையும் அதனடிப்படையில் தோன்றிய சர்ச்சையில் மாறுபட்டு நின்றதையும் காணமுடிகிறது.

வள்ளலாரின் படைப்புக்களில் திருவருட்பாக்கள் யாவராலும் போற்றத்தகுந்தவை. இவரின் தமிழ்நடை இனிமையும், இறையருள் உருக்கமும் எவர்க்கும் பேரின்பத்தைக் கொடுக்க வல்லவை. வள்ளலார் சைவசமயக் குரவர் நால்வரின் தேவாரம் திருவாசகம் ஆகிய இரண்டையும் பின்பற்றி நின்றவர். இதனை இவருடைய திருவருட்பாவினில் காணலாம். நால்வரின் கருத்துகளையும் பாடல் வரிகளையும் தன்பாடல்களில் எடுத்தாண்டவர் என்றால் மிகையாகாது. இருந்தபோதிலும் திருவருட்பா ஆறுதிருமுறைகளாக வகுக்கப்படுவதை நாவலர் பெருந்தகை ஒப்பவில்லை. சைவத்தில் பன்னிருதிருமுறை சேக்கிழாரின் பெரியபுராணக் காலம் வரை வகுக்கப்பட்டுள்ளது. அந்த முறைவைப்பைப் போலவே வள்ளலாரும் முறைவைப்புச் செய்தார். அந்தத் திருமுறைகளும் திருவருட்பாவை வள்ளலார் திருமுறைகளாகப் பகுத்தமையும் ஒப்பாகா என நாவலர் மறுத்தார். இதற்கும் மேலாக அருட்பா என்பதை மருட்பா என்றும் சுட்டினார்.

**இராமலிங்க அடிகள்**

"மரணமில்லாப் பெருவாழ்வு வாழ்ந்திடலாம் - கண்டீர்" எனப் புகன்றதையும் நாவலர் பெருமான் ஏற்கவில்லை. சைவ

சித்தாந்தக் கோட்பாட்டின்படி ஆன்மாவிற்கு மரணம் கிடையாது. இறைவனடியைச் சேர்ந்த உயிர்களே பிறவிப் பெருங்கடலை நீந்திக் கடந்தவை ஆகும். அப்படிப் பிறவிப் பெருங்கடலை நீந்தாத உயிர்கள் மீண்டும் மீண்டும் பிறவி கொள்கின்றன. இந்த இரண்டு நிலைகளிலும் ஆன்மாவிற்கு மரணம் கிடையாது என்பது உறுதி செய்யப்படுகிறது. உடல் மட்டுமே அழியக் கூடியது. திருவள்ளுவர்

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார் (குறள். 10)

எனக் கூறுவது இவண் ஒப்பு நோக்கத்தக்கது. ஆனால், இராமலிங்க அடிகள் செத்தாரை எழுப்புவதாகக் கூறும் மரணமிலாப்பெருவாழ்வு தவறனாது என்பதே நாவலரின் வாதம்.

பாண்டிச்சேரியில் அரவிந்தர் பெருந்தகை மீண்டும் உயிர்த்தெழுவேனென்றதையும் இங்கு ஒப்புநோக்கலாம். அரவிந்தர் இறந்துபட்டபின் அவர்தம் சீடர்கள் அவர் உயிர்த் தெழுவார் என்ற நம்பிக்கையில் மூன்று நாட்கள் காத்திருந்தனர். ஆனால், அவர் உயிர்த்தெழாமை உணர்ந்தபின் பூத உடலுக்குச் சமாதி அமைத்தனர்.

இராமலிங்க அடிகள், தாம் மீண்டும் வருவேன் என்றார். தனதுடம்பைப் பிரணவதேகமாக்கிக் கொண்டதால் அவ்வுடம் பிற்கு அழிவில்லை என்றே கூறினார். சாகாக்கலை அல்லது மரண மிலாப் பெருவாழ்வு என்ற கோட்பாட்டினடிப்படையில் நின்றார். சைவசித்தாந்த அடிப்படையில் அருள்தேகம் அடைவதையே சிறப்பாகக் கொண்ட கோட்பாட்டில் நின்றவர் ஆறுமுக நாவலர். எனவே இராமலிங்க அடிகளை மாறுபட்ட கருத்தினராகக் கொண்டார். இக்கோட்பாட்டு நிலைகளில் ஆறுமுக நாவலர் கருத்தே வரலாற்று அடிப்படையில் நிலை நின்றதெனலாம்.

இராமலிங்க அடிகளின் கோட்பாட்டில் இலயித்து நின்ற அறிஞர்கள் பலர். அவர்களுள் மறைமலையடிகள் முதன்மை யானவர். அதே நேரத்தில் கதிரைவேற்பிள்ளை போன்ற சைவத் தமிழறிஞர்கள் ஆறுமுக நாவலரின் கோட்பாட்டில் தங்களை ஆட்படுத்திக்கொண்டனர். இரண்டு தரப்பினருக்குமிடையே வள்ளாரின் மரணமிலாப் பெருவாழ்வு சரியானதே - தவறானதே; இராமலிங்க அடிகளின் பாக்கள் அருட்பாக்களே இல்லை மருட்பாக்களேயாம் போன்ற தலைப்புகளில் சொற்போர்கள் நடைபெற்றன. கதிரைவேற்பிள்ளை மீண்டும் மீண்டும் சென்னை

யிலும் திருச்சியிலுமாகப் பொது மேடையில் சொற்போர் செய்ய மறைமலையடிகளை அழைத்தார். இந்த நிலையில் மறை மலையடிகளைப் பின்பற்றும் தொண்டர்கள் கதிரைவேற் பிள்ளையைக் கொலை மிரட்டல் செய்யும் நிகழ்வுகளும் ஏற்பட்டன. ஆயினும், மறைமலையடிகள் கதிரைவேற் பிள்ள்ளையைப் பாதுகாத்துக் காப்பாற்றித் தன் பொறுப்பில் வைத்தார். தன் தொண்டர்களைத் தானேநேரில் சென்று கடிந்தார்.

ஆயினும், அப்படிப்பட்ட மறைமலையடிகளே தன் நாட்குறிப்பில் வள்ளலார் சிவபதமடைந்ததைக் குறிப்பிடும் போது வேறுபட்ட நிலையினராகத் தோன்றுகிறார். வள்ளலாரின் பூத உடல் முடிவில் அடக்கம் செய்யப் பெற்றதைக் கீழ்க்கண்ட வாறு சுட்டுகிறார்.

> "We went to Mettukuppam where Swami Ramalinga left his grapps material today. Gathered the secret information there that Swami actually died and the reamins of his bodywere taken in an earthern pot and placed under the akasa chamber in a celler room and that he did no miracles, but failed in his attempt to do so. This shows that no man, however great he may be should of his own will Attempt to work miracles. He must depend on the will and grace of God."

இதன் மூலம் இராமலிங்க அடிகளின் உடல் பிரணவதேக நிலை அடையாமையும் ஆறுமுக நாவலர் கூற்றுப்படி அருட்டேகமே அடைந்தது என்றும் உய்த்துணர முடிகிறது. முடிவில் இராமலிங்க அடிகளின் பூத உடல் மேட்டுக்குப்பத்தில் உறவினர்களால் ஈமச்சடங்குகட்கு உட்படுத்தப்பட்டது அவர்தம் எலும்புகள் ஒரு மண்பானையில் வைக்கப்பட்டு, தற்போதைய ஞான சபையின் அடியில் ஒருசிறு அறையில் வைக்கப்பெற்றன. இறையருள் ஒன்றால் மட்டுமே அற்புதங்கள் நடைபெறும் என்றும் தனிப்பட்ட எத்துணை பெரியவர்களாக இருப்பினும் தன் இச்சைப்படி அற்புதம் செய்ய இயலாது என்றும் கூறுவது இவண் சிந்திக்கத்தக்கது.

சைவ சித்தாந்தக் கோட்பாடுகளில் கூறப்படும் அருட்டேகம் அடையும் முக்தி முறையே சரியான நெறிமுறை யாகும். இதன்படி ஆன்மா இறைவனோடு இரண்டறக் கலந்து ஞானமுக்திப்பேறு அடைகிறது. உடம்பைப் பற்றிக் கவலைப்

படாமல் உயிர், பிறவிப் பெருங்கடலை நீந்தி இறைவனடி சேரும் நிலையே சிறப்பானது. ஆறுமுக நாவலர் வலியுறுத்தியதும் இதையே. இதை விடுத்துச் செத்தபின் மீண்டும் உடம்பைப் பெறுதல் எனும் சித்து அத்துணை சிறப்பானதல்ல. ஆயினும் பல சித்தர்கள் பல காலங்களில் நிகழ்த்தியதாகக் கூறப்படும் இவ்வகைச் சித்து தன்னாலும் செய்தற்கு எளியது என இராமலிங்க அடிகள் செய்ய முயன்றனர் போலும்.

**நாவலர்கால வரலாற்றுப் பின்னணி**

நாவலர் காலத்தில் சைவம் குலைந்திடும் சூழல் காணப் பட்டது. இதற்குப் பல காரணங்கள் உண்டு.

1. கிறித்துவ மதத்தை ஆங்கிலேயர் இந்தியாவில் பரப்ப எத்தனித்தது.
2. அதற்கேற்ப சைவர்களிடம் சமய நூலறிவும் பற்றும் குறைந்திருந்தன.
3. சைவத்தைப் பரப்பவும் பிற சமயங்களைப் புறக்கணிக்கவும் தேவையான பொருளாதாரமும் ஆட்சியாளர் ஆதரவும் சைவர்கட்குக் கிடைக்கவில்லை.
4. சைவத்தை நிலைநாட்டப் பாடுபடுவதாக நினைத்துத் தவறான பாதையில் சிலர் சித்து விளையாட்டில் பாமரர்களை இட்டுச் சென்றதால் கிறித்துவப் பாதிரியார்கள் சைவத்தைக் கேலி செய்து பிரசுரங்கள் வெளியிட்டனர்.
5. கிறித்துவர்களிடம் அமைந்த நூல் வெளியீட்டு வசதியும் அவற்றை மக்களிடம் கொண்டு சேர்க்கப் பாதிரியார்களின் செயற்பாடும் சைவர்களிடம் இல்லாதிருந்தன.
6. காலத்திற்கேற்பக் கல்விபுகட்டும் முறையில் புதுமைகளைப் பயன் கொள்ளாதது.
7. கிறித்துவர்கள் சொற்பொழிவுகளை மேற்கொண்டும் விவிலிய நூல்களை உரைநடையாக மக்களுக்கு இனாமாகக் கொடுத்தும் செயலாற்றியது.

ஒவ்வொரு காலக்கட்டத்திலும் தமிழ்மொழியின் மீதும் சைவத்தின் மீதும் பிறமொழி, மதத்தாக்கங்கள் ஏற்பட்டன. தமிழ்மொழியின் மீது காலவெள்ளத்தில் சமஸ்கிருதத் தாக்கமும் அதன்பின் உருது மொழித் தாக்கமும், பிற்காலத்தில் போர்த்துக்

கிசியம் மற்றும் ஆங்கில மொழிகளின் தாக்கங்களும் ஏற்பட்டன. இதன் விளைவாகத் தமிழில் பிறமொழிக் கலப்பும், தமிழ் மொழி அமைப்பில் மாற்றமும் தோன்றின. இதனால்தான் வஞ்சியும் கலியும் நிறைந்த தமிழில் ஆசிரியமும், வெண்பாவும் விருத்த வகைகளும் வந்து புகுந்தன. சிற்றிலக்கிய வகைகள் விரிந்தன. உரைநடை வளர்ச்சியும் மாற்றமும் பல்கிப் பெருகின.

இதே போன்று சைவ சமயத்தின் மீது பௌத்த சமயமும் சமண சமயமும் சங்ககாலந் தொட்டே தன் ஆதிக்கத்தைச் செலுத்தின. தங்கள் மதக் கோட்பாட்டினை வலியுறுத்தின. தமிழக மன்னர்களை வசப்படுத்திக் கொண்டு தங்கள் சமயங்களைக் கட்டாயப்படுத்தி மக்களிடையே பரப்பினர். இதனால் சைவ சமய வளர்ச்சி தளர்ச்சியுற்றது. இத்தளர்ச்சியைப் போக்கவும் சைவத்தை நிலைநாட்டவும் காரைக்காலம்மையார், திருமூலர், திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகர், பட்டினத்தடிகள், சேக்கிழார் போன்றோர் தோன்றித் தொண்டு செய்தனர்.

இதைப் போன்றே பதினேழு பதினெட்டாம் நூற்றாண்டு களிலும் பிற சமயத் தாக்கம் சைவத்தினர் மீது ஏற்பட்டது. கிறித்துவ மதம் ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் இந்தியாவில் வேரூன்றப் பார்த்தது. ஆட்சியாளர்களின் ஆதரவால் பாதிரியார் களின் பிரசங்கங்கள் தலைதூக்கின. விவிலிய நூல்கள் இனாமளிக்கப் பெற்றன. மதம் மாறியவர்கட்கு உதவிகள் அளிக்கப்பெற்றன. பஞ்சத்தைப் போக்கிக் கொள்வதற்காகவும், உதவிகளைத் துய்ப்பதற்காகவும் தன் சமயத்தில் கிடைக்காத மரியாதையைக் கிறித்தவர்கள் அளிப்பார்கள் என்பதற்காகவும் மக்களிடையே மத மாற்றங்கள் தோன்றின.

இவற்றையெல்லாம் ஈடு செய்ய அக்காலக்கட்டத்தில் பல சைவப் பெரியார்கள் தோன்றித் தொண்டாற்றினர். இவர்களுள் இராமலிங்க அடிகள், ஆறுமுக நாவலர், மறைமலையடிகள், கதிரைவேற்பிள்ளை போன்றவர்கள் தலைசிறந்து விளங்கினர். சைவத்தைப் பரப்ப இந்நால்வரும் அருந்தொண்டாற்றினர். கிறித்துவப் பாதிரியார்கட்கு மேலாகச் சொற்பொழிவுகளும், தமிழையும் சைவத்தையும் வளர்க்க நூல்களும், சமுதாய வளர்ச்சிக்குத் தொண்டுகளும் செய்தனர். இலக்கியப் படைப்பில் இராமலிங்கஅடிகளும், ஆறுமுகநாவலரும் ஒருவருக்கொருவர் மிஞ்சும் தன்மையர். இருந்தபோதிலும் இராமலிங்க அடிகளும் ஆறுமுக நாவலரும் இருவேறு துருவங்களாக வேறுபாடு கொண்டனர்.

ஏனெனில் அன்றைய காலக்கட்டத்தில் கிறித்துவப் பாதிரியார்கள் இராமலிங்க அடிகளின் செயல்களை ஏளனம் செய்து துண்டுப் பிரசுரங்கள் வெளியிடலாயினர். தங்கள் மதத்தைப் பரப்பச் சைவ மதக்கோட்பாடுகளைக் குறைகூறத் தொடங்கினர். கூட்டங்கள் கூட்டி இராமலிங்கஅடிகளையும் அவர் கூறிய "செத்தாரை எழுப்புதல்" போன்றவற்றையும் எள்ளி நகையாடினர். மேலும், ஞானசம்பந்தர் பூம்பாவையை மயிலையில் உயிர்பெறச் செய்ததும் திருமருகலில் நாகம் தீண்டி மறைந்த செட்டி மகனை உயிர் பெறச் செய்ததும் அப்பரடிகளுக்கு விருந்து செய்ய வாழையிலை கொண்டுவரச் சென்ற தம் தொண்டரின் மகன் பாம்பு தீண்டி மாண்டதும், அதன்பின் அவனை உயிர்த் தெழச் செய்ததும், சுந்தரர் செய்த அற்புதங்களும் இராமலிங்க அடிகள் கூறியவை போன்றதே எனக் கிண்டல் செய்தனர். இவை போதாதென்று துண்டுப் பிரசுரங்களாக அச்சிட்டுத் தங்கள் கூட்டங்களில் யாவர்க்கும் இனாமாகக் கொடுத்தனர். தங்கள் மதத்தைப் பரப்பச் சைவத்தைக் குறை கூறினர். இவ்வாறு கிறித்தவர்கள் இராமலிங்க அடிகளை மையமாக்கிச் சைவத்தை வசைபாட நேர்ந்ததை ஆறுமுக நாவலர் எதிர்த்தார். இறை யருளால் அக்காலத்தில் நடைபெற்ற அற்புதங்கள் குறைகூறப் படுவதை நிறுத்த விரும்பினார். அதற்கு ஒரே வழி, இராமலிங்க அடிகள் சைவ சித்தாந்தத்திலிருந்து முரண்படுவதைச் சுட்டி விளக்கத் தொடங்குவதே ஆகும் என எண்ணினார். இந்த அடிப்படையிலேயே ஆறுமுக நாவலர்க்கும், இராமலிங்க அடிகட்கும் முரண்பாடுகள் தோன்றின. இந்த முரண்பாடுகள் சைவத்தை நிலைநிறுத்த வேண்டும் என்ற உள்நோக்கத்தால் ஏற்பட்டனவேயன்றி வேறெந்தப் போட்டி மனப்பான்மையிலும் அல்ல. ஏனெனில் இருவருமே சைவநெறியாளர்கள்தான்.

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு (குறள். 358)

எனும் வள்ளுவர் வாய்மொழிக் கேற்ப இருவருமே சிவமெனும் செம்பொருள் காண்பதறிவு என வாழ்ந்தவர்கள்தாம். நமக்குள் ஆயிரம் முரண்கள் இருப்பினும் பிறன் (கிறித்தவன்) பழிக்காத வாறு செயல் இருக்கவேண்டுமென்பதே நாவலரின் போக்கு.

அருளாளர்கள் தம் முயற்சியால் எதையும் அற்புதமாக்கிட முடியாது. இறையருள் துணையே அற்புதங்கள் நிகழக்

காரணமாக இருக்கவேண்டும் என நாவலர் பெருமான் வாதிட்டார்.

## ஆறு திருமுறை

சைவ சமயக் குரவர் நால்வரின் தேவாரம் திருவாசகங்களில் மூழ்கிய இராமலிங்க அடிகள் அவர்களின் அருட்பாடல்களை எடுத்தாளும் திருவருட்பாக்களில் பல அவர்களைப் போலவே தன்னையும் ஆட்படுத்திக் கொண்டார். சைவ சமயத்தின் இலக்கியங்கள் பன்னிரு திருமுறைகளாகத் தொகுக்கப் பெற்றுள்ளன. இதனைப் போலச் செய்வதாகத் திருவருட்பாக் களும் ஆறுதிருமுறைகளாகப் படிநிலை அமைத்து வகைப்பாடு செய்யப்பட்டுள்ளன. வரலாற்றில் பன்னிரு திருமுறைகளும் பின் வந்தவர்களால் வகைப்படுத்தப்பெற்றன. ஆனால், இராமலிங்க அடிகளின் அருட்பாக்கள் ஆறு திருமுறைகளாக வகைப் படுத்தும் போது, முன்பு உள்ள பன்னிரெண்டில் ஆறு திருமுறை களோடு ஒப்பாக எண்ண நேரிடும். அவையும் இவையும் ஒன்றாகுமா? சமமாகுமா? என்பதே ஆறுமுக நாவலரின் வினாக்கள்.

ஆறுமுக நாவலர், சமயக் குரவர் நால்வருக்கு ஒப்பாக வள்ளலாரை ஏற்கவில்லை. எனவே, மருட்பா என்றனர். நாவலர் கூற்றைக் கதிரைவேற்பிள்ளை விரிவாக்கி அருட்பாவா? மருட்பாவா? என நூல் எழுதினார். இது மறைமலையடிகட்கும் கதிரைவேற்பிள்ளைக்கும் சொற்போர் நிகழக் காரணமுமாயிற்று.

## கல்விப்பணி

நாவலர், சைவத்திற்கு வினாவிடைகள் தந்தவர். அம்மானை எனும் சிற்றிலக்கிய வகை இம்முறையில் அமைந்த போதும் உரை நடையில் முதன்முதலாகப் புகுத்திய பெருமை நாவலரையே சாரும். கல்வி புகட்டும் உத்தியில் “வினா - விடை” முறைமை சிறந்தது. இதனை ஆறுமுக நாவலர் சைவ நெறிமுறைகளைப் புகட்டுதற்குப் பயனாக்கினார். “வினா வெண்பா” எனும் நூலும் இவ்வகைத்தேயாகும்.

நாவலர் பெருந்தகை பிறர்க்குத் தோன்றும் ஐயங்களை வினாக்களாக்கித் தெளிவுள்ள விடைகளாக்கித் தெளிவுபடுத்து கிறார். இதன்மூலம் தமது சைவசித்தாந்தக் கல்விப் பணியை நிறைவு செய்கிறார்.

பாலபாடம் எனும் இவரது தமிழ்க் கல்விக்கான தொகுதிகள் பலராலும் பாராட்டப்பெறும் நூல்களாகும்.

அன்றைய தமிழ்ச் சமுதாயத்திற்குத் தேவையானவற்றைப் படி நிலைப்படுத்தி எளிமையினின்று அரியவற்றுக்குச் செல்லும் வகையில் இவருடைய பாலபாடங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. கலைத்திட்டம் அமைக்கப்பெற்று அத்திட்டத்தைச் செயற் படுத்தும் பாடத்திட்டங்களாக அமையக் கூடியவை இப் பால பாடங்களாகும்.

இதற்கான வரலாற்றுப் பின்னணிகள் பல. அன்றைய தமிழ்ச் சமுதாயத்தில் திண்ணைப் பள்ளிக்கூடங்கள் மட்டுமே உண்டு. இதற்கு முன் இருந்த குருகுலக் கல்வி போன்ற நடைமுறைகள் கடைப்பிடிக்கப்பட்ட குருகுலமுறை இதுவாகும்.

ஆறுமுக நாவலர் யாழ்ப்பாணத்தில் இருந்த காலத்தில் ஆங்கிலேயரின் கல்வி முறைகளை அறியும் வாய்ப்பும், பணியாற்றும் சந்தர்ப்பமும் கிடைக்கப்பெற்றவர். விவிலிய நூலை மொழிபெயர்த்தமையும் பார்சிவெல் பாதிரியாரின் நட்பும் இவண் குறிப்பிடத்தக்கவை. ஆங்கிலக் கல்வி முறைப்படி - சில சீர்திருத்தங்களுக்குட்பட்டு, சைவத்தையும் தமிழையும் அதன் சமுதாயத்தையும் மனத்தில் நிறுத்திப் பாலபாடங்கள் அமைக்கப் பெற்றன.

**பிற தொண்டுகள்**

நாவலர் ஒரு சைவ நெறியாளர்; தமிழ்ப் பற்றாளர்; இலக்கியமாக்கும் புலவர்; உரைநடைச் சிறப்பாளர்; சிறந்த பதிப்பாளர் போன்ற பல தரப்பட்ட ஆற்றல்கள் கொண்டவர்.

ஆங்கிலேயர்கள் கல்விக்கூடங்கள் மூலமாகத்தான் தங்கள் கலாச்சாரத்தையும் மதத்தையும் இந்தியா முழுவதும் புகுத்தினார்கள். பாதிரியார்களின் பங்கு இதில் அதிகம். ஆறுமுக நாவலர் தம் சைவத் தொண்டையும், தமிழ்த் தொண்டையும் கல்விக்கூடம் அமைத்தும் பாலபாடமாகிய பாடத்திட்டம் எழுதியும் நிறைவேற்றி வெற்றி கண்டார். சிதம்பரம் நடராஜர் கோவிலில் அறக்கட்டளை நிறுவிடத் தனது பெருஞ்செல்வத்தை எழுதி வைத்தார். சிதம்பரத்தில் வித்தியாசாலையை நிறுவினார்.

இவர்தம் படைப்புகள் தமிழுக்குப் பெருமை சேர்ப்பன வாகும். சேக்கிழார் இயற்றிய பெரியபுராணத்தை உரை நடையிலும் எழுதிச் சாதனை படைத்தார். கதிர்காமசுவாமி கீர்த்தனை, இலக்கணச் சுருக்கம், இலக்கண வினாவிடை, நன்னூல் காண்டிகை உரை, விருத்தியுரை நித்திய கருமவிதி,

சிதம்பர மான்மியம் போன்ற பற்பல நூல்களைப் படைத்து, தமிழுலகுக்கும் சைவத்திற்கும் தமிழர் சமுதாயத்திற்கும் நாவலர் பெருமான் பெருந்தொண்டாற்றியுள்ளார்.

வரலாற்றுப் பின்னணியில் ஆறுமுக நாவலர் வாழ்வியலை ஆராய்கின்ற போது அவருடைய தொண்டுகளின் அருமை நமக்குப் புலனாகின்றது. சூழலின் அடிப்படையில் மாறுகின்ற மனிதராக ஆறுமுக நாவலர் அமையவில்லை. எத்தனையோ பிரச்சினைகளில் தமிழுக்காவும் சைவத்திற்காகவும் தமிழ்ச் சமுதாயத்திற்காகவும் எதிர்நீச்சல் போட்டுள்ளார். எல்லோரும் வள்ளலார், அடிகள், சுவாமி எனப்போற்றிய இராமலிங்கரை எதிர்த்து, சங்க காலத்து நக்கீரன் போல வாதிட்ட துணிவையும், தமிழ்ப் புலமையையும், சைவ சித்தாந்தத் தெளிவையும் பாராட்டுதற்குச் சொற்கள் போதா. இலக்கியங்கள் பல படைத்ததும், இலக்கண உரைகள் செய்ததும், கீர்த்தனைகள் அமைத்ததும், சைவத்தைச் சொற்பொழிவுகளால் வளர்த்தும் கல்வித்திட்டமும் கலைத் திட்டமும் பாடத்திட்டமும் நிறுவியதும் இவரன்றி யாராலும் முடியாது.

## துணை நூல்கள்


1. திருநாவுக்கரசு, மறை. 1959, **மறைமலையடிகள் வரலாறு**, கழகப்பதிப்பு, சென்னை.
2. செல்வநாயகம், வி., 1969, **தற்கால உரைநடையின் தந்தை**, நாவலர் மாநாடு விழா மலர், கொழும்பு.
3. சிங்காரவேலன், சொ., 1969, **நாவலரும் தமிழ் மொழியும்**, நாவலர் மாநாடு விழா மலர், கொழும்பு.
4. நடராஜன், க.கி., 1969, **நாவலர் காலத்து புலவர்கள்**, நாவலர் மாநாடு விழா மலர், கொழும்பு.




# பக்திப் பயணத்தில் நாவலர்

சைவ சமயத்திற்காகவும் அதன் ஆன்மிக உண்மைக்காக வும் தன் வாழ்க்கையையே பக்திப் பயணமாக மாற்றிக் கொண்ட சைவ பக்தர் நாவலர் அவர்கள். பக்தியில் முக்தி கண்டவர். தமிழ் எனும் கருவி கொண்டு பக்திக் கனியை ஈந்தவர். யாம் பெற்ற இன்பம் பெருக இவ்வையகம் என்ற திருமூலரின் கூற்றுக்கு உதாரணமாக விளங்கி, பக்தி எனும் இன்பத்தை அனைவரும் உணர வேண்டும் என்று விரும்பி அதற்காக அயராது பாடு பட்டவர். சொல்லும், செயலும் ஒன்றான பக்திமான். அப்பெரு மகனாரின் பக்திப் பயணத்தைப் பற்றி இக்கட்டுரை அமைகிறது.

## தோற்றமும் பக்தியும்

பெருமை மிக்க யாழ்ப்பாணத் தமிழ் வேளாளர் குலத்தில் 18.12.1822இல் அவிட்ட நட்சத்திரம் கூடிய பொன்நாளில் நாவலர் தோன்றினார். விளையும் பயிர் முளையிலேயே தெரியும் என்ற மூதுரைக்கேற்ப விளங்கியவர் நாவலர். அவரது இந்த உள்ள உறுதியே பக்திப் பயணத்தில் அவருக்குத் துடுப்பாகப் பயன் பட்டது. பல இடையூறுகளுக்கு இடையேயும் நாவலர் சைவ சமயத்தை நிலைநாட்டியுள்ளார்.

சைவ சமயத்தின் இலக்கணம் இது என்பதும், சைவ சமயிகள் வழிபடுங்கடவுளது இலக்கணம் இது என்பதும், சைவ சமயிகள் அத்தியாவசியமாகத் தரிக்க வேண்டிய சின்னங்கள் இவை என்பதும், யாவரும் அறிய வேண்டிய செய்திகளெனக் கண்டு, அச்செய்திகளை விரிவாக எடுத்துச் சொற்பொழி வாற்றினார். அக்காலத்தில் அவர் கூறிய செய்திகளாவன: கடவுள் வாழ்த்து, உருத்திராட்சதாரணம், சிவபத்தி, வேதாகமங்கள், திருவிழா, சிவலிங்க வழிபாடு, யாக்கை நிலையாமை, மகளிரொழுக்கம், தருமம், செய்நன்றியறிதல், பிச்சையிடுதல், கல்வி கற்பித்தல், கடவுளொருவர் உண்டெனல், அறிவொழுக்கங்களிற்

சிறந்தோரைத் தழுவி நடத்தல், கள்ளுண்ணாமை, கொல்லாமை போன்றன சமயப்பேருண்மைகளாகும் எனல். இச்சமயப் பேருண்மைகளைக் கேட்டவர்கள் அதன்படி நடக்க முற்பட்டனர். அவை நாவலரின் நாவண்மைக்குச் சான்றாகும். சொற்களால் மட்டும் கூறாது தாமே அவ்வாறு வாழ்ந்து காட்டியவர் ஆறுமுக நாவலர்.

சிவபதமடையுமுன் மூன்று மாதம் வரையும் விடாது பிரசங்கம் செய்து வந்தவர். முன்னிருந்த சமயக் குரவரெல்லாம் தாங்கள் வழிபடப் போன தலங்களிலெல்லாம் பதிகங்கள் பாடினார்கள். இவரோ தாம் போன இடங்களிலெல்லாம் சைவப் பிரசங்கங்கள் செய்து பக்தியை நிலை நாட்டினார்.

**கல்விவழிப் பக்திப் பாதை**

நாவலர் பக்தியையும், கல்வியையும் உயிரெனப் போற்றினார். பார்சிவல் பாதிரியார்க்குத் தமிழ்க் கல்வி கற்பித்தார். ஆங்கிலப் புலமையும் மிக்க இவர் பைபிளைத் தமிழில் மொழி பெயர்க்கப் பார்சிவலுக்கு உதவினார். ஆறுமுகனாரின் பெருமை உணர்ந்த பார்சிவல் அவரைப் பரமகுருவாக மதித்தார். சபைகளில் நாவலர் வந்தால் "மம குரு" என்று போற்றி வணங்கிப் பின் குரு அமர்ந்தார்", எனச் சுத்தானந்த பாரதியார் கூறுகிறார். பார்சிவல் கல்வியை அடிப்படையாகக் கொண்டு கிறிஸ்துவ சமயத்தைப் பரப்பினார். நாவலரும் கல்வி வழிப் பக்தியைப் பரப்பினார். கிறிஸ்துவர்களின் பைபிள் பிரச்சாரமும், சமய ஈடுபாடும் ஆறுமுக நாவலரைச் சிந்திக்கச் செய்தன. தமது சமயம் எந்நிலையில் உள்ளது என்று ஆராய்ந்தார். செயல்பட்டார். "யாழ்ப்பாணச் சமயநிலை" என்றொரு நூலில் அவர்தான் அறிந்ததை ஒளிவு மறைவின்றிக் கூறுகிறார். 1845ஆம் ஆண்டு தை மாதம் முதல், ஆறுமுகனார் மாணவர்களைச் சேர்த்துத் தமிழும், சைவமும் கற்பித்தார். சமய உண்மைகளை அவர்களுக்கு உணர வைத்தார்.

சைவ வினாவிடைகள், பாலபாடம் போன்றவை சமயக் கருத்துக்களை நன்கு அறிவுறுத்துவனவாக இருந்தன; இருக்கின்றன. அவரிடம் கல்வி பயின்ற நன்மாணாக்கர்கள் பலர் அவர் பக்திப் பயணத்திற்குத் துணை புரிந்தனர். சதாசிவம் பிள்ளை, நடராச ஐயர், பொன்னம்பலம்பிள்ளை போன்றோர் அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள். நல்ல மாணவர்கள் நாட்டின் ஆதார வேர்கள். எதிர்காலத் தூண்கள் என்பதைத் தெளிவாக

உணர்ந்த ஆறுமுகனார் நல்ல வழித்தோன்றல்களை உருவாக்கினார். சிறுதுளி பெருவெள்ளமாக உருவெடுப்பது போல, நாளும் நன்மாணாக்கர்களின் எண்ணிக்கை மேலோங்கியது அதன் பயனாய்ச் சைவம் கல்விவழித் தழைத்தது; வேரூன்றியது. கல்வி எனும் கேடயம், சமயம் எனும் உயிரை வளர்த்தது.

1864ஆம் ஆண்டு சைவத்தின் தலைமைப் பீடமான சிதம்பரத்தில் ஆறுமுக நாவலரால் "சைவப் பிரகாச வித்தியா சாலை" என்ற கல்வி நிறுவனம் ஏற்படுத்தப்பட்டது. அப்பள்ளி இன்றும் செயல்பட்டு வருகின்றது. ஆனால் சமயத்திற்கு என்று தற்போது கூடத் தனி வகுப்புகள் இல்லை. ஆனால் சமய வகுப்புகள் 1887 வரை நடைபெற்றிருக்கின்றன. சமயச் சின்னங்களை மாணவர்களும், ஆசிரியர்களும் அணிவது கடைப்பிடிக்கப் பட்டது. சமய வகுப்புகளுக்கென ஈழத்திலிருந்து அறிஞர்கள் வரவழைக்கப்பட்டுக் கல்வி போதிக்கப்பட்டது. இந்திய அரசு சமயக் கல்வியைக் கட்டாயமாக்கினால்தான் நாவலர் கண்ட கனவு நினைவாகும். ஆன்மிகத்தின் தாயகமான பாரதத்தில் சமயக் கல்வி மிக்க அவசியமானது என்ற நாவலரின் அவாவும் நிறைவாகும்.

கிறிஸ்துவப் பள்ளிகளில் இன்றும் சமய வகுப்புகள் நடத்தப்படுகின்றன. அரசு நடத்தும் பள்ளிகளிலும், அரசு உதவி பெறும் பள்ளிகளிலும் சமயக் கல்வி கட்டாயமாக்கப்பட வேண்டும். வெறும் கல்வி, மனிதனைப் பண்படுத்தாது. தமிழ் மண்ணிற் பிறந்த அனைவரும் சமயப் பேருண்மையை அறிய வேண்டும் என்ற நாவலரின் கனா தற்போது மங்கி வருகிறது. அது சுடர் விட அரசு ஆவன செய்ய வேண்டும். நாவலரைப் பற்றிப் பள்ளி மாணவர்கள் அறிய வேண்டும். நாவலர் செய்த தமிழ்த் தொண்டும், பக்தித் தொண்டும் ஈருடலும் ஓருயிரும் போன்றன. எனவே இன்றைய கல்வித் திட்டத்தில் நாவலரின் பணி இடம் பெற்றால் சைவசமயமும் சமயப் பேருண்மைகளும், மென்மேலும் வளரும் என்பதில் ஐயமில்லை.

அக்காலத்தே ஆங்கில அரசையே எதிர்த்துச் சமயப் பேருண்மையை நிலை நாட்டிய பெருமை நாவலருக்கு உண்டு.

**நாவலர் காட்டிய பக்தி மறுமலர்ச்சி**

நாவலர் ஆறுமுகனார், சைவம் எனும் செடி வளரத் தமது சொற்பொழிவு எனும் மழையை முதலில் பொழியத் தொடங்கிய இடம் வண்ணார் பண்ணைச் சிவன் கோயில். இவர் ஆற்றிய

சொற்பொழிவுகளால் மாக்களாயிருந்த மக்கள் திருந்தினர். இவ்வுடல் நிலையானது என்று இறப்பை எண்ணாமல் வாழ்ந்த பலர், உடல் நிலையில்லாதது. கர்மா எனப்படும் வினைக் கொள்கைக்கு (Law of Karma) ஏற்பவே, பலன்களை உய்ய வேண்டும் என்றுணர்ந்து பாவச் செயல்களைக் கைவிட்டுப் புண்ணியத்தைத் தேட ஆரம்பித்தனர்.

தருமசிந்தனையின்றி, சுய நலம் மிகுந்தவராய் இருந்தவர்கள் கூட, நாவலரின் பொழிவைக் கேட்டு நல்வழி நடந்தனர். பிறன் மனை விழைதல், பரத்தமை ஒழுக்கத்தில் இருத்தல் ஆகியவற்றை மேற்கொண்டு திரிந்த மாக்கள் பலர் அவை தீய ஒழுகுகள் என்று உணர்ந்து கைவிட்டனர். கல்வியில் குறையுடையவர்களும் கல்வி இல்லாதவரும் கல்வியின் பீடு உணர்ந்து, கல்வி கற்கத் தொடங்கிய பெருமை நாவலர் ஒருவரையே சாரும். ஆறுமுகனார் தம் வாழ்நாள் முழுவதும் சைவ சமயச் சொற்பொழிவுகள் ஆற்றி வந்தார். இவர் சென்னையில் தங்கியிருந்த காலக்கட்டத்தில் தமது இல்லத்திலும் வெள்ளிக்கிழமை தோறும் சொற்பொழிவு செய்து வந்தார். மக்கள் கூட்டத்தைச் செவி கொடுத்துக் கேட்க வைத்த பெருமை அண்ணலையே சாரும். நாவலர் சைவசமயத்தின் பாற் கொண்ட பற்றாலும், அதன் வளர்ச்சி குறித்து அவர் ஆற்றிய பணியினையும் கருத்திற் கொண்டு, திருவாவடுதுறை ஆதீனம் "நாவலர்" என்ற பட்டம் கொடுத்துப் பெருமை சேர்த்தது. சொற் கொண்டல் நாவலர், மேடை, அச்சு இரண்டைக் கொண்டேதான் சமயப் பணியோடு தமிழ்ப்பணியையும் சிறப்புற நடத்தி வந்தார். அதன் பயனாக, நமது சைவப் பிரகாசருக்குச் சென்ற இடமெல்லாம் மேடைதான். பாதிரியாரைப் போல் அச்சகம் வைத்து நூல்களையும், காலத்திற்கேற்ப சாத்திரங்களையும், பாட நூல்களையும் திருத்தமாக அச்சிட்டதினால் சைவசமயம் நன்கு ஈழத்தில் செழித்து வளர்ந்தது.

தற்போதும் ஆறுமுகநாவலரின் சைவப் பணியை ஈழ மக்கள் பின்பற்றி வருகின்றனர். ஈழ மாணவர்கள் அனைவருக்கும் ஆறுமுக நாவலரின் பக்திப் பயணம் நன்கு தெரியும். ஆனால், இந்தியாவில் நாவலரைப் பற்றித் தெரிந்த மாணவர்கள் தற்காலத்தே குறைவாகவே உள்ளனர். யாழ்ப்பாண சைவ பரிபாலன சபை - புண்ணிய நாச்சியார் மாலை கட்டித் தெருவில் நிறுவப்பட்டுள்ளது. இச்சைவ சபை இலங்கைத் தமிழர்களால் சைவத்திற்காக நிறுவப்பட்டது. பரமேஸ்வரி சரவண முத்து என்ற ஈழத்தைச் சார்ந்த அம்மையார் நாவலரைப் போலவே கனடாவில்

மங்களம் கலை மன்றம் என்ற அமைப்பை நிறுவி அதில் சமயக் கல்வி, கலை, கலாச்சாரம் ஆகியவற்றைப் பரப்பி வருகிறார் என்பது ஈண்டுக் கருதத்தக்கது.

**இறைக்கோயிலும், நாவலரும்**

தமிழகம் திருக்கோயில்களின் உறைவிடம். திரும்பிய திக்கெல்லாம் விண்ணை முட்டும் கோபுரங்களும் வானளாவிய விமானங்களுமாய் இருக்கும் கோயில்கள் தமிழர்தம் கலைத் திறமைக்கும் இறைப்பற்றுக்கும் சான்றுகளாகி விளங்குகின்றன. இத்திருக்கோயில்களை எடுப்பித்ததன் மூலம் காலத்தால் அழியாத புகழ் இமயத்தைத் தொட்டவர்கள் தமிழ்ப்பெருங்குடி மக்கள். இவர்கள் உருவாக்கிய எழிற் கோயில்களின் வகைகளும், வளங்களும் சொல்லி விளக்க முடியாதவை. அப்பரடிகளின் அழகு அடிகளால் சொல்வதென்றால்,

**பெருக்காறு கடைக் கணிந்த பெருமான் சேரும்**
**பெருங்கோயில் எழுபதினோ டெட்டும் மற்றும்**
**கரக்கோயில் கடிப்பொழில் சூழ்ஞாழற் கோயில்**
**கருப்பறியல் பொருப்பனையை கொகுடிக்கோயில்**
**இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்**
**இளங்கோயில் மணிக்கோயில் ஆலக் கோயில்**

.............. .............. .............. .............. .............. ..............

என்று கோயில்களின் வகைகளை வரிசைபடுத்தி மகிழ்வதைக் காணலாம்.

இறைக் கோயில்களை வகை வகையாய்க் கட்டி முடித்ததன் அடிப்படைக் காரணம் இறைப்பற்றை வளர்க்கவும், வாழ்க்கை நெறிகளை ஒழுங்குபடுத்தவும்தான் என்றாலும், கோயில்கள் அவற்றை மட்டும் செய்யும் களங்களாக இருந்து வந்தன. கோயில் கள் கலை பல வளர்க்கும் பல்கலைக்கழகமாக, பதிவகமாக, கலைபல வளர்க்கும் கவினுறு வளாகமாக விளங்கின. ஆனால், மக்களின் வாழ்க்கைப் போக்குகள் மாறிவிட்ட காரணத்தினால் கோயில்களின் நிலை அவலமடைந்ததைக் கண்ட பக்திப் பாவலனான ஆறுமுக நாவலரின் வீறுமுகம் முதன் முதல் கந்தசாமிக் கோயிலை நோக்கித் திரும்பியது.

அவர் பிறந்த நல்லூரில் மிகப் புகழ் வாய்ந்தது கந்தசாமிக் கோயில். அங்கே சிவாகமத்திற்கு எதிராகப் பற்பல செயல்கள் நடப்பதைக் கண்ட நமது சமயக் காவலரின் மனம் அனலிலிட்ட

புழுவாய்த் துடித்தது. அத்தகைய கோயிலில் அவர் நுழைய மறுத்துவிட்டார். சமயக் காவலர், தமது பக்திப் பயணத்தின்போது வண்ணார்பண்ணைச் சிவன் கோயிலின் பிரசங்கங்கத்தினூடே கந்தசாமிக் கோயிலில் நடைபெறும் ஊழல்களையும் கூறுவார். அக்கோயிலின் தர்மகர்த்தா கந்தைய மாப்பாணர் என்பவர்; அவர் உல்லாசப் பேர்வழி. பெரும் பணக்காரர்; கோயில் சுப நிகழ்ச்சிகளுக்கான தேவதாசிகள் வேறு தவறான முறைக்குப் பயன்படுத்தப்பட்டனர். மாப்பாணர் அந்த விஷயத்தில் அளவு கடந்த உற்சாகி. கந்தசாமிக் கோயிலில் தாசிக் கூட்டம் வலுத்தது; அதன் விளைவு கோயில் ஒழுகு முறைகள் விபரீதமாயின. நாவலர் வன்மையாக அதனைக் கண்டித்தார்.

ஒருநாள் நாவலரை மாப்பணார் அணுகி, தங்கள் "விருப்பப்படி சீர்திருத்தம் செய்வோம். தாங்கள் ஒருமுறை அங்கு வந்து கந்தபுராணம் படிக்கவேண்டும் என்று வேண்டினார். நாவலர் உடன்பட்டுச் சொற்பொழிவாற்றினார். புராண விரிவுரையுடன் கோயில் சீர்திருத்தத்தைப் பற்றி அடுக்கடுக்காய்ச் சொற்பொழிவாற்றினார். நம் சொற்செம்மல் பேச்சைக் கேட்டோர் மனம் உணர்ச்சி பெற்றது. மக்கள் வெள்ளம் உடனே கோயிலைப் புனரமைக்க எழுச்சிகொண்டது. திருப்பணிக்காக ஆறாயிரம் ரூபாய் வசூலானது. நாவலர் தமிழகத்தில் உள்ள கருவூரிலிருந்து கருங்கல் வரவழைத்துக் கொடுத்தார். இருப்பினும் சில எதிரிகள் புகுந்து கோயில் புனரமைப்பைக் கெடுத்துவிட்டனர். அன்றி லிருந்து நாவலர் கந்தசாமிக் கோயிலில் அடியெடுத்து வைப்ப தில்லை. அதன் ஊழல்களைத் திருந்தப் பேசினார்; எழுதித் தள்ளினார். மக்கள் மனத்தில் கோயில் பற்றிய புனித உணர்வை ஏற்படுத்த அயராது பாடுபட்டார். ஆறுமுக நாவலர் எழுதிய கந்தசாமிக் கோயில் சீர்திருத்தக் கட்டுரைகள் அழியாப் புகழ் பெற்றவை. அங்கு நடைமுறையில் இருந்த பலி கொடுக்கும் வழக்கத்தை நாவலர் வன்மையாகக் கண்டித்தார். மற்றைய கோயிற்களிற் காணும் ஊழல்களையும் கண்டித்தார். இதனால் எதிரிகள் பெருகினர்.

**இலக்கம் உடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்**
**கையாறாக் கொள்ளாதாம் மேல்**

என்ற வள்ளுவரின் வாக்கிற்கேற்ப, கந்தசாமிக்கோயில் ஊழலை இடைவிடாத முயற்சியாலும், உள்ள உறுதியாலும் அணுகி இறுதியில் வெற்றியும் பெற்றார். அயராத முயற்சியில் மறு உருவம்

நம் பக்திச்செம்மல் சமயக் காவலர் ஆறுமுகநாவலர் இவ்வா றெல்லாம் ஆற்றிய தொண்டே அவரைப் பக்தி மேரு எனப் போற்றச் செய்தது. இன்று ஈழத்தில் மக்கள் அனைவரும் சமயப் பற்றுடையவர்களாய் விளங்குகின்றனர். சமயம் பற்றி நல்அறிவு பெற்றிருக்கின்றனர் எனில் அதற்கு முழுமுதற் காரணம் நம் நாவலர் பெருமானே.

**பக்திமேருவின் சமூகச்சிந்தனை**

நாவலரது வாழ்க்கைப் பயணத்தை ஆராய்ந்து நோக்கின் அவரது இறுதிக்காலம் வரை அவர் சமயத் தொண்டோடு கூடவே சமூகத் தொண்டையும் சேர்த்துக் கொண்டு மக்கள் நலனுக்காகவே அயராது உழைத்த செம்மல் என்பதைத் தெற்றென நம்மால் அறியமுடிகின்றது. அவர் அன்னை தெரசாவைப் போல மக்கள் நலனில் அக்கறைகாட்டிப் பொது மக்கள் வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்புடைய பிரச்சினை களில் முன்நின்று அவர்களுக்காக உழைத்துள்ளார். சமயப்பணி என்றால் அதில் சமூக நலனும், மக்கள் நலனும் அடங்கும். 1875ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்தில் ஏற்பட்ட கொடிய பஞ்சமும், வறட்சியும் மக்களைத் துயரத்தில் ஆழ்த்தின. மக்கள் துயர் துடைக்கும் எண்ணமின்றி இருந்த அக்கால அரசியலாளர்களை நம்பியிராது அன்பின் உறைவிடமான பக்தி மேரு செய்த தொண்டே "கஞ்சித் தொட்டித் தர்மம்". யாழ்ப்பாணத்தில் உள்ள சைவசமய வள்ளல்களை ஒன்று சேர்த்து ஏழை மக்களின் வயிற்றுப் பாட்டுக்கு உதவுவதென முடிவு எடுத்த நாவலரின் ஈடு இணையில்லாத முயற்சியால், வண்ணார் பண்ணையில் நாள்தோறும் கஞ்சி சமைத்து ஏழைகளுக்கு வழங்கப்பட்டது. அன்றைய மணிமேகலை இடத்து "அமுதசுரபி" எனும் பாத்திரம் இருந்தது. ஆனால் நம் நாவலரிடமோ அன்பு, சமூக அக்கறை, பக்திவழிக்கல்வி என்ற மூன்று அமுதசுரபிகள் இருந்தன.

Self Trust is the essene of heroism என்ற மொழிக்கு ஆதாரமானவர் நம் நாவலர். சைவமும் தமிழும் உயரத் தோன்றிய இறை தூதனே நாவலர்.

**தாயும் சேயும்**

கோயில்களையும், சமயப் பேருண்மைகளையும் அள்ள அள்ளக் குறையாத அட்சயபாத்திரமெனப் பெற்றிருப்பது நம் பாரதமாகிய தாயகம். எனவேதான் நாவலர் அவர்கள் கல்விக்

கூடத்தைத் தமிழகத்தில் உள்ள சைவத்தின் இருப்பிடமாம் நடராசன் களிநடனம் புரியும் சிதம்பரத்தில் நாட்டினார். ஆனால் இன்று அங்குச் சமயக் கல்வி நடைபெறுவதில்லை. நாவலர் ஏற்படுத்திய ஒரு கல்விக் கூடத்தில் சமயக் கல்வி புகட்டப் படாதது வேதனைக்குரியது. ஆறுமுக நாவலர் அறக்கட்டளை நிர்வாகியை நேர்காணல் செய்தபோது, சமயக்கல்வி பயிற்று விக்கத் தகுந்த ஆசிரியர் இல்லை என்றும், சமயப்பாடத்தை அரசு கட்டாயமாக்கவில்லை என்றும் கூறினார். இந்திய அரசு நாவலரின் பெருமை உணர்ந்து சமயக் கல்வியை அவசியமாக்க வேண்டும். நல்ல நெறிகளைச் சமயக் கல்வியால் மட்டுமே கொடுக்க முடியும்.

இலங்கை சமயக் கல்வியின் பெருமையை நன்கு உணர்ந் துள்ளது. இன்றைய நாள் வரை அங்குச் சமயக் கல்வி நடைபெற்று வருகின்றது. ஆறுமுக நாவலரால் ஏற்படுத்தப்பட்ட சைவப் பிரசங்க முறை இன்று வரை இலங்கையில் பலரால் தொடரப் பட்டுப் பொதுமக்கள் மத்தியிற் செல்வாக்குப் பெற்று விளங்கு கின்றது. இலங்கைத் தமிழ் மாணவர்கள் ஒவ்வொருவருக்கும் தேவாரம், திருவாசகப் பாடல்கள் நன்கு தெரிகின்றன. ஆனால் ஆன்மிகப் பூமியான நம் இந்தியாவில் எத்துணைப் பேருக்குத் தேவாரம் திருவாசகம் தெரியும் என்று ஆராய்ந்தால், வேதனை தான் மிஞ்சுகின்றது. தமிழ்ப் பாடத்தை முதுகலையில் படிக்கும் மாணவர்களுக்குகூடத் தேவாரம், திருவாசகம் தெரியவில்லை என்பது வருத்தந்தரும் மறுக்க முடியாத உண்மையாகும்.

நாவலர் பக்தியையும், தமிழையும் ஈருடல் ஓருயிராகப் போற்றினார். நாவலர் ஒரு நடமாடும் பல்கலைக்கழகம். நெற்றிக் கண் திறப்பினும் குற்றம் குற்றமே என்ற நக்கீரனின் வாக்கிற்கேற்ப வாழ்ந்தவர். சமயப் போலிகளையும், கோயில் அநீதிகளையும் கண்டித்தவர். கண்டனம் என்ற சொல்லுக்குச் சரியான விளக்கம் என்றால் அது நாவலர் கூறும் கண்டனங்களேயாகும். உணர்வும், ஆழ்ந்த அறிவும் கொண்டு பக்தியை அணுகிய நாவலரின் பக்திப் பயணம் என்றும் அழியாத பயணமாகும். தம் வாழ்நாள் முழுவதையும் பக்திக்காக அர்ப்பணித்தவர் ஆறுமுகநாவலர்.

**நேர்காணல்**

நேர்காணல் - ஆறுமுகநாவலரின் அறக்கட்டளை நிர்வாகி சுவாமிநாதன், (முந்நாள் ஆசிரியர் ஆறுமுக நாவலர் பள்ளி, சிதம்பரம்), நாள். *23.7.2004.*

நேர்காணல் - செல்வி மு. கீதா, மெரடஸ்ட் பள்ளி மாணவி, திருச்சி. செல்வி ஆ. குளோரியா, புனித அண்ணாள் மேல்நிலைப்பள்ளி, திருச்சி.

நேர்காணல் - செல்வி ஜானகி, ஈழத்து மாணவி, சமூகவியல் துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், நாள். 1.8.2004.

நேர்காணல் - திருமதி கமலாம்பிகை, ஈழநாட்டைச் சேர்ந்தவர், திருச்சி, நாள் 12.8.2004.

நேர்காணல் - செல்வி ஜானகி, ஈழத்து மாணவி, சமூகவியல் துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், நாள். 1.8.2004.

நேர்காணல் - பரமேஸ்வரி சரவணமுத்து, கனடா நாட்டில் வாழும் ஈழப்பெண்மணி, சிதம்பரம் புண்ணிய நாச்சியார், யாழ்ப்பாண சைவ பரிபாலன சபை, நாள். 25.7.2004.

நேர்காணல் - திருமதி குகதர்சினி பாக்கியநாதன், வவுனியா, இலங்கை.

## துணை நூல்கள்


1. ஆறுமுகநாவலர், **பாலபாடம் (முதற் புத்தகம்,** சைவப் பிரகாச வித்தியாசாலை, சிதம்பரம், 1873).
2. **மேலது, இரண்டாம் புத்தகம், பால பாடம்,** சைவப் பிரகாச வித்தியாசாலை, சிதம்பரம், 1994.
3. **மேலது, மூன்றாம் புத்தகம், பாலபாடம்,** சைவப் பிரகாச வித்தியாசாலை, சிதம்பரம், 1995.
4. **மேலது, நான்காம் புத்தகம், பாலபாடம்,** சைவப் பிரகாச வித்தியாசாலை, சிதம்பரம், 1998.
5. கைலாசப்பிள்ளை, த., **ஆறுமுக நாவலர் சரித்திரம்,** ஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவப் பிரகாச வித்தியாசாலை அறக்கட்டளை, சிதம்பரம், 1916.
6. சுத்தானந்த பாரதியார், நாவலர் பெருமான், ஸ்ரீ அரவிந்தாஸ்ரம அச்சகம், புதுச்சேரி, 1948.
7. சோமகாந்தன், என்., **நாவலர் பெருமான்,** ஜெயந்தி விழா மலர் மெய்கண்டார் அச்சகம் லிட், 161, செட்டியார் தெரு, கொழும்பு - 11, 1972.

8. மெய்க்கண்டான், சி., கர்மா எனப்படும் வினைக் கொள்கை, கண்ணகிக் கோட்ட வெளியீடு, அன்பழகன் தெரு, திருச்சி - 23, கருணாநிதி நகர், 1998.

9. யோகேஸ்வரி, க. நாவலர் வழியில் தமிழ் அறிஞர், திருவல்லிக்கேணி, சென்னை, 2000.

10. வெற்றிச்செல்வன், ஆறுமுக நாவலர் வரலாறு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2000.

11. நாவலர் மாநாடு, மெய்க்கண்டார் அச்சகம் லிட், 161, செட்டியார் தெரு, கொழும்பு - 11, 1969.



# நாவலரின்
# கல்விப் பணியும் இலக்கிய ஆளுமையும்

பன்னிரண்டாண்டுகளுக்கு ஒரு முறை மலரும் குறிஞ்சி மலர் போலப் பல நூற்றாண்டுகளுக்கு ஒரு முறை தோன்றுகின்ற சான்றோர் சிலரே; அவர்களுள் சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த ஆறுமுக நாவலர் குறிப்பிடத்தக்கவர். இவர் தமிழையும், சைவத்தையும் இரு கண்களாகப் போற்றி அவற்றைச் செம்மைப் படுத்துவதிலும் மக்களிடத்தில் பரப்புவதிலும் வேட்கை கொண்டு அவற்றிற்காகவே தம் வாழ்நாளை அர்ப்பணித்து, தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத சிறப்புப் பெற்றவர்.

### தோற்றமும் வளர்ச்சியும்

தமிழிலக்கியங்களில் இரத்தினதீவம் மணிபல்லவம் என்று அழைக்கப்படும் தீவே பின்னாளில் 'மணற்றி' எனவும் 'யாழ்ப் பாணம்' எனவும் அழைக்கப்பட்டது. அத்தகைய யாழ்ப்பாணத்து நல்லூரில் 1822இல் கந்தப்பிள்ளை, சிவகாமியார்க்குப் பிள்ளையாக வேளாளர் குலத்தில் ஆறுமுகநாவலர் பிறந்தார். யாழ்ப்பாணம் தற்போது இலங்கைத் தீவில் உள்ளது.

தன்னைப் போலவே தன் மகனும் புலமை பெறவேண்டு மென அவரது தந்தையார் கருதினார். யாழ்ப்பாண நல்லூரில் தமிழ்ப் பள்ளியொன்றில் 1827இல் நாவலரைச் சேர்த்தார். ஆசிரியரான சுப்பிரமணிய பிள்ளையிடம் ஆறுமுக நாவலர் நீதி நூல்களையும், நிகண்டுகளையும் கற்றார். அதன் பிறகு சரவண முத்துப்பிள்ளை, சேனாதிராய முதலியார் ஆகியோரிடத்தில் தமிழ்க் கல்வியை 1834இல் கற்றறிந்தார். இத்தகைய புலவர் களிடத்தில் கற்ற கல்வியானது, இவர்தம் கூர்ந்த மதிக்குக் 'கடலில் கரைத்த பெருங்காயம்' போலவே இருந்தது. எனவே, தானே முயன்று பல நூல்களையும் கற்றுத் தன் அறிவினைப் பெருக்கிக்

கொண்டார். தமிழில் இவரது புலமை கண்ட இவரது சகோதரர்கள் பார்சிவல்துரை நடத்தி வந்த ஆங்கிலப் பள்ளியில் சேர்த்தனர். இங்கு ஆங்கிலத்திலும் புலமை பெற்றார். இவரது தமிழ்ப் புலமையைப் பார்சிவல் பாராட்டியதோடன்றி வகுப்பு களுக்குப் பாடம் நடத்தவும் சொன்னார்.

வேதநூல் பொது என்றும் ஆகமம் சிறப்பு நூல் என்பதையும் அறிந்து சிறப்பு நூலான ஆகமத்தைக் கற்பதற்குச் சமஸ்கிருதம் அவசியமாக இருப்பதால் அதனைத் தாமே முயன்று கற்றுக் கொண்டார். இதன் மூலம் தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம் ஆகிய மும்மொழிப் புலமை பெற்றவராகத் திகழ்ந்தார்.

**பல்துறை முன்னோடி**

தமிழில் முதன் முதலாகப் 'பிரசங்கம்' (சொற்பொழிவு) ஆரம்பித்தவர் ஆறுமுக நாவலர் என்பர். மேலும், தமிழில் 'கட்டுரை' என்பது முதலில் இவரால் எழுதப்பட்டதே ஆகும். தமிழில் எழுந்த பாடநூல்களுக்கு இவரே வழிகாட்டி தமிழில் வசன நடையிற் குறியீட்டு முறையை முதன் முதலில் புகுத்தியவர் என்ற பெருமைக்குரியவரும் இவரே. இம்முறையினைக் கையாளும் நோக்கம், படைப்பாளியின் அதே உணர்வுகளைப் படிப்போனாகிய கலைஞனும் பெறவேண்டுமென்ற கருத்தாகும். சைவ-ஆங்கிலப் பாடசாலையை முதன்முதலில் ஆரம்பித்தவர். நூல்களைப் பிழையின்றிப் பதிப்பித்தலில் சிறப்புப் பெற்றுத் திகழ்ந்தவர்.

மேலும் நாவலரின் 'வைதூஷண பரிகாரம்' என்ற நூல் உலகின் கண்டன நூல்களில் தலைசிறந்த ஒன்றாக விளங்குகிறது. இந்நூல் நம்மவர் விழித்தெழுந்து பாதிரிகளின் வாயை அடைக்கும்படி சைவத்தின் பெருமைகளைச் 'சைவப்பிரகாச சமாஜீயர்' என்ற புனைப்பெயரில் நிலைநாட்டியுள்ளமை குறிப்பிடத்தக்கது. இத்தகைய பல்வேறு நிலைகளில் ஆறுமுக நாவலர் அந்தந்தத் துறைகளில் வருகின்ற தலைமுறையினருக்குத் தக்க வழிகாட்டியாக வரலாற்றில் தம்பெயரைப் பதிவு செய்து சென்றிருக்கின்றார்.

**கல்விப் பணி**

நாவலர் காலத்தில் யாழ்ப்பாணத்தில் தமிழ்ச்சங்கம் இருந்தது. அச்சங்கம் அரசர்களின் ஆதரவோடு தமிழை வளர்த்து

வந்ததாகவும், நூல் நிலையம் இருந்ததாகவும் அறியப்படுகிறது. தமிழ்க் கல்வியும், சமயக் கல்வியும் வளர்ந்தோங்கும்படிச் செய்ததே ஆறுமுக நாவலரின் கல்விப்பணி ஆகும். கல்வியின் இன்றியமையாமையினை.....

**அன்ன சத்திரங்கள் ஆயிரம் வைத்தல்**
**ஆலயம் பதினாயிரம் நாட்டல்**
**பின்னர் உள்ள தருமங்கள்**

**.......................................................................**

**அன்ன யாவினும் புண்ணியங்கோடி**
**ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்**

என்ற பாடலில் மகாகவி பாரதியார் 'எல்லாத் தருமச் செயல் களைக் காட்டிலும், ஏழைக்குக் கல்வி அளிக்கும் தருமமே சிறந்தது' என்பதனைத் தெரிவிக்கின்றார்.

நாவலரோ, எண்ணற்ற ஏழைச் சிறுவர்களுக்கு இலவச மாகக் கல்வி வழங்கியதோடன்றி இலவசமாகவே உணவு, புத்தகங் களை வழங்கி வந்துள்ளார். இதனால் 'இலவசக் கல்வியின் தந்தை' என்றும் போற்றப்படுகிறார்.

தாம் குருகுலக் கல்வியைப் பயின்ற போதிலும், கல்வியை ஒரு வட்டத்துக்குள் அடக்காமல் அது பரந்து விரிந்து பல்வேறு படிநிலை வளர்ச்சியினை அடைய வேண்டுமென்று பல இடங்களில் பாடசாலைகளை நிறுவி, கல்வித் துறையில் பல புதுமைகளைச் செய்த புரட்சியாளர் நாவலர். யாழ்ப்பாணத்தில் படிக்கும்போதே கீழ்வகுப்பு மாணவர்களுக்கு ஆங்கிலத்தையும், மேல்வகுப்பு மாணவர்களுக்குத் தமிழையும் கற்பித்தலிலேயே அவரது கல்விப் பணி தொடக்கமாகிவிட்டது. பார்சிவல் பாதிரி யாரால் நடத்தப்பட்ட அந்தப் பள்ளியின் நோக்கம் மதமாற்றத் தினை ஏற்படுத்துவதாகும். 1841இல் இங்கேயே தமிழ்ப் பண்டித ராகக் கல்விப்பணி ஆற்றியுள்ளார். அப்போதுதான் பார்சிவல் வேண்டுதலுக்கு இணங்கப் பைபிளின் தமிழ் மொழிப் பெயர்ப்புக்குப் பண்டிதராக இருந்துள்ளார்.

மாணவப் பருவத்திலேயே கல்விப் பணியை ஆரம்பித்த நாவலர் மத்தியக் கல்லூரியில் மாணவர், ஆசிரியர், பண்டிதர் என்ற நிலைகளில் பதினான்கு ஆண்டுகள் கல்விப் பணி ஆற்றியுள்ளார். வெஸ்லியன் மிசன் கல்லூரியில் தமிழ், ஆங்கில ஆசிரியராகவும் விளங்கினார். பார்சிவலிடம் பண்டிதராக இருந்த வேளையில், அப்பள்ளி சைவப்பிள்ளைகளைக் கிறித்துவர்

களாக்கிக் கொள்வதற்குச் செய்த சூழ்ச்சியினை அறிந்து அதற்கு முற்றுப்புள்ளி வைக்கும் பொருட்டு நாவலர், 1846 முதல் தக்க மாணவர்களைச் சேர்த்து இரவிலும் காலையிலும் கல்வி வாயிலாக, சைவசமயக் கல்வியைக் கற்பித்து வந்தார். இவரிடம் கற்றவர்கள் பலர் பிறகு அளப்பரிய தொண்டுகளைச் செய்துள்ளனர். அவர்களுள் சதாசிவப்பிள்ளை, சுவாமிநாதையர், ஆறுமுகப்பிள்ளை, கந்தசுவாமிப்பிள்ளை, ஆறுமுகச் செட்டியார் ஆகியோர் அடங்குவர்.

சைவப்பிரகாச வித்தியாசாலை அருகில் சிவன் கோயில் முன்பு 1847 முதல் வாரந்தோறும் வெள்ளிக்கிழமைகளில் நாவலரால் சொற்பொழிவுகள் நடத்தப்பட்டுள்ளன. அவற்றில் கடவுள் வாழ்த்து, சிவசக்தி, வேதாகமங்கள், திருவிழா, சிவலிங் கோபாசனை, யாக்கை நிலையாமை, சிவதீட்சை, மகளிரொழுக்கம் போன்ற தலைப்புகளை உள்ளடக்கமாகக் கொண்டு நிகழ்த்தப் பட்டுள்ளன. யாழ்ப்பாணத்தில் 1848இல் 'சைவப்பிரகாச வித்தியா சாலை' என்ற பெயரில் கல்விச்சாலையைத் தொடங்கினார். மேலும், பல்வேறு இடங்களிலும் அதை விரிவுபடுத்தியுள்ளார். கல்வியை மாணவர்களுக்குக் கற்பித்ததோடன்றி முதியோர் கல்வியிலும் கவனம் செலுத்தியுள்ளார்.

'சைவப்பிரகாச வித்தியாசாலை'யில் ஆசிரியப்பணி புரிந்தோர் நாவலரிடம் மாணவர்களாகப் படித்தவர்களாதலால் சம்பளம் வாங்காமல் அங்குக் கல்விப்பணி ஆற்றியுள்ளனர். யாழ்ப் பாணம் ஊரினரின் உதவிப் பொருட்களைக் கொண்டு சிதம்பரத் திலும் 1864இல் சைவ வித்தியாசாலை ஒன்றை நிறுவினார். மேலும் இதனைப் பல இடங்களில் விரிவாக்கம் செய்யும் பொருட்டு இரு விக்கியாபனங்களை வெளியிட்டார். இத்தகைய கல்விச் சாலைகளால் விளையும் பயனை மக்களுக்கு எடுத்துக் கூறியுள்ளார்.

மாணவர்களுக்கும், பொதுமக்களுக்கும் சைவ உண்மை களை விளக்குவதற்குரிய நூல்களை (சைவ-சமய எளிய வினா விடை) வெளியிட்டும், துண்டுப் பிரசுரங்கள் மூலமும், சொற் பொழிவுகள் வாயிலாகவும் மற்றும் சைவ சமய விழிப்புணர்வை ஏற்படுத்துவதற்கு அச்சகம் நிறுவி அதன் வழியாகத் தம் நூல்களைப் பதிப்பித்தும் வழங்கியுள்ளார். 1884இல் சிதம்பரத்தில் தொடக்கக் கல்வியாக ஆரம்பித்த வித்தியாசாலை 1945இல் உயர் தொடக்கப் பள்ளியாக வளர்ந்து 1948இல் உயர்நிலைப்

பள்ளியாகச் சிறந்து 'தவத்திரு ஆறுமுக நாவலர் உயர்நிலைப் பள்ளி' என்ற பெயரில் செயல்பட்டு வருகின்றது. சைவவித்தியா சாலை மூலம் தமிழ்க் கல்வியைச் சமய அடிப்படையில் வளர்த்தும், நூல்களை வெளியிட்டும் பணிபுரிந்துள்ளார். 1848இல் தம் பணிகளுக்குத் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ள வேண்டிய நிலையால் பார்சிவலிடம் தமது பணி தொடருவது சாத்தியப்படாதலால் ராஜினாமா செய்துவிட்டார்.

மாணவர்களின் மனவளர்ச்சி, கல்விவளர்ச்சி ஆகிய வற்றைக் கருத்திற்கொண்டு தமிழ், ஆங்கிலம்-தமிழ், வடமொழி-தமிழ் அகராதிகள் கல்வித் தேவைகளால் உருவாக்கப்பெற்றன. 'சைவத்தையும் அதன் வளர்ச்சிக்குக் கருவியாகிய கல்வியையும் வளர்த்தல் வேண்டும் என்ற பேராசையே தன்னை இருபது வருடம் இரவும் பகலும் தொண்டாற்றச் செய்தது' என்ற தனது எண்ணத்தினை விக்யாபனம் (1868) எனும் தன் கட்டுரையில் பதிவு செய்துள்ளார். இந்தக் கல்விப் பணியின் வாயிலாக, சைவத்தை மக்களிடம் பரப்புவதற்கு நாவலரின் பதினான்கு வருட கிறித்துவச் சூழல் காரணமாக அமைந்திருக்கின்றது. ஆப்பிரிக்க தேசம் காந்தியை 'மகாத்மா' ஆக்கியது போலக் கிறித்துவச் சூழல் யாப்பாணத்தில் ஆறுமுக நாவலரை நமக்குச் சமயக் காவலராக அடையாளம் காட்டியிருக்கிறது.

சைவசமயக் குரவர் வழியில் சைவப் பணியைச் செய்யப் புறப்பட்டவர் கல்விப் பணி புரிய நேர்ந்தது. கல்விப்பணியைக் கருவியாகக் கொண்டே சைவப் பணியை மேற்கொண்டார் நாவலர். ஈழத்திலும், தமிழகத்திலும் - தமிழையும் சைவத்தையும் வளர்க்க அரும்பாடுபட்டவர். ஆதலால் 'சைவ சமயத்தின் ஐந்தாவது குரவராகப் போற்றப்படுகின்றார்.

பார்சிவல் பாதிரியிடம் பணியாற்றியபோது, அவர்கள் மதத்தை மக்களிடம் பரப்பும் முறையை அறிந்து கொண்டு அதனைப் பின்பற்றிப் பாடப் புத்தகங்கள் வாயிலாகக் கல்விச் சாலை துணைக்கொண்டு பாலபாடங்களின் வழியாக மாணாக்கர்களுக்குச் சைவக் கல்வி புகட்டினார். இவரது தமிழ்ப் பணியிலுள்ள ஈடுபாட்டினை இலங்கை 'பூமிசாத்திரம்' வலியுறுத்துகின்றது.

தமிழர்கள் மதமாற்றம் அடைவதைக் கண்டு கொதித் தெழுந்த நாவலர் 'விழிமின் எழுமின், அறியாமையாய் இருளி

வாழ்ந்து துயிலாதீர், உங்கள் முன்னோர் அளித்த அருஞ் செல்வமாகிய பழமையைக் கைவிடாதீர் என முழங்கியதோடு, இது குறித்து நூற்றுக்கும் மேற்பட்ட துண்டுப் பிரசுரங்களை, சிறு வெளியீடுகளை அச்சாக்கி வெளியிட்டார். இவரது முன் மாதிரியைப் பின்பற்றி நூற்றுக்கணக்கான சைவ வித்தியா சாலைகளும், இந்துக் கல்லூரிகளும் தோன்றித் தமிழுக்கும் சைவத்திற்கும் அருந்தொண்டாற்றின என்பது குறிப்பிடத்தக்கது.

சிறுவர்களுக்குப் (பாலபாடம்) பாடப்புத்தகம் முறை வகுத்து எழுதி வழிகாட்டினார். இது தமிழ் உள்ள மட்டும் தமிழர் வாழ்விற்கு இன்றியமையாத் துணையாக விளங்கும். மேலும் தமிழறிவுடன் உலகறிவும், சமய ஞானமும் தருவதாக அமைந் துள்ளது. பாலபாடம் - புத்தகத்தைத் தானே எழுதி அச்சிட்டு வெளியிட்டு 1872ஆம் ஆண்டு தமிழ்நாட்டில் ஒரு புரட்சியை ஏற்படுத்தினார். இம்முயற்சியைப் பத்திரிக்கைகளும் புகழ்ந்துள்ளன.

இந்திய தேசத்தைப் பற்றியும் கடவுளைப் பற்றியும் - இனிய உரைநடையில் (கடவுள் வணக்கம்) காலை, மாலை புகட்டி யுள்ளார். எல்லா மதத்துக்கும் பொதுவாக நீதிகளைப் புகட்டு கின்றார். இதனை 'வசனத் திருக்குறள்' என்றே கூறலாம்.

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு

என்ற குறளை அறியாதவரா நம் நாவலர். எனவே எழுத்து, சொல், சொற்றொடர் - அறிவைப் புகட்டி முடிவில் தமிழ் எண்கள் - கூட்டல் - பெருக்கல் வாய்பாடுகளுடன் பாலபாடம் திகழ்கிறது. இத்தோடன்றி, நகைச்சுவையோடு சிறுகதையில் உயர்ந்த கருத்துக்களை மாணவர்களுக்கு எடுத்துச் சொல்லுகின்றார். இவ்வித எதிர்பார்ப்பும் இல்லாமல் காலை இரவு கருத்துடன், எளிய இனிய தமிழில் இலக்கணத்தைக்கூட இலக்கியமாகக் கூறும் திறம் படைத்தவர் நாவலர்.

**மனித வாழ்வின் அடிப்படைத் தத்துவமாக**

'இந்தச் சரீரத்தை இறைவன் எனக்குத் தந்தது சைவசமயத்தை வளர்த்தற்குக் கருவியான கல்வியை வளர்த்தற் பொருட்டேயாம்' என்று குறிப்பிடுகின்றார். 1864இல் சிதம்பரத்தில் ஆறுமுக நாவலரால் தொடங்கி வைக்கப்பட்ட 'சைவ வித்தியாசாலை நூறாண்டுகளுக்கும் மேலாக இன்றுவரை சிறப்பாகச் செயல்பட்டு வருகின்றது.

*நாவலர் தீர்க்கதரிசி*

பிறகு நடக்கப் போவதை நூற்றாண்டுக்கு முன்போ (அ) அரை நூற்றாண்டுக்கு முன்போ (அ) சில வருடங்களுக்கு முன்போ தம் உள்ளொளியால் அறிந்து உரைக்கக் கூடியவர் எவரோ அவரே தீர்க்கதரிசி ஆவார். இந்தியா சுதந்திரம் அடைந்தது 1947 ஆகஸ்ட் 15 அன்று. அதற்கு முன்பே.....

ஆடுவோமே பள்ளு பாடுவோமே
ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்

என்று 1908க்கு முன்பே பாட்டுக்கொரு புலவன் மகாகவி பாரதி பாடியதிலிருந்து அவரது தீர்க்கதரிசனத்தை அறிய முடிகிறது. அதைப்போல நாவலரின் கல்வி செயல்முறைத் திட்டங்கள் இலங்கை அரசின் பாடத்திட்டத்தில் இன்று, இலங்கைக் கல்வித் துறையில் சுதந்திரத்திற்கு முன்பும் பின்புமாகக் கல்வித்துறையில் மாறுபாடுகள் ஏற்பட்டுள்ளன என்பதையும் அவைகளில் இலவசக் கல்வி, தாய்மொழி மூலம் கல்வி, சமயக் கல்வி ஆகிய வற்றில் கொண்டுள்ள மாறுபாடுகளைக் காணும்போது

1. 1945இல் இலங்கை அரசு தொடங்கிய இலவசக் கல்வியை நாவலர் 1846லேயே மாணவர்களுக்கு அளித்துள்ளார்.
2. 1946இல் இலங்கை அரசு தாய்மொழிக் கல்வியை அமல் படுத்தியுள்ளதை நாவலர் 1848லேயே சைவப்பிரகாச வித்தியா சாலை மூலம் வழங்கியுள்ளார்.

ஆரம்ப வகுப்பு தொடக்கம் முதல் பல்கலைக்கழக இறுதி வகுப்பு வரை தாய்மொழி மூலம் கல்வி புகட்ட ஆரம்பித்தமை குறிப்பிடத்தக்கது. எந்த மாணவனுக்கும் கல்வியூட்டுவதற்கு அவனுடைய தாய் மொழியே மிகச் சிறந்தது என்பதே பலதேசக் கல்வி நிபுணர்களும் உளத்தத்துவ விற்பன்னர்களும் கண்ட முடிவாகும். நாவலரின் காலத்திலிருந்தே முக்கியமாகப் பாடசாலைகள் யாவும் ஆங்கிலத்தையே போதனா மொழியாகக் கொண்டவை. நாவலர் பயின்றதேகூட அத்தகைய பாட சாலையிலேதான். 1848ல் அவர் ஆரம்பித்த வித்தியாசாலை தமிழையே எல்லாப் பாடங்களுக்கும் போதனா மொழியாகக் கொண்டது.

தாய்மொழியிலேயே ஒவ்வொரு பாடத்திலும் தரமான நூல்களைத் தயாரித்தல் மற்றும் தாய்மொழி மூலம் கல்வி

கற்பிப்பதே சிறந்தது என்பதை நாவலர் நூற்றாண்டுக்கு முன்பே செயற்படுத்தியுள்ளார்.

3. 1955இல் இலங்கை அரசு சமயப் பாடத்தை (அ) சமயக் கல்வியைக் கட்டாயமாக்கியுள்ளது.

நாவலர் 1848லேயே சமயக் கல்வியை மாணவரிடத்தும், மக்களிடத்தும் பரப்புவதற்கு வித்தியாசாலை வழியாகவும் (சைவ சமய எளிய வினாவிடை) சொற்பொழிவுகள் மூலமாகவும் அமல்படுத்தியுள்ளார். மேலும் சமயக் கல்வியை மையமாக வைத்து ஏனைய யாவற்றையும் அதற்குத் துணையானவையாக்கித் தம் கல்வித் திட்டத்தை அமைத்துள்ளார். கல்வி சம்பந்தமாக எழுதிய எழுத்திலும் செய்த செயலிலும் இந்த நோக்கமே மேலோங்கி நிற்பதைக் காணலாம்.

4. அரசு பிரதிபேதமின்றிப் பதிப்பிப்பதை 1956ல் செயல்படுத்தியுள்ளதை நாவலர் 1861லேயே பிரதிபேதமின்றியும், பிழையின்றியும் பதிப்பித்தலில் சிறப்புப் பெற்றுள்ளமையை அறிய முடிகிறது.

இன்றைய படிமுறை பாடங்களையும், பாடநூல்களை வடிவமைத்தும் விரிவுரை மூலம் அறிவு புகட்டியும், முதியோருக்கு ஏற்பப் போதனை வசதி அமைத்துத் தந்தும், பிற மொழிகளிலிருந்து அறிவு நூல்களை மொழிபெயர்த்தும் ஆகிய நிலைகளில் கல்விப் பணியின் வாயிலாக, சைவ சமயக் கருத்துக்களை வழங்கியுள்ளார்.

இலக்கியம், ஆங்கிலம், சங்க இலக்கியம், பக்தி இலக்கியம், காப்பியத்தில் சிலப்பதிகாரம், நிகண்டுகள் இவற்றில் புலமையும் மற்றும் சமஸ்கிருதத்தில் படித்தறியத் தெரிந்தும் அம்மொழியிலுள்ள வேதாகம நூல்களைக் கற்றும் தெளிந்தார். இவற்றின் கருத்துக்களைச் சொற்பொழிவுகள் வாயிலாகச் சமயக் கல்வியுடன் கலந்தும் சில நேரங்களில் பேசியுள்ளார்.

## பல்துறை வித்தகர்

ஆசிரியர் என்னும் சொல்லுக்கு உளவியல் அறிஞர்கள் ஐம்பதுக்கும் மேற்பட்ட விளக்கங்களைத் தந்துள்ளனர். அவர்கள் கூறும் கருத்துக்களைக் கூர்ந்து நோக்கினால், ஒரு தனி நபரைத் தோற்றத்தாலும், சிந்தனையாலும், செயலாலும் மற்றவர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டும் சிறப்பியல்புகள் என்று பொருள்படும். சுருங்கக்கூறின், பிறர் ஏற்றுக்கொண்டு பின்பற்றுமாறு

அமைந்துள்ள தனிநபரின் தனிச்சிறப்பு என்று அதனைச் சொல்லலாம்.

நாவலர் இயற்புலமையும் (தலைமுறைக் கல்வி) - 'குலவிச்சை கல்லாமல் பாகம் படும்' செயற்புலமையும் (தாமே முயன்று கற்ற அறிவு) இரண்டையும் கொண்டவர். இளம் வயதிலேயே பக்தி இலக்கியம், இலக்கணம் உள்ளிட்ட நூற்களைப் படித்தறிந்து ஆழ்ந்து புலமை பெற்றவர். ஒன்றை ஒருமுறை கேட்டதும், படித்ததும் உள்ளத்தில் பதிய வைத்துக் கொள்ளும் திறமே அவரைப் பேரறிவின் புதையலாக விளங்கச் செய்தது.

பார்சிவல் பள்ளியில் பயின்ற நாவலரின் இருமொழிப் புலமை (தமிழ், ஆங்கிலம்)யைக் கண்ட பார்சிவல், கீழ்வகுப்பு மாணவர்களுக்கு ஆங்கிலத்தையும் மேல்வகுப்பு மாணவர் களுக்குத் தமிழையும் பாடமாக நடத்துமாறு கூற, அப்பணி யினைச் செய்துள்ளார். கல்வி கற்கும் வயதில் கல்வியைக் கற்பிக்கும் வாய்ப்பு எத்தனை அரிய வாய்ப்பாகும். இத்தகைய வாய்ப்பு, புலமைபெற்ற இவரை வந்து சேர்ந்ததில் வியப்பொன்று மில்லை என்றே கூறலாம்.

நாவலரின் உரை எழுதும் நடையானது இனிமையாகவும் எளிமையாகவும் ஆற்றொழுக்காகவும், செந்தமிழாலும் ஆனது. வரம்பு கடவாது, உவமைகள், பழமொழிகள், இவரது உரைநடை நூல்களில் விரவியிருக்கும். அவை எடுத்துக்கொண்ட பொருளை விளக்கவும், செம்மைப்படுத்தவும் படிப்போருக்குப் பெரிதும் பயன்படும் வகையில் அமைந்திருக்கும். ஆனால், புராண வசனங்களில் சொற்றொடர்கள் நீண்டிருக்கும்.

குருகுலக் கல்வியைக் கற்ற நாவலர் தான் வாழ்ந்த காலத்தையும் தமது சூழ்நிலையையும் சிந்தித்துச் செயலாற்றியவர். இவரது புலமையைக் கண்டு வியந்து இவரைக் குருவாக மதித்துப் போற்றியவர் பார்சிவல் (குரு - அறியாமையை நீக்கி அறிவொளி யைக் கொடுப்பவர்). இவர் நால்வர் பெருமக்கள் வழியிலே நின்று வேதநெறி தழைத்தோங்கவும் சைவசமயம் வளர்ச்சி பெறவும் தீதகன்று உலகம் உய்யவும் ஞான நெறி தழைக்கவும் பாடு பட்டவர்.

வசனநடையில் - புதியதோர் உரைநடையினைத் தொடங்கி அதில் சொல்லின் வளமும், தெள்ளிய நடையும், கருத்துச் செறிவும், குறியீடுகளும் கொண்டு கையாண்டுள்ள திறமே

இவரை வசனநடை கைவந்த வல்லாளர் என்றும், உரைநடையின் தந்தை என்றும் போற்றுவதற்குரியனவாக அமைந்துள்ளன.

இலக்கியத்தைப் பண்டிதச் சிறையிலிருந்து விடுவித்து மக்களிடம் பரவ எளிய உரையில் வடித்துச் சேர்ப்பித்தார். குறியீட்டு இலக்கணம் தமிழில் அறிமுகம் செய்ததின் நோக்கம் - உரைநடை எழுதுவோனின் உணர்ச்சியைப் பயில்வோனும் இனிதே பெற வேண்டும் என்பது. இலக்கண வழு இல்லாமல் எழுதவேண்டும் என்ற நிலையை முதற்கண் செய்து காட்டியவர். வினாவிடை முறையில் தமிழ் இலக்கணத்தையும், சைவ சமய உண்மைகளையும் மக்களிடையே கொண்டு சென்றவர். மேலும் தேவை எனக் கருதுமிடத்தில் வடமொழிச் சொற்களையும் கையாண்டுள்ளார்.

காலத்துக்கு ஏற்ற வகையில் தமிழ் உரைநடையை வளரச் செய்வதற்கு அவர் கையாண்ட வழிவகைகள் பாராட்டுதற்குரியன. பண்டிதர் முதல் பாமரர் வரை அறிந்து கொள்ளுகின்ற முறையில் பேச்சுத் தமிழை அடிப்படையாக வைத்துப் புதிய நடையினைக் கையாண்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

நூல்களையும் பிழையின்றிப் பதிப்பிப்பதில் தனித்திறம் கொண்டவராக நாவலர் விளங்கியுள்ளார். இவரது பதிப்பிற் காணப்படும் பொலிவினையும் தெளிவினையும் கண்ட சேதுபதி மன்னர் பொன்னுசாமி தேவர் பாராட்டியதோடன்றித் தானே வலிய பெரியதொரு அச்சு இயந்திரம் அமைக்கும் பணியில் உதவியுள்ளார். பார்சிவல் வேண்டுதலுக்கிணங்க நாவலர் மொழி பெயர்த்துத் தந்துள்ளமை இவரது மொழிபெயர்ப்புப் புலமைக்குச் சிறந்ததொரு உதாரணமாகத் திகழ்ந்ததோடன்றித் தமிழ்ப்புலவோரிடத்தினின்று பாராட்டுதலையும் பெற்றுத் தந்தது.

சென்னையிலிருந்து 'தக்ஷிண தேச யாத்திரை' செய்து கொண்டு போகுங்காலத்து, இதற்கு முன்பே இவரது கல்வித் திறமை முதலியவற்றைக் கேள்வியுற்றிருந்த திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீன உபய சந்நிதானங்களும் திருமடத்துக்கு இவரை அழைத்து உபசரித்து வித்துவான்களுக் கெதிரில் இவரிடம் இலக்கண இலக்கியங்களிலும் சைவசித்தாந்த சாத்திரங்களிலும் பல ஆட்சேபங்களைப் பண்ணும்போது அதற்கு அவர் அளித்த பதிலுரைகள் - அவரை அழைத்து உபசரித்தவர்களுக்கு மிக்க மகிழ்ச்சியை அளித்ததாம். மேலும்

நாவலரின் சுருங்கச் சொல்லுதல் முதலியன அழகுடையதாயும், செந்தமிழ்நடை, இலக்கண விதிக்குச் சிறிதும் மாறுபாடு இல்லாத தன்மை, தருக்க சம்பிரதாயம் நிறைந்ததாகவும் இருந்தமை, அவரது அரிய செயல்களைக் கண்டும் "நாவலர்" (நாவில் வல்லார்) என்ற பட்டத்தை 1849இல் திருவாவடுதுறை ஆதீனத்தார் அளித்துச் சிறப்பித்துள்ளனர். அன்று முதல் ஆறுமுகம்பிள்ளை அவர்கள் ஆறுமுக நாவலராகக் குறிப்பிடப்படுகின்றார்.

சொற்பொழிவுகள் நிகழ்த்தும்போது சொற்கள் நீரோட்டம் போல வந்துகொண்டே இருக்குமென்றும் சொற்பஞ்சம் இருக்காதென்றும் சொன்ன சொல் திரும்பச் சொல்லும் வழக்கம் இவருக்கு இல்லை என்றும் இவர் பேசுவதைச் சிறுபிள்ளைகளும் விளங்கிக் கொள்வர் என்பதையும் த. கைலாசப்பிள்ளை தெரிவிக்கின்றார். 'மேடைப் பேச்சாளர் என்போர் கடவுளர் அருளிய உயர் வடிவங்களே' என்பர். இந்தக் கூற்றை மெய்ப்பித்த தமிழ்ப் பெரியோர்களில் நாவலர் குறிப்பிடத்தக்கவர்.

மதுரை திருஞானசம்பந்த சுவாமி ஆதினத்துப் பண்டார சந்நிதிகளுடைய அனுமதிப்படி மீனாட்சி அம்மையார் சந்நிதானத்திலே பிரசங்கம் நடத்தியபோது கோயில் அர்ச்சகர் மீனாட்சி அம்மையாருக்குச் சாத்திய விபூதிப் பிரசாதமும் பரி வட்டமும் புட்ப மாலையுங் கொண்டுவந்து நாவலருக்குச் சாத்தினர் என்ற செய்தியைப் படித்தறியும்போதே உடல் சிலிர்ப்ப தோடன்றிக் கண்களில் ஆனந்தக் கண்ணீரை வரவழைக்கின்றது.

பார்சிவல் பாதிரியாருக்குப் பண்டிதராகுங் காலத்தில் இவரோடு உடன் கற்ற மு. தில்லைநாதப்பிள்ளை, சு. சின்னப்ப பிள்ளை இருவரும் கிறித்தவராக மாற இருப்பதனை அறிந்த நாவலர் அவ்விருவரையும் அழைத்து அவர்களுக்குச் சைவ சமயத்தின் உண்மைகளை எடுத்துக்கூறி மனதிற் பதியுமாறு போதித்தார். அவர்களும் மனம் திருந்தினர். கிறித்துவராதலை ஒழித்து நாவலரின் வித்தியாசாலையில் உபாத்தியாயராகவும், இவரிடத்திலும், சைவ சமயத்தினிடத்தும் மிக்க பற்றுள்ளவராகவும் இருந்துள்ளார் சின்னப்பபிள்ளை என்பதையும் அறியமுடிகிறது.

நாவலர் திருக்குறள், மூதுரை, நல்வழி, நன்னெறி, நீதி நெறி விளக்கம் என்பன போன்ற நீதி நூற்களில் கூறப்பட்ட ஒழுக்கவியற் கருத்துக்களை எல்லாம் சாரமாகத் தந்துள்ளார். இந்த நீதி வாக்கியங்கள் ஒவ்வொன்றும் நாவலரது ஆளுமையின் கூறாக அமைந்த ஒழுக்கக் கோட்பாடாகக் கொள்ளலாம்.

**ஒழுக்க விழுப்பந் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்**

என்ற குறள்வழி ஒழுகிய நாவலர் பொதுவாழ்விலும் உயர்ந்த ஒழுக்க நெறிகளைக் கடைப்பிடித்தவர். தாம் மட்டுமின்றிச் சமுதாயத்திலுள்ள மற்றையோரும் ஒழுக்கத்தில் வழுவாதிருக்க வேண்டுமென விழைந்தவர். குறிக்கோளை வைத்துக்கொண்டு முயலும் ஒருவர் சிந்தனை, சொல், செயல் ஆகிய யாவும் அந்த ஒன்றையே சுற்றி வரும். அவ்வாறே நாவலருடைய சிந்தனையும் சொல்லும் செயலுமெல்லாம், 'இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது, நாம் கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம்' என்ற கோட்பாட்டில் நாவலர் உறுதியாகத் திகழ்ந்தார். அதன் பயன் அவர் வாழ்க்கை முழுவதும் பொதுநலப் பணியிலேயே அமைந்தது. செயற்கரிய செய்வார் பெரியர். உண்மையிலேயே, ஒருவருடைய எழுத்திலும் நடையிலும் அவரது ஆளுமை வெளிப்படுகின்றது. அவர் எவ்வாறு சிந்தனை செய்கிறாரோ, எவ்வாறு உணருகின்றாரோ, அவ்வாறே எழுதுகின்றார்.

**உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின்**
**வாக்கினிலே ஒளியுண்டாகும்**

என்ற மகாகவி பாரதியின் கூற்றும், "உள்ளத்தின் குரலே ஒருவரின் உரைநடை" என்ற எமர்சனின் கூற்றும் இந்த உண்மையை எடுத்துக்கூறுகின்றன. எனவே எழுத்துநடை மட்டுமல்ல, பேச்சுத் திறமை, வேறுபடுத்திக் காட்டுகின்ற செயல்திறமை ஆகியனவும் ஆளுமையின் வெளிப்பாடாகும். நாவலருடைய வாழ்க்கைக் குறிக்கோளுக்கு அரண்செய்வன அவர் கடைபிடித்த ஒழுக்க விதிகளாகும்.

நாவலரின் ஆளுமை மலையினும் மாணப் பெரிது. அது நம்மெல்லோரையும் ஆளவல்லது. நமக்கு வழிகாட்ட வல்லது.

**நாவலரைப் பற்றி.........**

**நல்லைநகர் ஆறுமுக நாவலர் பிறந்திலரேல்**
**சொல்லு தமிழ் எங்கே**

- சி.வை. தாமோதரம் பிள்ளை

**தமிழுக்குத் தொண்டு செய்வோன் சாவதில்லை**

என்ற பாரதிதாசன் கூற்று நாவலருக்கு மிகமிகப் பொருந்தும்.

வசன நடை கைவந்தவல்லாளர்

- பரிதிமாற்கலைஞர்

உரைநடையை உயிர்நடையாக முதன்முதலில்
கையாண்ட பெருமை நாவலரையே சாரும்

- புலவர் மாயாண்டி பாரதி

தமிழ் உரைநடை ஆறுமுகநாவலரால் ஒருவகைத் திருத்தமும்
அழகும் பெற்றது - கலைக்களஞ்சியம்

சொற்பொழிவாற்றுவதில் இணையற்றவர்

- தமிழ்ப்புலவர் அகராதி

கல்லாதவரின் கல்நெஞ்சும்கனியப் பேசும் கனிவுடையான்

-கவிமணி

சாகையிலே தமிழ் படித்துச் சாகவேண்டும்

- புதுவைக் கவிஞர்

மேலும், உ.வே.சா., மறைமலையடிகள், இலங்கைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் வி. செல்வநாயகம் உள்ளிட்ட பலர் நாவலரைப் பாராட்டியுள்ளதை அறிய முடிகிறது.

இலங்கையிலும், இந்தியாவிலும் (குறிப்பாகச் சிதம்பரத்தில்) வித்தியாசாலை வாயிலாகத் தமிழ்க் கல்வியையும் சமயக் கல்வியையும் நம் மக்களிடையே பரப்பிய நாவலர் நோய் வாய்ப்பட்டிருந்த தன் இறுதிக் காலத்தில் மணிவாசகர் பாடலைத் திரும்பத் திரும்பப் பாடிக் கொண்டிருந்தார்.

தன் வாழ்வின் இலட்சியத்தை - விஞ்ஞானம் என்ற நூலில் எழுதியுள்ளார். அதனைப் படித்தறிதல் தமிழர் ஒவ்வொருவரின் கடமையாகும்.

### நாவலரின் நா–மொழி

1834இல் ஆங்கிலக் கல்வி படித்தார். அதன் பிறகு 1841இல் பார்சிவல் துரைக்குப் பண்டிதரானார். தமயன்மார் உத்தி யோகத்தில் இருந்தபோதும் அவர்களிடம் பொருளுதவி பெற வில்லை. 1848இல் பார்சிவல் துரை ஒருநாள் 'தங்களுக்கு உயர்வாகிய வேதனம் தருவேன். தாங்கள் என்னை விடலாகாது' என்று பலதரம் வற்புறுத்திச் சொல்லிய போதும் அதில் நாவலர் விருப்பம் வைக்கவில்லை.

சக்திக்கேற்ற உத்தியோகம் முயற்சி செய்தால் தப்பாது சித்திக்கும் என்பதை அறிந்தும், உத்தியோகம் வலிய வாய்த்த போதும் விரும்பாது, இல்வாழ்விலும் புகாது, வேலை யின்மையால் ஏற்படும் அவமதிப்பைப் பார்த்தும் நாவலர் உத்தியோகத்தை விரும்பவில்லை.

இதற்கெல்லாம் காரணமாக, சைவ சமயிகளுக்கு 'விக்கியா பனம்' பத்திரிக்கையில் .....

சைவ சமயத்தையும் அதன் வளர்ச்சிக்குக் கருவியாகிய கல்வியையும் வளர்த்தல் வேண்டும் என்ற பேராசையே அவரது பேராசை. இப்பேராசையால் இருபது ஆண்டுகளில் செய்த முயற்சிகள் பலவற்றுள் வெற்றி பெற்றவை மிகச் சிலவேயாம். சைவ சமயிகள் தங்களால் ஆன உதவிகளைச் செய்திருந்தால் அரிய செயல்களை முன்னரே முடித்திருக்க முடியும் என்றும்; என் சிறு வயது முதலே சைவசமயத்தை வளர்த்தற்கு வேண்டும் முயற்சிகளைச் செய்வாரில்லையே என்ன செய்யலாம். முடித்தற்குச் சக்தியில்லாத எனக்குத் தந்தருளிய சிவபெருமான், சக்தியுடைய மற்றையோர்களுக்கு இச்சிந்தனையைக் கொடுக்க வில்லையே என இரவும் பகலும் கவலை கொண்டதோடன்றி அதனைப் பற்றியே பலரிடமும் பேசியே என் காலத்தைப் போக்கினேன் என்பதனைத் தெரிவிக்கின்றார்.

தனது காலத்தைக் கைம்மாறு கருதாது உலகத்தாருக்குப் பயன்படவேண்டும் என நினைத்து 1846இல் பிள்ளைகளுக்கு இரவு பகல் இலவசமாகத் தமிழ்க்கல்வி கற்பித்துவந்ததையும் நாவலர் தெரிவிக்கின்றார்.

நாவலரின் ஒரு சாலை மாணாக்கரான கார்த்திகேய ஐயரின் பிரச்சார நாள் முறை வந்தது. அந்நாளில் தம்மால் பிரச்சாரம் செய்ய இயலாத காரணத்தை நாவலரிடம் தெரிவித்துச் சென்று விட்டார். நாவலரோ இதனைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை. கூட்டத்தினர் நாவலரை உரையாற்றச் சொன்னதும் 'நான் ஆயத்த மில்லை' என்று நாவலர் கூறியதும் அங்கிருந்தோர் பலர் நகைக்க, அவர் உடனே.....

இங்கிலாந்தில் பரீட்சைக்குப் போன பிள்ளைகளுக்கு ஒவ்வொருவரிடமும் எழுதும்படிக் காகிதத்திற் குறித்துக் கொடுக்கப்பட்டதென்றும் அவருள் ஒருவனுக்கு ஒன்றுமே

குறிப்பிடாமல் வெற்றுப் பேப்பர் கொடுக்கப்பட்டதென்றும் மற்றவர்களெல்லாம் எழுத, இவன், 'சூனியத்திலிருந்து கடவுள் உலகத்தைச் சிருட்டித்தார்' என்பதே தனக்குக் கொடுக்கப்பட்ட விசயம் எனக் கருதி எழுதினான் என்று தாம் வாசித்த ஒரு கதை நினைவுக்கு வர 'ஆயத்தமில்லை' என்றும், தாம் முன்பு சொல்லிய வாக்கியத்தையே தலைப்பாகக் கொண்டு 'மரணத்துக்கு ஆயத்த மில்லை' என்று மிக விரிவாக இனிமையும் சாதுரியமும் தோன்றப் பேசி முடித்தார் என்பதைத் த. கைலாசம்பிள்ளை குறிப்பிடுகின்றார்.

நாவலர் பிரசங்கத்துக்கு ஆயத்தப்படுவது, பிரசங்கத்துக்குச் சிறிது நேரத்துக்கு முன்பு, சில நூல்களைப் பார்த்து அவற்றி லிருந்து குறிப்பெடுத்துக் கொள்வாராம். முன்பே தயாரித்துக் கொண்டு சொற்பொழிவு ஆற்றுவதினும் ஆயத்தமின்றி அந்நேரத்திற்குப் பேசுகின்ற மேற்கூறிய நிலை போன்றமைவதே பெரும்பாலான நேரங்களில் சிறப்புடையதாக அமைந்துள்ளது என்பதும் நூலின் வழியே அறியப்படுகிறது.

## இறுதிப் பிரசங்கத்தில் நாவலரின் கூற்று

யாழ்ப்பாண சைவப்பிரகாச வித்தியாசாலையில் 1879ஆம் ஆண்டு சுந்தரமூர்த்தி நாயனார் குருபூஜை தினத்தில் தேவாரம் பற்றி ஆற்றிய சொற்பொழிவின் முடிவில் ........

"நான் உம்மிடத்துக் கைம்மாறு பெறுதலைச் சிறிதும் எண்ணாது முப்பத்திரண்டு வருடம் உங்களுக்குச் சைவ சமயத் துண்மைகளைப் போதித்து வந்தேன். எனக்குப் பிறகு சைவசமயம் குன்றிப் போகும் என்று பாதிரிமார்கள் சொல்லுகிறார்கள். எனவே நான் உயிரோடு இருக்கும்போதே உங்களுக்காக ஒரு சைவப் பிரசாரகரைத் தேடிக் கொள்ளுங்கள். இன்னும் என்னைப் போலப் படித்தவர்களும் சன்மார்க்கர்களும் அநேகர் வருவார்கள். ஆனால் கைம்மாறு கருதாது சமயத்தைப் போதிக்க என்னைப் போல ஒருவரும் வாரார். இதுவே எனது கடைசிப் பிரசங்கம். இனிமேல் உங்களுக்குப் பிரசங்கம் பண்ண மாட்டேன் என்னும் கருத்துப் புலப்பட விரித்துக் கூறும் செய்தியைப் படிக்கும்போதே விழி மேகத்திலிருந்து கண்ணீர் மழை பூமிக் கன்னத்தை நனைக்கின்றது. பிரசங்கத்தைக் கேட்டவர்களின் நிலையினை விரித்தற்கியலாது.

"உள்ளுவதெல்லாம் உயர் உள்ளல்" என்ற வள்ளுவரின் வாய்மொழிக்கேற்ப நாவலரின் எண்ணம், சொல், செயல் அனைத்தும் உயர்வுடையனவாக அமைந்திருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

நாவலரது நன் மாணாக்கராகிய சதாசிவம்பிள்ளை நாவலரைப் போலவே பிரமச்சாரியாக இருந்து முப்பது வருட காலம் வித்தியாசாலையிற் கல்விப்பணி புரிந்துள்ளார். நாவலர் கேட்கின்ற கைம்மாறு ஒன்றே ஒன்றுதான்.

**தமிழ்க்குலம் உலகப் புகழ் எய்தத் தாழாது பணிபுரியுங்கள்**
**அது ஒன்றே எனக்குத் தமிழர் செய்யும் கைமாறு**

என்று கூறிய நாவலர் 1879ஆம் ஆண்டு இறைவனடிசேர்ந்தார்.

ஈழநாட்டு எழுத்தாளர் நாவலரைத் தேசிய இயக்கியத்தின் பிதாவாகக் கருதியுள்ளனர். மேலும் நாடும், அரசும்தேசியப் பெரியாராக அறிவித்துள்ளதோடன்றி, தபால்தலை வெளியிட்டும் பெருமைப்படுத்தியுள்ளது. அவர் வாழ்ந்த இல்லத்தைத் தேசியச் சொத்தாக்கி மதிப்பளித்துள்ளதும் குறிப்பிடத்தக்கது. 1969 ஜூன் 29இல் 'நாவலர் சபை நல்லூரில் நாவலர் சிலை' நிறுவியுள்ளது.

சென்ற நூற்றாண்டில் சைவச் சூழலில் பிறந்து கிறித்துவச் சூழலிற் பயின்ற ஆறுமுக நாவலர் கல்வியையும், சைவ சமயத்தையும் தம்மிரு கண்களாகக் கொண்டு தம் வாழ்நாளை அவற்றிற்காகவே அற்பணித்த சான்றோர். ஈழத்திலும் சிதம்பரத்திலும் வித்தியாசாலைகள் நிறுவித் தமிழ்க் கல்வியையும் சைவ சமயத்தையும் பரப்பிய சைவசமயக் காவலர், பல்துறை வித்தகர், நாவீறு கொண்ட நாவலர், இம்மை வாழ்வில், புகழ் ஒன்றைத் தவிர வேறொன்றையும் அனுபவித்திடாத தமிழ்ச் சான்றோர், 'இவர் காலத்தில் இவருக்கு ஈடிணையாக எந்த வித்துவானும் இருக்கவில்லை' என்பதை அக்காலப் பத்திரிக்கை (விசாரண) அளித்துள்ள தன்மையே அவரது சிந்தனை, சொல், செயல் ஆகியவற்றின் ஆளுமைத் தன்மையை நிலைநாட்டுகிறது. நாவலரின் தமிழ்கல்விப் பணியும், சைவ சமயப் பணியும் இவ்வுலகம் உள்ளவும் நின்று ஒளிவீசும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

நேர்காணல் *(20.7.2004)*

சிதம்பரத்திலுள்ள ஆறுமுக நாவலரின் அறக்கட்டளை நிர்வாகியும், ஓய்வுபெற்ற தலைமையாசிரியருமான திரு. சுவாமி நாதன் அவர்களைச் சந்தித்தபோது அவர் நாவலரைப் பற்றியும் அவரது கல்விப்பணி, சைவசமயப் பணி, இலக்கியப்பணி ஆகியவைகள் ஈழத்திலும், சிதம்பரத்திலும் பரப்பியுள்ள விதங்களைப் பற்றிய அரிய செய்திகளையும், ஏடுகளையும் தந்துத வினார்.

1864இல் சிதம்பரத்தில் ஆறுமுக நாவலரால் தோற்றுவிக்கப் பட்ட சைவப்பிரகாச வித்தியாசாலைக்குச் சென்று பார்த்தபோது நூற்றாண்டைக் கடந்து செயல்பட்டு வருவது சிறப்புடையதே ஆயினும் அவர் நினைத்துச் செயற்படுத்தியதன் நோக்கமே கல்விப் பணியைக் கருவியாகக் கொண்டு சைவசமயக் கல்வியைப் பரப்புவது என்பது. இங்கு அத்தகைய கல்வி கற்றுத் தரப்படாத தைக் குறித்துக் கேட்டபோது, சைவசமயக் கல்வி பயிற்றுவிப்ப தற்கு ஆசிரியர் இல்லாததும் மாணவர்கள் விரும்பிக் கற்க முன் வருவதில்லை என்பதனையும் தெரிவித்தனர்.

இலங்கை அரசைப் போலச் சமயக் கல்வியை நம் அரசு கட்டாயக் கல்வியாகப் பாடத்திட்டத்தில் வைத்தால்தான் நாவலரின் - சைவசமயக் கல்வி நிலைபெறச் சாத்தியப்படும் சமயக் கல்வியைப் பரப்ப ஒரே வழியாக இருக்குமா? என்ற கேள்விக்கு நிச்சயமாகக் கட்டாயக் கல்வி என்று பாடத்திட்டத்தில் வைத்தால் மட்டுமே சமயக் கல்வியைப் பரப்ப இயலும் என்பதைத் தெரிவித்தார். மதமாற்றம் நம் சமயத்தாரிடமே அதிகம் காணப்படுகிறதே இதற்குக் காரணம் என்னவாக இருக்கும் என்று கேட்டபோது,

நம்மவரின் கல்வியும் வறுமையும் காரணமாக அமைந்து விடுவதால் எளிதில் மனமாற்றத்தினால் மதம் மாறுகின்றனர் என்பதைத் தெரிவித்தார். யாழ்ப்பாணத்திலிருந்து இந்தியா வந்த ஆறுமுகநாவலர் சிதம்பரத்தில் 100 வருடங்களுக்கு முன்பே சேக்கிழாருக்காகச் சிலையொன்றை நிறுவியுள்ளதைத் தெரி வித்தார். மாலைகட்டித் தெருவிலுள்ள சேக்கிழார் மன்றத்தில் வாரந்தோறும் (சனிக் கிழமை) தேவாரம், திருவாசகம் உள்ளிட்ட சமயச் சொற்பொழிவுகள் நடைபெற்று வருவதைக் குறிப்பிட்டார்.

கனகசபை நகரில் இலவசமாகச் சைவக்கல்வி சொல்லித் தரப்படுவதாகவும், முதியோர்களுக்கு மட்டும் மாதம் ரூ. 20 பெற்றுக் கொண்டு சொல்லித் தருவதாகவும் இதில் பெண்களே அதிகம் பங்கு பெறுவதாகவும் தெரிவித்தார்.

ஆறுமுக நாவலர் சிதம்பரத்தில் நாற்பது ஏக்கர் நிலம் வாங்கி அதனைக் குத்தகைக்கு விட்டு அதில் வந்த வருமானத்தை வித்தியாசாலைகளுக்கும், சைவச் சொற்பொழிவுகளுக்கும் கோயிற் பூசைச் செலவுகளுக்கும் பயன்படுத்தினார். அப்போதெல்லாம் கொடுத்தார்கள். இப்போது, குத்தகைதாரர்கள் சரிவரப் பணமும் பொருளும் தராததால் நிர்வகித்தலில் இடையூறுகள் ஏற்பட்ட காரணத்தால் இருபது ஏக்கர் நிலத்தை விற்று ஆக்கப்பூர்வமான கட்டடங்களைக் கட்டி அதன் மூலம் பெறப்படுகின்ற வாடகைப் பணத்தைக் கொண்டு கல்விச் சாலைக்கும் அறக்கட்டளைச் சொற்பொழிவுகளுக்கும் பயன்படுத்தப்படும் நிலையைக் குறிப்பிட்டார்.

இப்போதெல்லாம் தர்மம் செய்தற்கு யாரும் முன்வருதில்லை எனினும் தர்மம் செய்பவருக்காவது உதவி செய்யலாம் அதனையும் செய்யத் தயங்குகின்றனர். மேலும் மக்களுக்குப் பக்தியில் மற்ற மதத்தினரைப் போல் ஈடுபாடில்லை. சேக்கிழார் மன்றச் சொற்பொழிவுக்குக் குறைந்த அளவு எண்ணிக்கையிலேயே சைவ சமயிகள் வருவதாக வருத்தத்தோடு தெரிவித்தார்.

### துணை நூல்கள்

1. கைலாசம் பிள்ளை, த., **ஆறுமுகநாவலர் சரித்திரம்**, சைவப் பிரகாச வித்தியாசாலை அறக்கட்டளை, 24, மாலை கட்டித்தெரு, சிதம்பரம் - 1, 6ஆம் பதிப்பு, 1999.

2. சுத்தானந்த பாரதியார்., **நாவலர் பெருமான்**, ஸ்ரீ அரவிந்தாஸ்ரம அச்சகம், புதுச்சேரி, முதற்பதிப்பு, மே 1948.

3. மாணிக்கம், சு., **புறநானூறு மூலமும் உரையும்**, வர்த்தமானன் பதிப்பகம், ஆர்.ஆர். காம்ப்ளக்ஸ், 141, உஸ்மான் சாலை, தி. நகர், சென்னை-17, முதற்பதிப்பு, நவம்பர் 1990.

4. மாயாண்டி பாரதி, கா., **நாவலர் பெருமான்**, பழனியப்பா பிரதர்ஸ், சேப்பாக்கம், சென்னை -5, முதற்பதிப்பு, 1962.

5. யோகேஸ்வரி., "நாவலர் வழியில் தமிழ் அறிஞர்", மாசறு 7, திருவல்லிக்கேணி, சென்னை-5.

6. இராசமாணிக்கம், ம., **பழமொழி நானூறு**, மூலமும் உரையும், கழக வெளியீடு, 5ஆம் பதிப்பு, செம்டம்பர் 1967.

7. வரதராசனார், மு., **திருக்குறள் தெளிவுரை**, கழக வெளியீடு, 37ஆவது பதிப்பு, ஆகஸ்டு, 1967.

8. வெற்றிச்செல்வன்., **ஆறுமுக நாவலர் வரலாறு**, மணிவாசகர் பதிப்பகம், 8/7, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை-8, முதற்பதிப்பு, ஆகஸ்டு, 2000.

9. நாவலர் சபை, **நாவலர் மாநாடு விழாமலர்**, மெய்கண்டான் அச்சகம் லிட், 161, செட்டியார் தெரு, கொழும்பு 11, ஆண்டு 1969.



# ஆறுமுக நாவலரின் தமிழ்ச்சுற்றம்

ஒவ்வொரு நூற்றாண்டிலும் பல தமிழறிஞர்களும் சான்றோர்களும் அவர்தம் பங்களிப்பினை நன்முறையில் அளித்துத் தமிழை வளர்த்துள்ளனர். அவ்வகையில் பத்தொன்ப தாம் நூற்றாண்டில் அண்மை நாடாகிய இலங்கையில் பிறப்பெடுத்தாலும் தமிழ்நாட்டில் வாழ்ந்து தமிழ் மொழியின் வளர்ச்சிக்காகவே பணியாற்றித் தம் வாழ்நாளைத் தமிழ் மொழிக்கும் சைவத்திற்கும் அர்ப்பணித்தவர்களுள் முன்னோடி யாகக் குறிப்பிடத்தகுந்தவர் யாழ்ப்பாணம் நல்லூர் ஆறுமுக நாவலர் ஆவார். இவருடைய தமிழ்ச்சுற்றம்-குடிப்பிறப்பு, உடன் பிறப்பு, அல்லாது அவருடன் வாழ்ந்த சமகாலத்தவர் என அவரை அடியொற்றி அவரை ஆசானாக ஏற்று அவர் வழிப்பிறப்பாக வாழ்ந்த தமிழ்ச்சுற்றம் என்று வகைப்படுத்தித் தமிழ்மொழியை அவர் வளப்படுத்திய தன்மையை இவ்வாய்வுக்கட்டுரையின் வாயிலாகக் காணலாம்.

## குடிப்பிறப்புத் தமிழ்ச்சுற்றம் - ஞானப்பிரகாச சுவாமிகள்

இலங்கை கி.பி. 16ஆம் நூற்றாண்டில் போர்ச்சுக்கீசியரின் ஆட்சிக்குட்பட்டிருந்த காலத்தில் யாழ்ப்பாணத்து நல்லூர் திருநெல்வேலியில் ஞானப்பிரகாச சுவாமிகள் வாழ்ந்து வந்தார். அவ்வரசு காலத்தில் அரசனுக்கு ஒவ்வொரு வீட்டிலிருந்தும் ஒரு பசுவை உணவின் பொருட்டு அனுப்ப வேண்டும் என்கிற விதி இருந்தது. இக்கொடுந்தொழிலுக்கு ஞானப்பிரகாசரின் மனம் ஒப்பவில்லை. எனவே, இவர்தம் முறைநாளுக்கு முதனாள் இரவு பரதேசம் போய்விடத் தீர்மானித்து யாழ்ப்பாணம் விட்டுப் புறப்பட்டுச் சிதம்பரம் அடைந்து, பின் கௌடதேசம் சென்று அங்கே வடமொழியினைப் பயின்று திருவண்ணாமலை ஆதீனத்தில் சமய தீக்கைப் பெற்றுக் காவி உடை அணியலானார். இவர் எழுபது மொழிகளைக் கற்ற மொழிப் பேரறிஞராவார். வடமொழியில் சிவஞானபோத விருத்தி, பிரமாண தீபிகை,

பிரசாத தீபிகை, அஞ்ஞான விவேசனம், சிவயோக சார சிவயோக ரத்னம், சிவாகமாதிமகான்மிய சங்கிரம் என்னும் நூல்களையும் தமிழில் சிவஞான சித்தியாருக்கு உரையினையும் செய்தார். இவர் யாழ்ப்பாணம் நல்லூரிலே கார்காத்த வேளாள மரபிலே பாண்டிய மழவர் குடியைச் சார்ந்தவராவார். இவர் நல்லொழுக்க சீலர். சைவசமயத்தின் மீது ஆழ்ந்த பற்றுதலும் சிவனடியை மறவாத செழுமையும் கொண்டவர். இவருடைய வாழ்நாட்களில் பெரும்பகுதியினைச் சிதம்பரத்தில் தங்கி இருந்து நடராசப் பெருமானை வணங்குதலையே பெரும்பேறாகக் கருதியவர். சிதம்பரத்திலுள்ள ஞானப்பிரகாசம் என்ற குளத்தை வெட்டி ஞானப்பிரகாச மடத்தையும் கட்டியவர் இவரே ஆவார். இத்தகைய சிறப்புக் கொண்ட வழிமரபில் தோன்றியவரே ஆறுமுக நாவலரின் தந்தையாகிய கந்தப்பப் பிள்ளை ஆவார்.

**ப. கந்தப்பப் பிள்ளை : கி.பி. 1766 – 1842**

கந்தப்பரின் தந்தையரான பரமானந்தர், மருத்துவத் துறையில் புகழ்பெற்றவராக விளங்கினார். கொழும்பில் இருந்த போது அரசனின் தீராத நோயைத் தீர்த்துப் பட்டங்களும் பரிசுகளும் பெற்றார். இவர்தமிழ்ப் புலமைமிக்கவராய் விளங்கியதோடு தமிழில் அநேக நாடக நூல்கள் எழுதியதும் குறிப்பிடத் தகுந்தவையாகும். இவரின் மகனான கந்தப்பப்பிள்ளை தமிழில் பல மருத்துவ நூல்களை உரைநடையாக இயற்றியவர். ஒல்லாந்தர் காலத்தில் அரசு அலுவலராய் இருந்தவர். வைத்தியத்தில் அதிக சாமர்த்தியமுடையவர். அரசு அலுவல், வைத்தியம் ஆகியவற்றில் ஈடுபட்ட காலம் தவிர்த்து மீதம் உள்ள நேரங்களில் பூமரங்கள் வைத்து உண்டாக்குவதில் காலங் கழிப்பவர். இவருக்குச் சிவகாமி என்னும் மனைவியாரிடம் ஐந்து ஆண் மக்களும் மூன்று பெண்மக்களும் பிறந்தார்கள். சிறு வயதிலே இறந்தபிள்ளைகளும் உண்டு. இவர் கூழங்கைத் தம்பிரானிடம் கல்வி பயின்றார். போர்த்துக்கீசிய மொழி, ஒல்லாந்தர் மொழி, ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளிலும் புலமை பெற்று விளங்கினார்.

தம் மக்கள் அனைவரும் புலமை பெற வேண்டும் என்னும் நோக்கத்துடன் ஆண் மக்களில் ஐவருள் நாவலருக்குத் தமிழ்க் கல்வியும் ஆங்கிலக் கல்வியும் ஒருசேரப் பெறுமாறு செய்தார். அரசாங்க அலுவலை மேற்கொண்ட போதிலும் நால்வரில் ஒருவர் இலக்கண இலக்கியங்களைக் கற்று முறையாகப் புலவர் பட்டம் பெற்றார். கந்தப்பப் பிள்ளையின் கடைசி மகவாகிய

ஆறுமுக நாவலர் தந்தையால் மிக்க அன்பு பாராட்டப்பட்டவர். நாவலர் கல்வி கற்று வரும் நாளில் தந்தையார் கந்தப்பப் பிள்ளை முதுமைப் பருவத்தை அடைந்திருந்தார். முதுமையிலும் தமிழ் நாடகங்கள் பாதுகாக்கப்பட வேண்டும் என்னும் சீரிய நோக்கத்துடன் இருபத்தியொரு நாடகங்களை வடித்துள்ளார். ஆனித்திருமஞ்சன விழாக் காலத்தில் ஒருநாள் ஏட்டினைக் கையிலே தாங்கி எழுத்தாணி கொண்டு ஒரு நாடகம் எழுதிக் கொண்டிருந்தார். சிந்தனை ஊற்றிலிருந்து வரும் கருத்துக்களை எழுத்தாணி வாயிலாகத் தீட்டிக் கொண்டிருந்தார். ஏட்டையும் எழுத்தாணியையும் பிடித்த வண்ணமாக எழுதும் நாடகத்தை முடிக்காமலேயே அப்படியே அமர்ந்த நிலையிலேயே உயிர் துறந்தார். தமிழுக்காகவே அவர் உயிர் பிரிந்தது. அப்போது நாவலருக்கு அகவை ஒன்பது ஆண்டே நிரம்பியிருந்தது. முடிக்காமலேயே குறையாய் இருந்த "இரத்தின வல்லி விலாசம்" என்னும் தந்தையார் எழுதிக் கொண்டிருந்த நாடகத்தை நாவலர் அப்போதே பாடிமுடித்தார். தமையன்மார் அனைவரும் நாவலரின் இச்செயலினைப் பெரிதும் பாராட்டினர். கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை நாவலரைப் போற்றிப் பாடிய பாடல் அவரது புகழினை மெய்ப்பிக்கின்றது.

**ஆடும் தில்லை அம்பலவன்**
**அடிகள் மறவா அன்புடையோன்**
**பீடு பெறவே செந்தமிழைப்**
**பேணி வளர்த்த பெரும்புலவோன்**
**நீடு சைவம் நிலவுலகில்**
**நிலவச்செய்த குருநாதன்**
**நாடு புகழும் ஆறுமுக**
**நாவலன் பேர்மறவோமே**

**சரவண முத்துப்புலவர் : கி.பி. 1802 – 1845**

நல்லூர் ம. சரவண முத்துப் புலவர் யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த புலவர்களிலே குறிப்பிடத்தகுந்தவர் ஆவார். இவரிடம் ஆறுமுக நாவலர் முதன்முதலில் தமிழ் இலக்கணங்களைக் கற்றுக் கொண்டார். சரவண முத்துப்புலவர் சங்கீதத்தில் மிகவும் வல்லவராக விளங்கினார். இவர் அக்காலத்தில் மிகவும் புகழ் பெற்று விளங்கிய சேதிராய முதலியாரிடத்தில் கல்வி பயின்றவர். சென்னைப் புலவர் களத்தூர் வேதகிரி முதலியாருடன் இலக்கண இலக்கியம் பற்றி வாதம் நிகழ்த்தி "உதய தாரகை" என்ற பத்திரிகையில் பல கட்டுரைகள் எழுதியவர். இதற்குத் தம் ஆசிரியராகிய

சரவண முத்துப் புலவருக்கு ஆறுமுக நாவலர் மிக்க உதவியாக விளங்கினார். வேதாந்த சுயஞ்சோதி, ஆத்தும போதப் பிரகாசிகை, நெல்லை வேலவர் உலா என்பன இவரால் இயற்றப்பட்டவை. இவர் மீது ஆறுமுக நாவலர் 1845இல் சமரகவி பாடியுள்ளார்.

**இராமநாதபுரம் பொன்னுசாமித் தேவர் : 1837 – 1870**

தமிழ்ப்புலவர்களைக் காணாமல் தன் வாழ்நாளைக் கழித்த தில்லை என்னும் குறிக்கோளில் வாழ்ந்த தகையாளர் இராமநாத புரம் பொன்னுசாமித் தேவர். மன்னர் சேதுபதியின் அரசவையிலே புகழ்பெற்றுத் தமிழை அரியணை ஏற்றிய பெருமை இவருக் குண்டு. தனது 17ஆவது வயதில் தனது தந்தையார் சிவஞானத் தேவரின் பொறுப்பான பதவியை தான் ஏற்கும் நிலையில் அரசியல் தொடர்பான செயல்களை இவர் திறம்படச் செயல் படுத்தியமையால் மிகவும் புகழ்பெற நேர்ந்தது. தம் இளவல் முத்து ராமலிங்க சேதுபதியின் விழைவுக்கிணங்க தம்முடைய இருபதாவது வயதில் சேதுபதியின் அரசவையிலே அமைச்சர் ஆனார். தமிழ் இலக்கண இலக்கியப் புலமை இவரிடம் குடி கொண்டிருந்தது. தமிழுக்காகவும் தமிழ் மொழி காக்கும் புலவர்களுக்காகவும் இவருடைய வாழ்நாளை அர்ப்பணித்தார். தம்மைப் போலவே தமிழின் மேல் பற்றுக்கொண்டு மதுரையில் நான்காம் தமிழ்ச்சங்கம் உருவாக்கிய பாண்டித்துரைத் தேவரைத் தமது மகனாகப் பெற்ற பெருந்தகையாளர்.

புலவர் பெருமக்களுக்கு இவர் செய்த தொண்டும் வாரி வழங்கிய பொருளும் எண்ணிலடங்காத் திறத்தினைக் கண்கொண்டு மன்னன் போசராசன் சபைக்கு இணையாகப் பொன்னுசாமி சபை என்னும் நிலையும் இருந்தது. தமிழ் வள்ளலாம் பொன்னுசாமித் தேவரின் உள்ளக்கிடக்கையும் தமிழ்த்திறத்தையும் உணர்த்துவது “தனிச் செய்யுட் சிந்தாமணி” என்னும் நூலாகும். இந்நூல் பொன்னுசாமித் தேவரால் பதிக்கப் பட்டது.

மதுரையிலிருந்து சென்னை செல்ல ஆயத்தமான தேவர் வழியில் தமிழ்ப் புலவர் வித்துவான் தியாகராசச் செட்டியாரை அழைத்துவரச் செய்து திருச்சிராப்பள்ளியில் சந்தித்துப் புகழார்ந்த தமிழ் வள்ளலாய் விளங்கினார். பின் சென்னை சென்று ஆறுமுக நாவலர் ஆய்விலும் பார்வையிலும் அச்சிடப் படுவதற்குரியவாறு, திருக்குறள் பரிமேலழகருரை, திருக்கோவை யாருரை, சேதுபுராணம் முதலிய இலக்கியங்களும் இலக்கணக்

கொத்து, இலக்கண விளக்கச் சூறாவளி, தருக்க சங்கிரகம் முதலிய இலக்கண தருக்க நூல்களையும் பதிப்பிக்க ஏற்பாடு செய்தார். இந்நூலின் பல பதிப்புகள் இன்று வரை தமிழுலகம் போற்றும் செய்தியை அறியமுடிகின்றது. இந்நூல்களனைத்தும் பெருமான் ஆறுமுக நாவலரால் பதிப்பிக்கப்பட்டு வெளிவந்தபோது அவற்றைப் பெறவிரும்பி தமிழகமெங்கிலும் மாணவர்களும் புலவர்களும் பாடல்கள் மூலம் தேவரை வேண்டி விண்ணப்பித் தனர். அதற்குத் தேவரவர்கள் அனைவருக்கும் அஞ்சல் செலவு உட்பட இலவசமாக அனுப்பி வைத்த செய்தி தேவர் தமிழின் பால் கொண்ட பற்றினை வெளிப்படுத்துகின்றது. நாவலர் அவர்கள் தேவர் அவர்கள் வந்து பதிப்புப் பணியைப் பார்க்காத நாட்களை "தமிழ் வருகை தராததால் பதிப்புப் பணி வளர வில்லை" என்றாராம். பழந்தமிழ் மரபு விளங்க வாழ்ந்த தேவர் 'நாவலர் புதுமுறையில் நூல்கள் அச்சிடும் திறமையை வியந்தார்.

ருதிராற்காரி வருடம் (1863) நாவலர் மதுரைக்குப் போகும் வழியிலே இராமநாதபுரத்திலே தங்கியபோது, முன்பிருந்த சில சூழல்களின் காரணமாகத் தேவரைக் காணச் செல்லவில்லை. இதையறிந்த தேவர் பசுக்கன்று தன் தாயை விட்டுப்பிரிந்தாலும் தாயானது தனது கன்று நிற்குமிடந்தேடி அதனைச் சென்றணைந்து அதற்கு மிக்க அன்போடு பாலைச் சொரிதல் போலத் தாங்களும் 'நாம் அறியாது தங்களுக்குச் செய்திருக்கும் குற்றங்களைப் பொறுத்து இது கண்டவுடன் எழுந்தருளி வரவேண்டும்' என்னும் கருத்துடைய கவிதையைப் பாடி வித்துவானிடத்திலே கொடுத்தனுப்ப நாவலர் அதன்பின், தேவர் எழும்போதெல்லாம் எழாமை, தேவரிடத்தே பரிசு பெறாமை, தேவர்முன் அங்கவத்திரம் எடாமை, பரிதணியோடு போதல், தம்முடன் வருபவர் அனைவரும் அரண்மனை சேறல் என்னும் கட்டுப்பாடுடன் தேவரின் சமத்தானத்தை அடைந்து அவரின் வேண்டுகோளுக்கிணங்க "சைவ சமயமே சமயம்" என்னும் தாயுமானவரின் பாடலை உள்ளீடாகக் கொண்டு சொற் பொழிவாற்றினார். இதில் சைவத்தின் உயர்வும், வைணவத்தின் குறைவையும் அப்பைய தீட்சிதர், அரதத்தாசாரியார் ஆகியோரின் நூல்களை ஆதாரமாகக் கொண்டு சொற்பொழிவாற்றியமையைக் கேட்ட தேவர் மிகவும் மகிழ்ந்து வேறு புலவர் ஒருவருக்கும் செய்யாத சிறப்புகளை யெல்லாம் செய்தார். இவ்வாறாகத் தமிழ்த் தொண்டு புரிந்த பொன்னுசாமித் தேவர் இப்பூவுலகில் முப்பத்து மூன்று ஆண்டுகளே வாழ்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

**வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் : 1839 – 1898**

வெள்ளையர் ஆட்சி வேரூன்றியிருந்த காலத்தில் வாழ்ந்த தண்டபாணி சுவாமிகள், "ஆங்கிலயர் அந்தாதி" பாடி வெள்ளையரை "அநீதி பல புரிந்து குடி நாய்க்கும் தீர்வைப் பணங் கொள்ளும் வஞ்சக் கயவர்" என்றும் அவர் குடிமாய்க்கும் தீரரே எமது குல தெய்வம் என்னும் செயல்பாட்டினைக் கொண்டவர். "மதுரத் தமிழை இகழ் தீயோர் மணிநா அறுத்துக் கனலில் இட" என்று பாடியவர் இவர். ஏறத்தாழ ஒரு நூறாயிரம் திருப்பாடல்கள் சுவாமிகளின் திருவுள்ளத்திலிருந்து உதித்தன என்பது ஓர் ஆய்வாளர் கருத்து. சமய சமரச நெறியில் நாட்டமுடைய இவர் வள்ளல் பெருமான் இராமலிங்கர், ஆறுமுக நாவலர், மாம்பழக் கவிராயர், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஆகியோருடன் உறவுபூண்டு தம்முடைய வரலாற்றை "குருபர தத்துவம்" என்று பாடிய நிலை தமிழரின் புண்ணியச் செயலாகும். தன் வரலாறு கூறும் முதல் நூல் இதுவேயாகும்.

முழுமையான வாழ்க்கை வரலாற்று நூலாக இந்நூல் அமைகின்றது. இந்நூல் 29 சருக்கங்களில் 1240 பாடல்கள் கொண்டது. உடன் வாழ்ந்த புலவர்களுடன் கொண்டிருந்த தொடர்பினை இந்நூலில் குறிப்பிடுகின்றார். மாம்பழக் கவிச்சிங்க நாவலருடன் உறவாடிய செய்தியைப் பழனிச் சருக்கத்திலும், ஆறுமுக நாவலருடன் உள்ள தொடர்பினைச் சென்னைச் சருக்கத் திலும், வடலூராருடன் பழகியதைப் புதுவைச் சருக்கத்திலும் பாடியுள்ளார். பலவகைச் சந்தங்களில் இவர்தம் பாடல்கள் அமைந்துள்ளன. இவரே இவரது பாடல்களை அனலிலும் புனலிலும் அழித்துள்ளார். இவர் பாடிய திருத்தலங்கள் 222. எவ்வகை இலக்கியத்தையும் பாடும்திறன் கொண்டவராக இவர் வாழ்ந்துள்ளார்.

**தமிழ் மொழிக்கு உயர்மொழி தரணியில் உளதெனில்**
**வெகுளி யற்றிருப் போன் வெறும் புலவோனே"**

என்று பாடிய தண்டபாணி சுவாமிகள், திருக்குறள் வடிவிலே மனு நெறித் திருநூல், புலவரிலக்கணம், கணபதி ஆயிரம், சடகோபர் சதகத்தந்தாதி, திருமகளந்தாதி, கந்தப் பெருமான் வெண்பா அந்தாதி, தில்லைபாதி நெல்லை பாதி ஆகிய நூல்களையும் பாடியுள்ளார். சமயப் பொது நோக்குக் கொண்டவர். அருள் வலிமை கைவரப்பெற்ற புலவர்கள் பொருளை விரும்பிப் புலமையை விற்பது இழிவு என்னும்

எண்ணம் கொண்ட தண்டபாணி சுவாமிகள், ஆழமான புலமை யுடையவன் முன் தெய்வமும் ஆவலுடன் ஏவல் கேட்குமாம் என்பாராம். இவர் தம் மனைவி சுந்தரம் "பெண் மாட்சி" என்னும் திருநூல் ஒன்றைக் கலிவெண்பாவில் இயற்றி மகிழ்ச்சியடைந்த போது, அந்நூலுக்கு 'வாழ்த்துப்பா' தண்டபாணி சுவாமிகள் பாடியருளினார். ஆராமை மிகுதியினாலே சிவபெருமானை நோக்கி அருளிச் செய்த பதிகத்தில் ஆறுமுக நாவலரை இவர் புகழ்ந்துள்ள தன்மை குறிப்பிடத்தக்கது.

**"செய் தமிழ் மூன்றுந் திறனழிந்து போகாமல்**
**வைய மிசை விளக்கும் வாய்மையுறு நாவலனைத்**
**துய்ய மனத் தொண்டர் துணுக்க முறவேனழித்தாய்**
**மையணிந்த கண்ணியொடு மால் விடை யூருஞ்சிவமே"**

**"ஆறுமுக நாவலனை யைந்தாங் குரவனருட்**
**பேறு கண்டு துள்ளா முன் பெற்றமுடையா னழைத்த**
**றேறும் விதத்தாற் றிருப்புகழோன் செப்புமிவை**
**கூறுமவர் பலருங்கூற்றன் வழக்கெய்தோரே"**

கந்தனைத் தன் உள்ளத் தெய்வமாகப் போற்றிக் கோவணம் அணிந்து வாழ்ந்த தண்டபாணி சுவாமிகள் தன் இறுதிக் காலத்தில் விழுப்புரத்தை அடுத்துள்ள திருவாமாத்தூரிலே தங்கி இறைப் பணியில் ஈடுபட்டு 1898இல் இறையடி சேர்ந்தார்.

**மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை : 1815 – 1876**

கருவிலே தமிழுடையவராய் நினைத்தபோது கவிமழையாய் வாழ்ந்த தமிழ்ப் பெருந்தகை திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள். தமிழில் எண்ணியபோதெல்லாம் செய்யுள் களை வடித்துக் கேட்போர் செவியும் சிந்தையும் சேர்ந்தினிக்கச் செய்த பெருமை இவருக்குண்டு. தமிழ் இலக்கிய வரலாற்றில் தனக்கெனத் தனி இடத்தைக் கொண்ட தெய்வப்புலமைமிக்கப் பேரறிஞராக மீனாட்சி சுந்தரம்பிள்ளை திகழ்ந்தார். தமிழர்தம் பார்வையில் பத்தொன்பதாம் நூற்றாண்டை "மீனாட்சி சுந்தரம் பிள்ளை காலம்" என்றே கூறலாம். பழம்பதியாகிய பாண்டிய நாட்டில் திருக்கோயில் முத்திரைக் கணக்காயர் மரபில் தோன்றிய சிதம்பரம்பிள்ளை தம் வாழ்க்கைத் துணைவி அன்னத்தாச்சி யுடன் திரிசிரபுரம் (திருச்சி) அருகாமையில் உள்ள "எண்ணெய் கிராமம்'' என்னும் சிற்றூரில் பாடசாலை அமைத்துக் கல்வியறிவை ஊட்டி வந்தார். இவர்தயக்கு கி.பி. 1815இல் ஆண்

மகவாகத் தோன்றியவரே மீனாட்சி சுந்தரம்பிள்ளை. இளமை யிலேயே, பாடும் திறம், கவிதை வடிக்கும் திறம், நினைவாற்றல் கொண்ட இவர் சிவக்கோலம் கொண்டு விளங்கினார்.

புராணங்கள் இயற்றுவதிலும், யமக அந்தாதிகள், திரிபந்தாதிகள் வெண்பா அந்தாதிகள் மாலைகள், கோவைகள், கலம்பகங்கள், பிள்ளைத் தமிழ்கள், குறவஞ்சிகள், இசைப் பாடல்கள் பாடுவதிலும் வல்லுனராய்த் திகழ்ந்தார். இவரை, இவருடைய மாணாக்கர் "எத்தகைய பெருநூலும்எளிது உணர்த்திப் பயனுறுத்தும் இணையிலா தோன்" என்று புகழ்கின்றார். அம்மாணாக்கர் தமிழ்த் தாத்தா உ.வே.சா. அவர்கள் தாம். திட்டக்குடியில் எழுந்தருளியுள்ள பெருமானைப் பற்றி "முதல் பதிகம்" பாடினார். தமது இளமையிலேயே திருவாவடுதுறை ஆதினத்துடன் தொடர்பு கொண்டு ஆதினப் புலவராக விளங்கினார். ஆதீனம் இவருக்கு "மகா வித்துவான்" என்னும் பட்டமளித்துச் சிறப்பித்தது. பல திருத்தலங்களுக்குத் தமது மாணவர்களுடன் பல்லக்கில் சென்று பலவகையான பாடல்களை வழங்கி மகிழ்ந்தார். இவர் தம் காலத்தில் மும் மொழிப் புலவராக விளங்கிய ஆறுமுக நாவலரை வியந்து, பிள்ளையவர்கள்,

"அஃகத்தியந் தொல் காப்பிய முன்னாய பல
விலக்கணமுஞ்
சகத்தியல் பல்லிலக்கியமுஞ் சாற்று பரமத நூலும்
மகத்துவ மெய்ப் பொருணூலு மதியமையப்
பயின்றுணர்ந்து
சகத்தியலு மனுபூதித் தோன்றலாய் அமர் பெரியோன்"

என்று பாராட்டியுள்ளார். மகாவித்துவான் திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்த காலத்தில் நாவலரவர்களிடம் நெருங்கிய நட்புரிமை பாராட்டி வந்துள்ளார். அந்த நட்புரிமையால் நாவலரவர்களிடம் பெருமதிப்பு வைத்திருந்தார். நாவலரின் பதிப்பு முறையை நன்றாக அறிந்த பிள்ளையவர்கள், அவர் பதிப்பிக்கும் நூல்களுக்குச் சிறப்புப் பாயிரங்கள் தந்துள்ளார். சான்றாகத் திருக்குறள் பரிமேலழகருரைப் பதிப்பின் சிறப்புப் பாயிரத்தில் பிள்ளையவர்கள் கீழ்க்காணுமாறு புகழ்ந்துரைக் கின்றார்.

"நீடு புகழ்த் திருக்கே தீச்சரந்
திருக்கோணா சல மிந்நிலா நின்ற

நாடு புகழ்த் தலம்பொலி யாழ்ப்பாணத்து
நல்லூர் வாழ்நகராக் கொண்டோன்
றேடு புகழுரு வமைந்த கந்தவே
டவத்துதித்த செல்வன் யாரும்
பாடு புகழாறு முக நாவல னவ்வா
றச்சிற் பதிப்பித் தானே"

இவ்வாறு பல்வேறான புகழினைத் தாங்கித் தமிழன்னைக்குச் சிறப்புச் செய்த திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளைவர்களுக்கு அவரது மாணவர் அவருடைய பெயரிட்டு இந்தியா என்று எழுதி அனுப்பிய அஞ்சல், இலண்டனிலிருந்து குறிப்பிட்ட காலத்தில் இவர் தம் கையில் வந்து சேர்ந்தமை உலகறிந்த இவரின் புகழை எடுத்துரைப்பதாகும்.

**திருவாவடுதுறை ஆதினத் தலைவர் ஸ்ரீ அம்பலவாண தேசிகர் : *1844 – 1869***

நாவலர் சென்னைப்பட்டணத்திலிருந்து தெற்கு நோக்கிச் செல்லும் காலத்தில் கும்பகோணத்தில் தங்க நேர்ந்தது. இதற்கு முன்னரே இவரின் கல்வித் திறமை, சொற்பொழிவாற்றல், செயல்பாடு முதலியவற்றைக் கேள்விப்பட்டிருந்த திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் ஸ்ரீ அம்பலவாண தேசிகர், 'மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களை யும் சில ஓதுவார்களையும் அனுப்பி, திருமடத்திற்கு இவரை அழைத்து, உபசரித்து, வித்துவான்களெதிரில் இவரிடத்திலே இலக்கண இலக்கியக்கியங்களிலும் சைவ சித்தாந்த சாத்திரங் களிலும் பல ஆட்சேபங்களைச் செய்ய, அதற்கெல்லாம் நாவலர் கூறிய விடைகள், பல நூல்களின் சாரமாயும் நினைவினை யெல்லாம் நிறைவு செய்யும் வகையிலும் இருந்தமையால் ஆதீனத் தலைவர் மிக மகிழ்வு கொண்டார்.

நாவலர் திருமடத்தில் தங்கி இருந்த நாட்களில் இலக்கணக் கொத்து, தொல்காப்பியச் சூத்திரவிருத்தி முதலிய இலக்கண நூல்களை அவரைக் கொண்டு பரிசோதித்து அச்சிட்டார். நாவலரின் பதிப்புத் திறமைக்கு இதனைச் சான்றாகக் கருதலாம். நாவலர் பதிப்பித்த நூல்கள் அவரின் வித்தியானுபாலன யந்திர சாலை, சென்னை வாணிநிகேதன அச்சுக் கூடம், முத்தமிழ் விளக்க அச்சுக்கூடம் போன்ற அச்சகங்களில் அச்சிட்டு வெளியிடப் பட்டன. திருமடத்திலே தங்கியிருந்த நேரத்தில் ஆதீனக் குரு முதல்வர் நாவலரைச் சைவப் பிரசங்கமொன்று செய்யக்கேட்க,

இவரது பேச்சு, சுருங்கச் சொல்லல் என்னும் வகையிலும், அழகு மிளிரும் செந்தமிழ் நடையைப் பின்பற்றியும், பிறர் யாரும் செய்ய முடியாத தகைமை வாய்ந்ததாயும் கடவுட்பக்தி அல்லாதாரையும் மனமுருக்கி ஆனந்தக் கண்ணீர் சொரிய வைப்பதாயும் தெவிட்டாச் சுவை கொண்டும் இருந்தது. நாவலரின் அருட் புலமையை உரையாடல், சொற்பொழிவு வாயிலாகக் கண்டறிந்து அவர் தம்முடன் உணவு உண்ணும்நேரத்திலும் நாவலர் திறத்தை வாய்மணக்கப் புகழ்ந்து ஆதீனத் தலைவர் மகிழ்ந்தார்.

நாவலருடைய வாக்கு வன்மையும் சொற்பொழிவாற்றும் திறனும் ஆதீனத் தலைவரை மிகவும் கவர்ந்தன. பாடல்களுக்குப் பொருள் கூறும் போதும் பேசும் போதும் சொற்களெல்லாம் நீரோட்டம் போல நாவலருக்கு வந்து கொண்டேயிருக்கும். சொற் பஞ்சம் என்பது இவருக்கு ஒரு காலத்திலுமில்லை. ஒரு சொல்லை யாவது, செய்தியையாவது திருப்பிச் சொல்லும் வழக்கம் நாவலருக்கு இல்லாமை திருவாவடுதுறை ஆதீனத் தலைவரையும் தமிழறிஞர்களையும் வெகுவாக ஈர்த்தது. எனவே, “நாவலர்” என்ற பட்டத்திற்கு இவரே தகுதியுடையவர் எனக் கருதித் திருவாவடு துறை ஆதீனத்தலைவர் ஸ்ரீ அம்பலவாண தேசிகர் 1849ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் நல்லூர் ஆறுமுகம் அவர்களுக்கு ‘நாவலர்’ என்ற பட்டத்தினை அளித்துக் கௌரவித்தார். இதற்குக் காரண கர்த்தாவாக விளங்கியவர் சின்னப்பட்டத்தில் வீற்றிருந்த மேலகரம் சுப்பிரமணிய தேசிகர். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை இவ்விருவரையும் பாடிப் பரவியவர்.

### அருளாளர் இராமலிங்கம் : 1823 – 1874

இறை உணர்வை மனத்தில் ஏற்பட்ட நெகிழ்வின் காரண மாகப் பக்தியுடன் பாடல்களைப் பாடி நிரூபித்த அருளாளர் வள்ளல் பெருமான் இராமலிங்கம். ஆன்மிக நெறியில் மணிவாசகப் பெருமானை அடியொற்றி அருட்சோதியின் புதிய ஒளித்தத்துவத்தைச் சமரச சன்மார்க்க நெறியில் உலகிற்கு அறிவித்த பெருமை இவருக்குண்டு. தன் சிறுவயதிலிருந்தே ஆடல் வல்லானின் அருட்திறத்தினால் ஆட்கொள்ளப்பட்டு ஓதாது உணர்ந்த அருள் வள்ளலாக இராமலிங்கர் வாழ்ந்தார். சொற் பொழிவாற்றும் திறனும் சொல்லாடல் புரியும் கவி உள்ளமும் இவருக்கு இயற்கையிலேயே அமைந்திருந்தன. சென்னை முதல் சிதம்பரம் வரையில் இராமலிங்கரின் அருட்தன்மை மிகவும் உயர்வாகப் பேசப்பட்டது. வள்ளல் பெருமான், திருப்பாடல்

களையும் திருவருள் உரைகளையும் அருளியதோடு, சில தமிழ் நூல்களையும் பதிப்பித்தார். 'ஒழிவிலொடுக்கம்', 'தொண்டை மண்டல சதகம்', 'சின் மய தீபிகை' ஆகிய திருநூல்கள் பெருமான் பதிப்பித்த சில தமிழ் நூல்களாகும்.

இராமலிங்கர் எழுதிய திருப்பாடல்கள் திருவருட்பா என அச்சிற்பதிப்பித்து அவ்வமயம் சென்னையில் விற்கப்படலாயின. அதனைத் திருக்கோயில்களில் ஓதிக் கொண்டு வரலாயினர். சென்னைப் பட்டணத்திலே சில திருக்கோயில்களிலே தேவாரம் முதலிய அருட்பாடல்களை நிறுத்தி விட்டு இராமலிங்கம் பிள்ளையின் பாடல்களையே ஓதுவித்தார்கள். இதுகாறும் இராமலிங்கம் பிள்ளைக்கும் நாவலருக்கும் முன் வேறுபாடும் யாதொரு விரோதமும் இல்லை. இவர் காலத்தில் வாழ்ந்த சிறந்த வித்துவான்களாகிய மகாலிங்கையர், விசாகப் பெருமாளையர், மீனாட்சி சுந்தரம்பிள்ளை முதலானவர்கள் இருவரோடும் மிகுந்த நட்புடையவர்கள். இருந்தும் சைவ ஆகமங்களிலும், தேவார, திருவாசகங்களிலும் ஆழ்ந்த நாவலருக்குத் திருக்கோயில்களில் இராமலிங்கனாரது பாடல் ஓதுவது ஏற்புடைத்தாக இல்லாத காரணத்தினால் அவருடைய பாடல்களுக்கு மறுப்பாகப் 'போலியருட்பா மறுப்பு' என்னும் நூலை மாவண்டூர்த் தியாகேச முதலியாரைக் கொண்டு வெளிப்படுத்தினார். இதன்கண் சமயாசாரியர்கள் பெருமையும் அவர்களது அருள் வரலாற்றுத் தன்மைகளையும் வெளிப்படுத்தி அத்தகைய பாடல்களுடன் இராமலிங்கனார் பாடல்கள் ஒப்புமையாகா என்னும் கருத்தினை வெளியிட்டார். இராமலிங்கரும் நாவலரும் ஒரே காலத்தில் சிதம்பரம் வரநேரிட்ட போது இவரோடு வெறுப்புக் கொண்ட தீட்சிதர் இராமலிங்கம் பிள்ளையைக் கொண்டு நாவலரை இகழ்விக்கக் கருதி, சுக்கில வருடம் ஆனி மாதம் (1869) உத்தரத்தன்று 'பேரம்பலப் பிரசங்கம்' என்னும் பெயரிட்டு இராமலிங்கம் பிள்ளை உட்பட வாயில் வந்தபடி வைது சென்று விட்டனர். அதனால், கடலூர் மஞ்சகுப்பம் நீதி மன்றத்திலே இவர்கள் மீது கிரிமினல் வழக்குகளை நாவலர் தொடர்ந்தார். இராமலிங்கம்பிள்ளை தம்மேல் தொடுக்கப்பட்ட வழக்கில் தான் எவ்வாற்றானும் அவமதித்துப் பேசவில்லையென்று கூறிய காரணத்தால், பலரெதிரே தாம் பேசியதைப் பேசவில்லையென்று சொல்லி மறுத்ததே போதுமென்றெண்ணி அவர்மேல் கொண்டு வந்த வழக்கை விடுவித்தாராம். நீதிமன்றத்தில் இராமலிங்கர் அழித்துச் சொன்னது அடுத்த மார்கழித் திருவாதிரையென்பர்.

இதுவல்லாது இருவரும் ஒருவரையொருவர் மதித்துக் கொண்டதே மேம்பாடுடையதாக விளங்குகின்றது.

*சி.வை. தாமோதரம்பிள்ளை : 1832 – 1901*

தேசப்பற்றும், சமயப்பற்றும், மொழிப்பற்றும் அற்ற மனிதர் இருந்தென்ன? இறந்தென்ன? என்று வினாவெழுப்பிய பெருந்தகை சி.வை. தாமோதரம் பிள்ளை. இலங்கை யாழ்ப் பாணத்தைச் சேர்ந்த சிறுபிட்டி என்னும் ஊரில் வைரவநாதப் பிள்ளை, பெருந்தேவி ஆகியோருக்கு 1832இல் பிறப்பெடுத்தார். பன்னிரண்டு வயதிற்குள்ளாகவே தமிழில் சில இலக்கண இலக்கியங்களையும் கவிராயர் முத்துக்குமாரரிடம் உயரிய இலக்கிய இலக்கணங்களையும் கற்றார். 1853ஆம் ஆண்டில் முதன் முதலாக 'நீதிநெறி விளக்கம்' என்னும் நூலினைப் பதிப்பித்த பெருமை இவருக்குண்டு. தமிழையும் சைவத்தையும் தமது இரு கண்களாக மதித்த யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் தாமோதரம் பிள்ளைக்குப் பதிப்புத்துறையில் வழிகாட்டியாக விளங்கினார்.

இவர் தமிழின் பெருமையையும் அதன் அருமையையும் தமிழ் மக்கள் உணரவேண்டும் என்று தமிழுக்குத் தொண்டாற்று வதையே தம் வாழ்வின் நோக்கமாகவும் கொண்டவர். 1868ஆம் ஆண்டு இவருடைய முப்பத்தாறாம் வயதில் தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்குச் சேனாவரையர் உரையைப் பதிப்பித்த போது, ஆறுமுக நாவலரின் அறிவுரையை ஏற்று அதன் வழி செயல்பட்டார். பழமை வாய்ந்த இலக்கண நூல்களையெல்லாம் செம்மையான முறையில் பதிப்பித்துப் புலவர் பெருமக்களின் புகழுரைக்கு இலக்கானார். யாழ்ப்பாணத்துப் பாதிரியார் சென்னைக்குக் குடியேறி, தினவர்த்தமானி என்னும் தமிழ்ப் பத்திரிக்கையை நடத்தினார். பீற்றர் பார்சிவெல் என்னும் பெயரில் ஆறுமுக நாவலரைக் கொண்டு தமிழில் விவிலியத்தை வெளியிட்ட பெருமையாளர் தாம் நடத்திய தமிழ்ப் பத்திரிகைக்கு அறிஞர் தாமோதரம்பிள்ளையவர்களையே ஆசிரியர் பொறுப்பை ஏற்க அழைப்பு விடுத்தார். செய்யுள் திறத்திலும், உரைநடை வளத்திலும், பதிப்புத் துறையிலும் தலை சிறந்து விளங்கிய இவர்தம் செய்யுளில் அமைந்த செறிவை மாயூரம் வேதநாயகம்பிள்ளை பின்வருமாறு பாராட்டுகின்றார்:

**"நீடிய சீர்பெறு தாமோதர மன்ன நீள் புவியில்**
**வாடிய கூழ்கள் மறைமுகங் கண்டென மாண்புற நீ**

பாடிய செய்யுளைப் பார்த்தின்ப வாரிபடித் தனன்யான்
கோடிப் புலவர்கள் கூடினும் நின்புகழ் கூறலரிதே”

அறிஞர்களின் தொடர்பினாலும் அயராது உழைத்தமையானும் தமிழுக்குத் தக்க நிலையில் தொண்டாற்றியமையானும் தமிழர்தம் இதயத்தில் நீங்கா இடம் கொண்ட தாமோதரம்பிள்ளையவர்கள் 1901ஆம் ஆண்டு மறைந்தாலும் அப்பெருந்தகையின் செயல்கள் இன்றும் அவரது நினைவைப் போற்றுகின்றன.

**பீற்றர் பெர்சிவல் துரைமகனார்**

பீற்றர் பெர்சிவல் அமெரிக்கன் மெதடிஸ்டு மிஷனைச் சேர்ந்தவர். 1814இல் பணி தொடங்கிய இம் மிஷன் இலங்கை முழுவதும் பள்ளிகளை அமைத்தது. இச்சபையின் ஊழியராகப் பெர்சிவல் 1826இல் யாழ்ப்பாணம் வந்தார். முன்னமேயே கல்கத்தாவில் பணியாற்றியமையால் இவருக்கு வங்காள மொழி அறிவும் வடமொழித் தேர்ச்சியும் இருந்தன. யாழ்ப்பாணத்தின் முக்கிய உயர்கல்வி நிலையத்தின் தலைவராகவும் இருந்தார். யாழ்ப்பாணத்தில் பெர்சிவல் நடத்தி வந்த பள்ளியில் ஆங்கிலம் கற்க அனைவரும் விரும்பினர். நாவலர் திறமையை இளமையிலேயே உணர்ந்த அவரது தமையனார் நாவலரைப் பெர்சிவல் நடத்தும் ஆங்கிலப்பள்ளயில் சேர்த்தனர். நாவலர் கருத்தூன்றிப் படித்து மேல் வகுப்பை அடைந்தார். இவரது, உயர்ந்த தமிழ்ப் புலமையை அறிந்த பெர்சிவல் நாவலரைக் கீழ் வகுப்புகளுக்கு ஆங்கிலமும் மேல்வகுப்புகளுக்குத் தமிழும் பயிற்றுவிக்கும் ஆசிரியராக நியமித்தார். அப்போது நாவலர் பதின்மூன்றே வயது நிரம்பியிருந்தார். இருமொழியிலும் புலமை பெற்று விளங்கிய நாவலர் பெர்சிவல் துரைக்குத் தமிழாசிரியரானார்.

சொல்லும் பொருளும் சுவைபட நாவலரிடம் விளங்கியமையால் பெர்சிவல் தாம் மேற்கொண்ட விவிலியத் தமிழ்மொழிபெயர்ப்புக் குழுவின் தலைவராக நாவலரை நியமித்தார். அவருடன் நாவலர் சென்னை வந்தார். சென்னையிலுள்ளோர் சபையின் முன்னிலையில் தமிழ்ப்புலமை மிக்கு விளங்கிய வித்துவான் மகாலிங்க ஐயர் நாவலரின் தமிழ் மொழிபெயர்ப்பே சிறந்தது எனத் தீர்ப்பளித்தார். அனைவரும் யாழ்ப்பாணத்தில் இவ்வளவு சிறிந்த தமிழ் உளதோ? என வியந்து பாராட்டினர். நாவலரின் மொழித் தொண்டிற்கும் சமயத் தொண்டிற்கும் கல்வித் தொண்டிற்கும் பீற்றர் பெர்சிவல் துரை மகனாரின் இளமைக்கால நட்பே வழிகாட்டித் துணை நின்றது

என்றால் மிகையாகாது. சென்னை வந்த பெர்சிவல் சென்னை மாகாணக் கல்லூரியில் பணி மேற்கொண்டு கீழை நாட்டுக் கலைத்துறைக்குப் பேராசிரியராகப் பணியாற்றியும் 'தினவர்த்த மானி" என்னும் தமிழ்ப் பத்திரிகையையும் நடத்தினார்.

*மகான் சி. செந்திநாதையர்*

நாவலர் தாம் மேற்கொண்ட "பிரசங்கமரபு" அவரின் காலத்திலேயே செந்திநாதையரால் மேற்கொள்ளப்பட்டது. வண்ணார் பண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலையில் ஆசிரியராகக் கடமையாற்றிய காலங்களில் நாவலரின் சொற் பொழிவை இவர் கேட்கத் தவறமாட்டார். அவரது சொற் பொழிவைக் கேட்டுக் குறிப்பெழுதுவதை வழக்கமாகக் கொண்டார் செந்திநாதையர். திரு. தம்பையா முதலியாருடைய வேண்டுகோளுக்கிணங்க கொழும்பு சென்று அவருடைய தரும சத்திரத்திலே நெடுநாட்கள் தங்கி இருந்து சைவசித்தாந்த சொற்பொழிவுகள் செய்த பெருமை இவருக்குண்டு. கிறித்துவ மதத்தைக் கண்டித்துக் "கிறித்துவ மதகானைகுடாரி" என்னும் பட்டம் பெற்றார். ஈழத்தில் மட்டுமல்லாது இந்தியாவில் கோயம்புத்தூர் சைவசித்தாந்த சபை, சிதம்பரம், உடுமலைப் பேட்டை முதலிய இடங்களில் இவரின் சொற்பொழிவு மிகவும் புகழப்பட்டது.

> "டாக்டர் உவே. சாமிநாதையர் தமிழுக்குச் செய்த பணி போன்ற பெரும் பணியைச் செந்திநாதையர் சைவ சமயத்திற்குச் செய்திருக்கின்றார். நாவலர் செய்யும் புராணப் பிரசங்கம் சைவப்பிரசங்கம் என்னும் இவைகளைக் கேட்டு அதன்மேல் குறிப்பு எழுதி வைத்து விட்டதன்றி உறங்காத விரதம் பூண்டவர் செந்திநாதையர்"

என்பர் கணபதிப்பிள்ளை.

தென்னிந்தியாவில் நல்லாசாமிப் பிள்ளை அவர்கள் சைவசித்தாந்தச் சாத்திரங்களை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்ததற்கும் ஆண்டாள் அம்மையார் சைவ சித்தாந்த மழை பொழிதற்கும் வேதாசலம் அவர்களின் குருவாகிய சோமசுந்தர நாயக்கர் அவர்களின் மாயாவாதக் கண்டனத்திற்கும் இவர் ஊன்று கோலாயிருந்தார். திரு. நா. கதிரைவேற்பிள்ளையின் செயல் களுக்கும் சுவாமிநாத பண்டிதர் அவர்களின் வீராவேசத்திற்கும் சிவஞானபோதத் திராவிட மாபாடிய

வெளியீட்டிற்கும் செந்திநாதையரே மூலபுருடர் என்பார் பேராசிரியர் கலாநிதி சு. வித்தியானந்தன் அவர்கள். புறச்சமயக் காழ்ப்புணர்ச்சி ஏதுமின்றி, விவிலிய நூல்களிலிருந்தே ஆதாரங்களை வைத்துக் கிறித்தவர்தம் கண்டனங்களுக்குப் பதிலுரைத்தார். இவர் ஆழ்ந்த சமய அறிவும், சமயப் பற்றும் மனத்துணிவும் கொண்டவராக விளங்கினார்.

செந்திநாதையரை வாதுக்கழைத்த கோப்பாய் மாணவர்களுக்கு வண்ணை நடு என்ற பெயரில் எதிர்ப்பு எழுதிக் கிறித்தவரோடு வாதிட்டார் நாவலர். நாவலருக்குப் பக்க பலமாக நின்று பணி செய்த செந்திநாதையருக்கு அவரிடம் மிகுந்த ஈடுபாடு இருந்தது. இதனைக் க. கணேசலிங்கம் பின்வருமாறு கூறுகின்றார்.

> கால் நூற்றாண்டு இடைவெளியின் பின் செந்திநாதையர் பிறந்தாலும் ஒரே கல்லூரியில் ஒரே சூழலில் இவரும் நாவலரும் கற்றதால் ஒருவர் பெற்ற அனுபவங்களை மற்றவரும் ஓரளவு பெற்றிருக் கலாம். இருவருக்கும் பிற்காலத்தில் பொதுவான சில இலட்சியங்களிலும், சைவசமய தத்துவங்கள், புராணங்கள் ஆகியவற்றின் மேல் உள்ள ஈடுபாடும் ஒரே தன்மையாய் இருந்தன.

எனவே, நாவலருக்கு, சைவ சமய வளர்ச்சியிலும், சொற்பொழிவு மரபிலும், கிறித்துவமத கண்டனங்களிலும் முழு மூச்சாகச் செயல்பட்ட பெருமை செந்திநாதையருக்கு உண்டு என்பதனை அறிய முடிகின்றது. மேலும் இவர் யாழ்ப்பாணம் சைவப் பிரகாச வித்தியாசாலையில் எட்டு வருடம் ஆசிரியராய்ப் பணியாற்றிய தகையாளர்.

### பேராசான் நா. கதிரைவேற்பிள்ளை : 1871 – 1907

யாழ்ப்பாணம் மேலைப் புலோலியில் 1871ஆம் ஆண்டு பிறந்த நாகப்ப கதிரைவேற்பிள்ளை வறுமைச் சூழலால் ஆறாம் வகுப்புக்கு மேல் கல்வியைத் தொடர முடியாத நிலையில் படிக்க முடியவில்லையே என்னும் ஏக்கத்துடன் எப்படியாவது கற்றுக் கொள்ள வேண்டும் என்னும் திட முயற்சியுடன் இலக்கண இலக்கணங்களைக் கற்றுத் தெளிந்தார். சைவ சித்தாந்தச் சாத்திரங்களையும் வடமொழியையும் அறிந்து புலமை பெற்றார். தமது இருபத்தாறாம் வயதில் 1879இல் சென்னையில் உயர்நிலைப் பள்ளி ஒன்றில் தமிழாசிரியராகப் பணி ஏற்றார். இவரிடம்

திரு.வி.க. மாணாக்கராகும் பேற்றினைப் பெற்றார். இவர் பாடம் சொல்லிக் கொடுக்கும் முறை அனைத்து மாணாக்கர்களையும் பெரிதும் கவர்ந்தது. இவரின் அறிவூட்டமும் ஆசார நாட்டமும் திரு.வி.க.வை இவர் பால் ஈர்த்தன. தமிழ், வடமொழி ஆகிய இரு மொழிகளிலும் தேர்ச்சிபெற்ற இவரின் சொற்பொழிவுகள் அக்காலத்திலே சென்னையிலும் பிற இடங்களிலும் மிகவும் புகழ் பெற்று விளங்கின.

> "இணையற்ற நாவன்மையை இயல்பாகவே பெற்றவ ராதலின், சொற்பஞ்சமின்றிச் சொற்பொழிவுகள் செய்வதில் எவரிலுஞ் சிறந்து விளங்கினார். வித்துவ சபையிலும் அரச சபையிலும் அஞ்சாது நின்று பேசுவார். தடைப்படாமலும் விரைவாகவும் பலமணி நேரம் நின்று ஆயாசமின்றிப் பேசும் வன்மை இவருக்குண்டு. அந்நாளில் இவரின் பேச்சு வன்மையை எடுத்துப் பாராட்டுவரிலர். அதனாலி வருக்கு எங்கும் புகழ் உண்டாயிற்று"

என்பார் கணேசையர். தமிழ்நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்று, தமிழ் மொழியின் செழுமைக்கும், சைவ நெறியின் வளர்ச்சிக்கும் உரையாற்றி, அன்பர்களின் உள்ளங்கையில் உரமேற்றிக் கீர்த்தி பெற்றார் அப்பெருந்தகை.

சைவத்தமிழ் போற்றி வந்த திருமறைகளே அருட்பா என்றும் வள்ளல் பெருமான் இராமலிங்கர் பாடியவை மருட்பா என்னும் கருத்தினைக் கொண்டிருந்தார் கதிரைவேற்பிள்ளை. இதனால் இவர்மீது வள்ளல் பெருமான் அன்பர்களால் மான நட்ட வழக்கு சென்னை உயர்நீதிமன்றத்தில் போடப்பட்டது. இவ்வழக்கில் தமது ஆசிரியருக்கு ஆதரவாகத் திரு.வி.க. தமது தேர்வு நாளன்று பள்ளிக்குச் சென்று தேர்வு எழுதாமல், நீதிமன்றம் சென்று சாட்சி சொன்னார். நீதிபதியால் வழக்கும் தள்ளுபடி செய்யப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. சென்னைப் பட்டணப் புலவர் அனைவரும் சேர்ந்து இவருக்குப் புரவலர்கள் முன்னிலையில் "சதாவதானி என்னும் பட்டத்தினை அளித்தனர். இவர் மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவராகவும் திகழ்ந்தார். கணக்கராக ஒரு வீட்டில் தம் பணியைத் துவக்கிய கதிரைவேற் பிள்ளையவர்கள் தலைசிறந்த தமிழ்ப் புலவர்களில் ஒருவராக ஆனது இவரின் முயற்சியும் தான் மேற்கொண்ட செயல்களில் ஈடுபாடு காட்டியமையேயாகும். மதுரையிலிருந்து தமிழ்ப்

பணிக்காக நீலகிரி சென்று வர நேர்ந்ததால் உடல் சுரத்தால் பீடிக்கப்பட்டு நலிவுற்றார். இதனால் தனது 36ஆம் வயதில் இறைவனடி சேர்ந்தது தமிழுலகத்திற்குப் பேரிழப்பாகும்.

**சதாசிவம்பிள்ளை : 1826 – 1910**

நாவலரவர்களின் முதல் மாணாக்கராகிய பேறு நல்லூர் க. சதாசிவம் பிள்ளை அவர்களையே சாரும். நாவலரை விட இவர் நான்கே வயது குறைவு. நாவலரவர்களின் திண்ணைப் பள்ளியிலே 1846இல் கல்வி கற்க வந்த காலம் முதலாக ஒரு காலத்தும் நாவலரை விட்டுப் பிரிந்தாரில்லை. திருவாவடுதுறை ஆதீன கர்த்தர் சதாசிவம்பிள்ளைக்கு விபூதியிட்டு விடும்போது இவரைச் சக்தி என்றும் நாவலரைச் சிவம் என்றும் குறிப்பிடு வாராம். நாவலரின் சொத்துக்கு ஆதிபத்தியம் பெற்றவர் இவரே. நாவலர் எடுத்த கருமங்களுக்குச் சதாசிவம்பிள்ளை உற்ற துணையாகவும் விளங்கினார். இவரும் நைட்டிகப் பிரமசாரி யாகவே வாழ்ந்தார்.

நாவலர் சிதம்பரத்தில் நிறுவிய சைவப் பிரகாச வித்தியா சாலையின் மேலாளராகப் பொறுப்பேற்று அதன் பொருளை வளரச் செய்தார். இவர் நாவலர் பதிப்பித்த நூல்களை மீண்டும் பிரசுரித்தார். அவர் பரிசோதித்து வைத்திருந்தனவும் பதிப்பிக்கப் பெறாதவையுமாகிய நன்னூல் காண்டிகையுரை, பிரயோக விவேகவுரை, சிவஞானபோத சிற்றுரை, திருவிளையாடற் புராணம் முதலியனவற்றைப் பதிப்பித்தும் தாமாகவே வேறுசில நூல்களைப் பரிசோதித்தும் பதிப்பித்தும் வெளியிட்டுத் தமிழ் நூல் வெளியீட்டில் அக்கறை செலுத்தினார். சென்னை அச்சகத்தையும் வித்தியாசாலைகளையும் இவர் பொறுப்பேற்று நடத்தினார்.

நாவலரும் திருவாசகம், திருக்கோவையார் என்னு மிரண்டையும் பரிசோதித்து, சதாசிவம்பிள்ளை பேராற் சித்தார்த்தி வருடம் வைகாசி மாதம் (1859) சென்னையிலே வெளிப்படுத்தினார். மேலும், இவர், பாரதம், கொலை மறுத்தல், வைராக்கிய தீபம், வைராக்கிய சதகம், திருவுந்தியார், தாயுமான சுவாமிகள் பாடல் முதலிய நூல்களை நாவலர் முன்னிலையில் வெளியிட்டார். குகை நமச்சிவாயரின் அருணைகிரி யந்தாதி, காசிக் கதிர்காம வேலர் திருவருட்பா, நல்லாதனாரின் திரிகடுகம் ஆகியனவற்றை வெளியிட்டுள்ளார். இறுதிக்காலம் வரை சிதம்பரத்திலே வாழ்ந்த இவர் 1910இல் சிதம்பரத்தில் சிவபத மடைந்தார்.

## வித்துவ சிரோன்மணி பொன்னம்பலப்பிள்ளை

ஆறுமுக நாவலர் சைவப்பிரகாசம் செய்யத் தமக்கு வாரிசாக வி. சுப்பிரமணியப்பிள்ளையை நினைத்தார். 1873இல் அவர் மறைந்த பிறகு தமது மருகர் பொன்னம்பலத்திடம் மிகுந்த பற்றுக் கொண்டவராய் விளங்கினார். நாவலரின் சந்நிதியில் 24 ஆண்டுகள் மேனேஜராக விளங்கிய கைலாசப்பிள்ளை "நாவலர் குடும்பப்பற்று அற்றவராய் விளங்கிய போதும் வித்துவ சிரோன் மணி பொன்னம்பலப் பிள்ளையிடம் மிகுந்த பற்றுடையவராய் விளங்கியதற்குக் காரணம் அவர் தமிழிலே சிறந்த வித்துவானா யிருந்து தம்மைப் போலவே பலருக்கும் கைம்மாறு வேண்டாது கல்வி கற்பித்து வந்ததேயாம்" என்பார்.

நாவலரின் காலத்திலேயே, வித்துவ சிரோன்மணியவர்கள் அவருக்கு அடுத்தபடியாக விளங்கிய பெருமைமிக்கவர். நாவலரிடம் கல்வி கற்றவர்களும் இவரிடம் அவற்றை நிறைவு செய்துகொண்ட நிலை உண்டு. ஈழத்துத் தமிழ்ப் புலவர்கள் மட்டுமின்றித் திருவாவடுதுறைப் பொன்னோதுவாமூர்த்திகள், சுப்பிரமணிய ஓதுவார், மகாலிங்கம் பிள்ளை, மற்றும் பழநி குமாரசாமித் தம்பிரான், காரைக்குடி சொக்கலிங்கம் செட்டியார், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், உரத்தூர் கோ. வைத்திய லிங்கம் பிள்ளை, த.ஆ. சபாபதிப் பிள்ளை, உரையாசிரியர் ம. கதிர்வேற்பிள்ளை, கந்தர்மடம் சுவாமிநாத பண்டிதர், சிவ குருநாதப்பிள்ளை போன்றவர்களும் பொன்னம்பலப் பிள்ளையிடம் பாடம் கேட்டவர்கள். மேலும், நல்லூர் கந்த சுவாமி கோயிலிலே வித்துவ சிரோன்மணி கந்த புராணம் வாசிக்க நாவலர் பொருள்விரித்துக் கூறிய பாங்கு பேரறிஞர்களாற் புகழ்ந்து பேசப்படுவனவாகும். நாட்டுக் கோட்டை, தேவக் கோட்டை போன்ற இடங்களில் இவரது புராணச் சொற்பொழிவு மிகுந்து நடந்துள்ளது. நாவலரின் சிதம்பர வித்தியாசாலையில் பல ஆண்டுகளாக அதிபராகக் கடமை யாற்றியவர் பண்டிதமணி சி. கணபதிப் பிள்ளை.

> உச்சியிலிருந்து உள்ளங்கால் பரியந்தம், உள்ளங்காலிலிருந்து உச்சிபரியந்தம் பொன்னம்பலப் பிள்ளையின் உருவமே இலக்கிய ரசனை மயமாய் இருந்தார். எந்த நேரத்திலோ புதிது புதிதாகத் தமக்குத்தோன்றுகின்ற இலக்கிய ரசனையை யாருக்காவது வெளிப்படுத்தாமல் இருக்க

> மாட்டாமை பொன்னம்பலப்பிள்ளையின் நித்திய
> கல்யாண குணம்"

என்பார். உரை செய்வதற்கென்றே பிறந்தவர் பொன்னம்பலப் பிள்ளை. இவரின் உரை மக்கள் மனதைப் பெரிதும் கவர்ந்து இந்தியாவில் இவர் புகழ் மிகவும் பரவியிருந்தது. தமது மாமனாகிய ஆறுமுக நாவலரைப் போற்றினால் வரும் பயனை இவர் கூறுவது சிந்தையில் வைத்துப் போற்றுதற்குரியது.

> "கற்றவர் பற்றுங்கனியைக் கணிப்பிலறம் புரியக்
> பெற்றவர் பெற்ற பயனைப் பிறவிக்கடல் கடக்க
> வுற்றவர்க்கென்று முதவுறு மோடத்தை யாறுமுக
> நற்றவ வெந்தையைப் போற்றிடிற் கூற்று நடுங்குமே"

> "கூறுமின் கூறுமின் கூறுமின் கூறுமின்
> வீறுலவு யாக்கை விழுமுன்ன மரங்கா
> ளாறுமுக வையன் புகழ்"

**பண்டிதமணி சி. கணபதிப் பிள்ளை**

ஆறுமுக நாவலரைப் போன்றே நைட்டிக பிரமச்சாரியாக வாழ்ந்து வந்த பண்டிதமணி கணபதிப்பிள்ளை சைவாசிரிய கலா சாலையிலே தனிச் சிறப்புப் பெற்ற ஆசிரியராகவும் இலக்கிய இரசிகராகவும் கல்வி அறிவைக் கைம்மாறு கருதாது வழங்கும் திறனாளராகவும் பேரும்புகழும் பெற்றவர். சூலை 27ஆம் தேதி 1899ஆம் ஆண்டுப் பிறப்பெடுத்த பண்டிதமணி, நாவலரின் நிழலான வித்துவ சிரோன்மணி பொன்னம்பலப் பிள்ளையின் வலதுகரமாக நின்றவர். இவரின் தடத்திலேயே சொற்பொழிவு முறையைப் பின்பற்றியவர். கவிச்சுவைக்கு முன்னுரிமை கொடுத்த காலத்திலே சமய சிந்தனைக் கட்டத்திற்கு - அதன்பின் ஆத்ம சிந்தனைக் கட்டத்திற்குத் தன்னைக் கொண்டுசென்று அதன் மூலம் பண்டிதமணி வெற்றியும் கண்டார்.

நாவலரவர்களைப் பற்றிய எழுத்துக்களை ஊக்குவிக்கும் பக்குவம் நிறைந்தவர் பண்டிதமணி. நாவலர் பெருமானுக்குச் சிலை நிறுவி விழா எடுத்து 1969இல் சிந்தனைக்கு நன்மை விளை விக்கக் கூடிய வகையிலே "வேற்றுமையில் ஒற்றுமை கண்டவர் நாவலர்", "நாவலர் விக்கியாபனம்","நாவலர் மன மாற்றம்", "கடவுள் உண்டு சிலை பவனி வருகின்றது", "நாவலர் நீதி நல்ல செய்தி" போன்ற கட்டுரைகளை வழங்கினார். பண்டிதமணிக்கு நிலையான பேற்றை அளித்தது அவர் உண்டாக்கிய காவிய பாடசாலை.

இலக்கணம், இலக்கியம், அரசியல், தமிழாசிரியர்நிலை, கலாசாரம், சமயம் என்பன பற்றிச் சொற்பொழிவாற்றும் திறன் கொண்டவர், "விகடச் சக்கரக் கணபதி" என்று போற்றப்பட்டவர்.

இவர் ஆறுமுக நாவலரை வியந்து பாராட்டிப் பல விஷயங்களில் பின்பற்றியவர். நாவலரின் பெரும் ஆர்வலர். ஆறுமுக நாவலரின் கொள்கைகள், கோட்பாடுகள், பலவற்றைப் போற்றி மக்களுக்கு விளக்கியவர். நாவலர் பெருமானின் வரலாற்றோடு தொடர்புடைய கருத்துக்களைக் கூறுவோரைப் புகழ்ந்து நாவலர் தாசனாகப் பண்டிதமணி விளங்குகிறார். இவரது ஆசிரியர் சுன்னாகம் அ. குமாரசாமிப் புலவர். நாவலரைக் கீழ் உரைத்தவாறு புகழுதலால் நாவலரின் தமிழ்ச்சுற்றம் எத்தகையது என்பது அறிய முடிகின்றது.

"கல்விக் களஞ்சியங் கற்றவர்க்கேறு கருணை வள்ளல்
சொல்வித்துவப் பிரசாரகன் பூதி துலங்குமெய்ய
னல்லைப்பதியின னாறு முகப்பெரு நாவலனுந்
தில்லைப் பதியிடைராசன் சேவடி சேர்ந்தனனே"

இவ்வாறாக நாவலரின் தமிழ்ச்சுற்றம் வேரூன்றிய, தளிர்த்த மரமாக, பேராசன் நா. கதிரைவேற்பிள்ளை, அறிஞர் சொக்கலிங்க ஐயா, சுன்னாகம் முத்துக்குமார கவிராயர், சங்கர பண்டிதர், கணேசையர், நீர்வேலி சிவப்பிரகாச பண்டிதர், ஆவரங்கால் சு. நமச்சிவாயபிள்ளை, யாழ்ப்பாணம் பூ. முருகேச பண்டிதர் என எண்ணற்றோர் நாவலரின் வழியில் தமிழைப் போற்றி வளர்த்துள்ளனர்.

1913ஆம் ஆண்டு ஏப்பிரல் 26ஆம் தேதி சிதம்பரம் சைவப் பிரகாச வித்தியாசாலை பரிசளிப்பின் போது சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி மதிப்பிற்குரிய தி. சதாசிவ ஐயரவர்கள் நாவலரைப் பற்றிக் கூறியது நாவலரின் பெருமையை வெளிப்படுத்துகின்றது.

> நாவலரைப் போல் முன்னும் இப்பொழுதும் தமிழ் வித்துவான்களில்லை. ஒருவேளை இருந்தாலும் அவரைப் போலத் தமிழ் மொழியையும் நல்லொழுக்கத்தையும் சைவ சமயத்தையும் வளர்த்து தமிழ் நாட்டாருக்கு நல்ல உதவி செய்தவர், வேறொருவரு மில்லை. பொருள் வரும்படிக்காகப் பிறரை வணங்கா தவர்களும் அவரைப்போல் ஒருவரு மில்லை.

நெடிது தமிழுக்காகத் தன் வாழ்வையும், சுகத்தையும் துறந்து, கல்வி, தமிழ்மொழி, பண்பாடு, சமய உணர்வு ஆகிய வற்றைக் காத்து அதன் வளர்ச்சியில் பெரும் பங்கு வகித்தவர் ஆறுமுக நாவலர். அவரின் தமிழ்ச் சுற்றம் பல நூற்றாண்டு களாகத் தொடர்ந்து அவருக்கும் அவர் வளர்த்த தமிழ் மொழிக்கும் தொண்டு செய்யும் என்பது உறுதி.

## துணை நூல்கள்


1. **ஆறுமுக நாவலர் சரித்திரம்,** த. கைலாசப்பிள்ளை.
2. **ஈழம் தந்த நாவலர்,** பொ. பூலோகசிங்கம்.
3. **நாவலர் பண்பாடு,** பொ. பூலோகசிங்கம்.
4. **தமிழ் வளர்த்த நல்லறிஞர்கள்,** குன்றக்குடி பெரிய பெருமாள்.
5. **ஆறுமுக நாவலர் வரலாறு,** வெற்றிச் செல்வன்.
6. **நாவலர் பெருமான்,** வித்துவான் கா. மாயாண்டிபாரதி
7. **நாவலர் வழியில் தமிழ் அறிஞர்,** யோகேஸ்வரி கணேசலிங்கம்.
8. **சைவ உலகம்,** கலாநிதி சு. வித்தியானந்தன்.
9. **ஈழத்துப் பண்டிதமணி,** பேராசிரியர் சு. சுசீந்திரராசா.
10. **19ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்,** முனைவர் ச. சிவகாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.




# நாவலரின் நன்னூல் காண்டிகையுரை

நம் நாட்டில் சுதேசிகளும் அச்சுக் கூடங்களை நடத்தலாம் எனும் அச்சகத் தடைச்சட்டம் 1836ஆம் ஆண்டு நீங்கிய பின்னர்த் தமிழ் இலக்கிய, இலக்கணப் பதிப்புகள் பெருகின. அதற்கு முன்னரே அமெரிக்க, பிரெஞ்சு, டேனிஷ் மிஷன்கள் தமக்கென அச்சுக் கூடங்களை நிறுவியிருந்தன. அவற்றில் கிறித்தவ சமய நூல்களுடன் தமிழ் இலக்கண, இலக்கியங்களும் அச்சிட்டு வெளியிடப்பட்டன. பிரிட்டிஷ் ஆதிக்க நாடுகளில் ஒன்றான இலங்கையில் யாழ்ப்பாணத்திலிருந்து அமெரிக்கன் மிஷன் அச்சுக்கூடம் அக்காலத்தில் (19ஆம் நூற்றாண்டில்) அறிவியல் தமிழ் நூல்கள் உட்பட்ட பல தமிழ் நூல்களை அச்சிட்டு வெளியிட்ட பெருமையைப் பெற்றது. ஆறுமுக நாவலரும் சில நூல்களை அந்த அச்சுக்கூடத்தில் பதித்து வெளியிட்டார்.

### தமிழ் இலக்கணக் கல்வி

தமிழ் இலக்கணக் கல்வி தொன்றுதொட்டே நம் நாட்டில் இருந்து வந்ததற்கான கர்ண பரம்பரைக் கதைகளும் எழுத்துச் சான்றுகளும் கிடைக்கின்றன. அகத்தியர், அவருடைய மாணவர்கள் என இருந்த பன்னிருவர்; அம்மாணவர்களில் ஒருவர் செய்த **தொல்காப்பியத்திற்கான** உரைகள்; அவ்வுரைகள் எழுதத் தொடங்கிய காலக்கட்டத்தை அடுத்து அத்தொல் காப்பியத்தை முதனூலாகக் கொண்டு எழுந்த **நன்னூல்**; அந்நன்னூலுக்கு முன்னரும் பின்னருமாக எழுந்த நிகண்டு நூல்கள் மற்றும் பிற்கால இலக்கண நூல்கள்; ஐரோப்பியர் வருகையை யொட்டி எழுந்த புதுவகை நிகண்டு மற்றும் அகராதிகள்; அவற்றைத் தொடர்ந்து வெளிவந்த விளக்க இலக்கண நூல்கள் போன்ற ஒரு நீண்ட இலக்கணப் பாரம்பரியப் பட்டியல் தமிழ்க் கல்வியில் உண்டு. இவ்விளக்க இலக்கணங் களைப் பார்க்கும் போது, ஏற்கெனவே இந்நாட்டில் இருந்து வந்த தமிழுக்கு எங்கிருந்தோ வந்த அயல்மொழிக்காரர்களே மிகுந்த இலக்கணங்களைத் தம்மைச் சார்ந்தோரும் தெரிந்து

கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் எழுதினர் என்பதில் கருத்து வேறுபாடு இருக்காது.

குருகுலக் கல்வி போன்ற தமிழ்க் கல்வி முறைகளில் நிகண்டுகளை நெட்டுரு செய்தலே மிக்கோங்கி இருந்தது. ஆங்கிலேயர் ஆட்சியின் தொடக்கத்தில் புதுக்கல்வி முறை தொடங்கப் பெற்ற பின்பு இந்நிகண்டுகள் பல நூல்களாக அச்சிடப்பட்டன. அதனால் எல்லோரும் அவற்றை நினைவில் வைத்துக் கொள்ளப்படவேண்டிய பார்வை நூல்களாக நிகண்டுகள் மாறின. அவற்றின் இடத்தை நன்னூல் பிடித்துக் கொண்டது. நன்னூலை மனப்பாடம் செய்தலையே புலவர்களும் மாணவர்களும் தலையாய பணியாகக் கருதினர். அத்தலையாய பணியை எளிமையாக்கவே நன்னூலுக்கு ஆறுமுக நாவலர் காண்டிகை உரை கண்டார்.

**தொல்காப்பியமும் நன்னூலும்**

தொல்காப்பியத்தின் காலத்தை இன்னதென அறுதியிட்டுக் கூறுவதற்கான வரலாற்றுச் சான்றுகள் இல்லையாயினும் அது மிகவும் தொன்னூல் என்பதில் ஐயமில்லை. அது எழுதப் பெற்ற காலச்சூழல் தமிழகத்தில் மூவேந்தரின் ஆட்சிகள் நடைபெற்ற காலமாக இருந்திருத்தல் கூடும். மூவேந்தர் ஆட்சிகள் மறைந்து ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின் தொல்காப்பியச் சிந்தனைகள் மீண்டும் தொடங்கின. சோழர்களின் பரம்பரையினர் மீண்டும் எழுச்சியுற்றுப் பிற்காலச் சோழர் ஆட்சியை நிலை நிறுத்திய காலக்கட்டத்தைப் போல் தொல்காப்பியமும் அதைப் பற்றிய ஆய்வுகளும் மீண்டும் கி.பி. 10ஆம் நூற்றாண்டளவில் எழுச்சியுற்றன. இவ்வெழுச்சியின் முன்னோடிகளில் ஒருவர் உரையாசிரியரான இளம்பூரணர் ஆவார்.

அகத்தியத்தின் வழிநூலாகத் தொல்காப்பியம் அமைந்தது போன்று, அத்தொல்காப்பியத்தின் வழிநூலாக ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின் நன்னூலும் அமைந்தது. அது இளம்பூரணர் போன்ற அக்காலக்கட்டத்து உரையாசிரியர்களின் ஒத்த கருத்துகளையும் பதிவு செய்து கொண்டிருக்கலாம். ஒரு நூலின் வழிநூலாக மற்றொரு நூல் அமைகிறது என்றால் அம்முந்நூலின் அமைப்பாலும், கருத்தாலும், நோக்கத்தாலும் பிறவற்றாலும் அதனுடன் உடன்பட்டு இருக்க வேண்டும். இவ்விடத்தில், நன்னூலில் எழுத்து, சொல் தவிர ஏனைய

இயல்கள் எழுதப்பட்டு இறந்தொழிந்தன என்றோ, எழுதாமல் பவணந்தியார் இறந்தொழிந்தார் என்றோ கொள்ளத் தேவையில்லை. அது அக்காலக்கட்டத்தின் இயல்பு. கிடைத்தவரை **நன்னூல்** தன் முந்நூலைப் போல் சிறந்துள்ளது என வரையறுத்து இந்த ஆய்வை மேற்கொள்ளலாம்.

**நன்னூலை** ஆக்குவித்தோனான சீயகங்கன் சேரபாண்டியர் தம்பிரானான மூன்றாம் குலோத்துங்க சோழனின் (கி.பி 13) மேலாண்மையின்கீழ் இருந்தவன். ஏனைய பிற்காலச் சோழர் களின் காலத்தில் பல இலக்கண நூல்களும் உரைகளும் இலக்கியங்களும் தோன்றின என்பது வரலாறு உணர்த்தும் உண்மை. தன் தந்தை இழந்த நாட்டை மீட்டெடுத்தவன் சீவகன் எனத் திருத்தக்கதேவர் **சீவகசிந்தாமணியைச்** சோழநாட்டில் யாத்தார். மூவேந்தர் இழந்த மண்களைச் சோழர்கள் மீட்டெடுத்தனர். இந்நிலையிலேயே **தொல்காப்பியத்தில்** கூறப்பட்டுள்ள கருத்துகளின் அடிப்படையிலும் தன்காலத்திய மொழிநிலையின் அடிப்படையிலும் **நன்னூலைப்** பவணந்தியார் செய்து **தொல்காப்பியத்தை** வேறு வடிவில் மீட்டெடுத்தார். இதுவும் ஒருவகையில் மொழி மீட்டெடுப்புதான். அதையும் ஒரு சமணரே செய்தார் என்பது இங்குக் கருதத்தக்கது.

ஆயினும் மொழி என்பது ஆட்சி, சமயம், சாதி, வட்டாரங் களுக்கு அப்பாற்பட்டது என்பதற்குச் சான்றாக **நன்னூற்** கல்வி தமிழகத்தில் இருந்து வந்தது. அது ஆறுமுக நாவலர் போன்ற சுத்த சைவர்களாலும் பதிப்பிக்கப்பெற்றது; மற்றும் உரையாக்கப் பெற்றது என்பதே இதற்குச் சிறந்த சான்று. நாவலர் முதலில் **தொல்காப்பியப்** பதிப்பை மேற்கொண்டார். பின்பு **நன்னூலின்** சங்கர நமச்சிவாயர் உரையைப் பதிப்பித்தார். பின்பு தாமே **நன்னூலுக்குக் காண்டிகை** உரை கண்டார். பள்ளி மாணவர் களுக்குப் பாடமாக வைப்பதற்காகப் பவணந்தி முனிவரின் நூலுக்கு உரை கண்டார் என்று கூறுவோர் கூற்றிலும் உண்மை இருந்தாலும், முக்காண்டிகை உரைக்கு அப்பாலும் ஐங்காண்டிகை உரை செய்தற்கு நன்னூலின் பொதுப்பாயிர நூற்பாவில் (நூற்பா. 22) விதியிருப்பதால் அப்பெரும்பணியை ஆறுமுக நாவலர் மேற்கொண்டார் எனப் போற்றுதலே தகும்.

### இலக்கணப் பதிப்புகளில் நன்னூல்

தமிழிலக்கணப் பதிப்புகளில் **நன்னூற்** பதிப்பே மிகவும் முந்தியதாகத் தெரிவதற்குக் காரணம் அது தமிழ் மாணவர்

களுக்குப் பாடப்புத்தகமாக வைக்கப்பட்டதாகலாம். தாண்டவ ராய முதலியார் **இலக்கணப் பஞ்சக மூலம்** என்ற தலைப்பில் 1835இல் 33 பக்கங்களில் **நன்னூலின்** மூலத்தைப் பதிப்பித்தார். இவர் வில்லிவாக்கத்தினர். புனித ஜார்ஜ் கோட்டைக்குள் அமைந்திருந்த கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றியவர். 1825இல் **இலக்கண வினாவிடை** என்ற பெயரில் (A Catechism of Tamil Grammar) ஒரு நூலை எழுதி வெளியிட்டவர்.

இவரைத் தொடர்ந்து முகவை இராமானுசக்கவிராயர் 1845, 1847இல் **நன்னூல்** மூலத்தையும் அதற்கான தம் காண்டிகை உரையையும் எழுதி வெளியிட்டார். ஆண்டிப்புலவர் என்பவர் **உரையறி நன்னூல்** என்ற பெயரில் **நன்னூலுக்கு** உரையெழுதி வெளியிட்டதாகத் தெரிகிறது. Grammaticalis Tamuliens is என்ற பெயரில் Walter Joyes என்பவர் எழுதிய நூலை An English version of the celebrated Tamil... Nunnool எனும் ஆங்கிலத் தலைப்பிட்டு எழுதிய நூலை டபிள்யு. ஜாய்ஸும் எஸ். சாமுவேல் பிள்ளையும் **நன்னூலைத்** தமிழில் பதிப்பித்து 1848, 1850ஆம் ஆண்டுகளில் வெளியிட்டனர். இப்பதிப்பில் குறிப்புகளும் சொல்லகராதியும், இணைப்புகளும் **நன்னூலுக்குச்** சங்கர நமச்சிவாயர் செய்திருந்த உரையிலிருந்து சில பகுதிகளும் கொடுத் திருந்தனர். ரெவரண்ட் பிரதர்டன் (Rev. T. Brotherton) என்பவர் இதை மீண்டும் 1851இல் திருத்தியும் புதுக்கியும் வெளியிட்டார். இவருடைய முதல் அதிகாரம் மட்டுமே வெளிவந்தது. ஜாய்ஸும் சாமுவேல் பிள்ளையும் தொல்காப்பிய-நன்னூலையும் பதிப்பித்து வெளியிட்டதாகவும் தெரிகிறது.

கி.பி. 18ஆம் நூற்றாண்டினரான சங்கர நமச்சிவாயர் நன்னூலுக்குக் கண்டிருந்த புத்துரையைச் சிவஞான முனிவர் புதுக்கி எழுதியிருந்ததை ஆறுமுக நாவலர் விரோதிகிருது ஆண்டில் (1851) வெளியிட்டார். இப்பதிப்பு 312 பக்கங்களில் இருந்தது. ஜி.யு.போப் 1858இல் A larger Grammar of the Tamil Language etc. என்ற பெயரில் **நன்னூலை ஆங்கில** மொழி பெயர்ப்பில் வெளியிட்டார். 1864இல் **நன்னூற் சுருக்கம்** என்ற பெயரில் (Abridgment of the Nannūl; with the original text, explanation, examples and notes, and an appendix) என ஆங்கிலத் தலைப்பிட்டு) ஜி.பி. சௌந்தர நாராயண பிள்ளை என்பவர் மூன்றாம் பதிப்பாக 142 பக்கங்களில் வெளியிட்டிருந்தார். களத்தூர் வேதகிரி ஆறுமுக முதலியார் என்பவர் **நன்னூல்** மூலத்தைத் தம் உரையுடன் 1875இல் வெளியிட்டார். பள்ளி

மாணவர்களுக்காகப் பெரும்பாலும் இவர்களால் பதிப்பிக்கப் பட்ட **நன்னூலை** விசாகப் பெருமாளையரும் சரவணப் பெருமாளையரும் முக்காண்டிகை உரையுடன் கி.பி.19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வெளியிட்டனர். ஆறுமுக நாவலரின் ஐங்காண்டிகை உரையுடனான நன்னூல் பதிப்பு - 1878இல் வந்த பதிப்பு - இக்காலக்கட்டத்தில் வெளியாயிற்று எனத் தெரிகிறது. இதன் 14ஆம் பதிப்பு (பிரஜோற்பத்தி வருசம் தை மாதம்) தமிழ்ப் பல்கலைக்கழகத்தால் 1984இல் மறுபதிப்புச் செய்யப்பட்டுள்ளது. 1974 முதல் **நன்னூற்** காண்டிகையுரை பாடத்திட்டத்தில் சேர்க்கப்பட்டிருந்த காரணத்தால் சைவசித்தாந்தக் கழகத்தார் உட்படப் பல பதிப்பகங்களும் பதிப்பாசிரியர்களும் இவ்வுரையைத் தம் தம் போக்கில் பதிப்பித்து வெளியிட்டு வருகின்றனர். இப்பதிப்புகளை எல்லாம் ஒப்பிட்டுப் பார்க்கும் போது அக்காலத்து மாணவர்களுக்கு ஆறுமுக நாவலர் செய்திருந்த காண்டிகை உரை எக்காலத்துக்கும் ஏற்றதாகவே தோன்றுகிறது.

### பாடநூல்களில் காண்டிகையுரை

**உரையாசிரியர்கள்** எனும் தலைப்பில் 1968ஆம் ஆண்டு நூல் எழுதிய மு.வை. அரவிந்தன் ஆறுமுகநாவலர் பற்றிக் கூறும் சில கருத்துகளைக் கீழே காணலாம்:

> 19,20ஆம் நூற்றாண்டுகளில் கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் இலக்கணம் கற்கும் மாணவர்களுக்கு ஏற்ற எளிய இலக்கண நூல்கள் தேவைப்பட்டதால் பலர் நன்னூல் விருத்தியுரையைத் தழுவி, சுருக்க மாகவும் தெளிவாகவும் எளிமையாகவும் காலத்திற் கேற்ற பல புதிய உதாரணமும் தந்து காண்டிகை யுரைகளை இயற்றினர். முகவை இராமாநுசக் கவிராயர், ஆறுமுக நாவலர், விசாகப் பெருமாள் ஐயர், சடகோபராமாநுசாசாரியார், பவானந்தம் பிள்ளை ஆகியோர் இயற்றிய காண்டிகை உரைகள் தமிழ் கற்கும் மாணவர்களுக்கு எழுதப்பட்டவை யாகும். (பக். 62-63).
>
> நாவலர் பல ஆண்டுகள் தமிழ் கற்பிக்கும் பணியில் ஈடுபட்டு மாணவர் உள்ளத்தை அறிந்து சிறந்த முறையில் உரை இயற்றியுள்ளார். ஒவ்வொரு சூத்திரத்தின் கீழேயும் பரிட்சை வினாக்கள் இடம்

> பெற்றுள்ளன. ஆகுபெயர் அன்மொழித் தொகை வேறுபாடுகளை மிகத் தெளிவாக இனிய முறையில் சிறுசிறு வாக்கியங்களில் எழுதுகின்றார் நாவலர். நூலின் இறுதியில் பிற்சேர்க்கையாக அப்பியாசம் என்ற தலைப்பில் பல பயிற்சிகள் தரப்பட்டுள்ளன. இவ்வாறு அறுபது பகுதிகளில் பல்வேறு சொல்லுக்கும் வாக்கியங்களுக்கும் இலக்கணம் கூறும் முறை விளக்கப்பட்டுள்ளன. பல சொற்களுக்குப் பகுபத இலக்கணம் காட்டப்பட்டுள்ளன. சொல்லிலக்கண சூசி- என்ற தலைப்பில் சொற்களின் வகைகளை விரிக்கின்றார். தொடர் இலக்கணம் கூறிப் பல வாக்கியங்களைத் தெளிவுபடுத்துகின்றார். (பக். 482)

நாவலரின் காண்டிகையை நல்ல முறையில் திறனாய்வு செய்துள்ள மு.வை. அரவிந்தன் பல பதிப்பாசிரியர்கள் நாவலரின் காண்டிகையில் உள்ள 'நல்லவற்றைப் பயன்படுத்திக் கொண்டுள்ள நிலையை இன்று வரை நாம் காணமுடிகின்றது. நாவலர்க்கு இலக்கிய இலக்கணப் புலமையும் பதிப்புநுட்பமும் தெரிந்திருந்த காரணத்தால் இவ்வாறான நல்ல உரை சாத்தியமாயிற்று. "காண்டிகையுரை என்று குறிப்பிட்டால் அது நாவலர் எழுதிய காண்டிகையுரையையே குறிக்கும்" என நன்னூல் விருத்தியுரையின் பதிப்பில் சோம இளவரசு (1981:10) குறிப்பிடுகின்றார். இவ்வாறு பாடநூலாக அமைய வேண்டும் என நன்னூலுக்குக் காண்டிகையுரை எழுதிய நாவலர் விரும்பியதால் நன்னூலின் தோற்ற வரலாற்றை அவர் எங்கும் மேற்கொள்ளவில்லை.

நன்னூலைச் செய்வித்த சீயகங்கன் மூன்றாம் குலோத்துங்க சோழனின் கீழ் (S.I.I, Vol. III, p.122) இருந்த சிற்றரசன் என முன்பே கூறப்பட்டது. சீயகங்கனுடைய கல்வெட்டுகள் கி.பி. 1181 முதல் 1212 வரை கிடைத்துள்ளன. அவனுடைய தந்தை சோழேந்திர சிங்கன் எனப்பட்டான். சீய கங்கனுடைய மாமன் மதுராந்தக பொத்தப்பிச் சோழன் எனப்பட்டான். பொத்தப்பிச் சோழர்கள் உறையூர்ச் சோழர்களின் வமிசாவளியினர் ஆதலால் சீயகங்கனுக்கும் சோழர்களுக்கும் உறவுமுறை இருந்திருக்க வேண்டும். இவ்வாறான வரலாற்றையும், நன்னூல் ஆசிரியர் பவணந்தியார் தொடர்பான வரலாற்றையும் அவர் சார்ந்திருந்த சமண சமயம் தொடர்பான கருத்துகளையும் ஆறுமுக நாவலர் தம் காண்டிகை உரைப் பதிப்பில் எங்கணும் கூறிற்றிலர். இதனால் இவ்உரை நூலைப் பயிலும் மாணவர்களுக்கு நன்னூற் பாடமே

மிக்கோங்கியிருந்து, வரலாற்றுப் பார்வை அற்றுப் போய் விட்டிருந்திருக்கலாம் எனக் கருதுவதில் ஐயமில்லை. நன்னூற் சிறப்புப்பாயிரத்திற்கு நாவலர் உரைகாணும் போது அதன் கருத்தைச் சுருக்கமாகக் கீழ்வருமாறு கூறுகின்றார்:

> இதனது தாற்பரியம். சூரியன் தன் கிரணத்தினாலே புறவிருளை அகற்றிக் கட்பொறிக்கு விடயமாகிய உருவங்களை விளக்குதல் போலக் கடவுள் தன் கருணையினாலே அகவிருளை அகற்றி அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு உறுதிப் பொருளையும் விளக்கப்பெற்ற பதினெண்பாடை களுள்ளும் கிழக்கே கீழ் கடலுந் தெற்கே கன்னி யாகுமரியும் மேற்கே குடநாடும் வடக்கே திரு வேங்கடமும் எல்லையாகவுடைய நிலத்து மொழி யாகிய தமிழ்ப் பாடையினுள் எழுத்துச் சொற் பொருள் யாப்பு அணி என்னும் ஐந்திலக்கணத் தையும், இலக்கியப் பயிற்சியின் வலியவரேயன்றி எளியவரும் அறியும் பொருட்டுத் தொகுத்தும் வகுத்தும் விரித்துஞ் செய்யப்படும் யாப்பினாற் செய்து தருக எனச் சீயகங்கன் சொல்லத், தொல்லாசிரியர் நூலின் வழியே நன்னூல் என்னும் பெயரினாற் செய்தனன் பவணந்தி முனிவன் என்பதாம்.

என்கிறார் (பக். 3). அதன்கீழ், மாணவர்க்கு எளிதில் விளங்கும் பொருட்டு,

| | | |
|---|---|---|
| 1. | ஆக்கியோன் பெயர் | - பவணந்தி முனிவன் |
| 2. | வழி | - முன்னோர் நூலின் வழி |
| 3. | எல்லை | - குணகடல் குமரி குடகம் வேங்கட மெனு நான்கெல்லை. |
| 4. | நூற் பெயர் | - நன்னூல் |
| 5. | யாப்பு | - நிகண்டு கற்று இலக்கியப் பயிற்சி செய்த பின் இந்நூல் கேட்கத் தக்கது. |
| 6. | நுதலிய பொருள் | - அரும்பொருளைந்து |

7. கேட்போர் - இலக்கியப் பயிற்சி செய்தவர்

8. பயன் - மொழித்திறத்தின் முட்டறுத்தல்

9. காலம் - சீயகங்கன் காலம்

10. களன் - சீயகங்கன் சபை

11. காரணம் - சீயகங்கன் சொன்னமையும், யாவரிடத்தும் இரக்கமுடைமையும்

இலக்கியப் பயிற்சிக்குப்பின் இலக்கணப் பயிற்சி கொள்ளும் மாணவர்க்குத் தேவையான செய்திகளைத் தருவதிலேயே நாவலர் நாட்டம் கொண்டிருந்தார் என்றே தெரிகிறது. வரலாறு சமயம் போன்றவை இலக்கிய இலக்கண மாணவர்க்கு இன்றியமையாதன வன்று என அவர் நினைத்திருக்கலாம். நாவலரின் காண்டிகை யுரை

1. நூல்

2. 60 அப்பியாசங்கள்

3. இலக்கணவமைதி

4. பகுபத முடிவு - பெயர்ப் பகுபதம்
வினை முற்றுப் பகுபதம்
பெயரெச்சப்பகுபதம்
வினையெச்சப் பகுபதம்

5. பொதுப் பகுபதங்களை முடிக்க

6. பகுபதங்களை முடிக்க

7. சொல்லிலக்கண சூசி
- பெயர்ச்சொல்
- வினைச்சொல்
- இடைச்சொல்
- உரிச்சொல்

8. இலக்கணங் கூறிய உதாரணங்கள்

9. அறிவித்தல்

10. நன்னூற் சூத்திரவகராதி

எனும் அமைப்பில் உள்ளது. நன்னூற் பொதுப்பாயிரத்தில் நூலின் வரலாறு கூறும் (நூற்பா. 4) நூற்பாவில் நூல் இயல்புடன் காண்டிகை விருத்தியாகும் விகற்ப நடை பெறுமே என்றிருப்பதால் காண்டிகையுரைகளும் விரித்தியுரைகளும் ஒரு நூலுக்குச் சாத்தியமே என்பதை அறியலாம். 'காண்டிகையுரை இத்தன்மையது' எனும் தலைப்பில் (நூற்பா. 22)

**கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்**
**அவற்றொடு வினாவிடையாக்க லானுஞ்**
**சூத்திரத் துட்பொரு டேற்றுவ காண்டிகை**

எனவரும் நூற்பாவில் கருத்துரையும் பதவுரையும், எடுத்துக் காட்டுகளும் அவற்றோடு வினாக்கள் மற்றும் அவற்றுக்கான விடைகள், நூற்பாக்களின் பொருளை விளக்குதல் எனும் ஐந்துடன் காண்டிகையுரை அமையப் பெறவேண்டும் என்று கூறப்பட்டுள்ளதால் அவ்வாறே நாவலரும் தம் காண்டிகையை அமைத்துள்ளார். இவற்றுள் முதல் மூன்றும் அமையுமாறு காண்டிகை உரைகள் தம் காலத்தே ஏற்பட்டு விட்டதால், நான்கும், ஐந்தும் அமையுமாறு அவ்வுரையை அவர் எழுதினார் எனலாம்.

மேற்கூறிய காண்டிகையுரை அமைப்பில் முதலாவதாக நூல் 1. பெரும்பாலும் உட்தலைப்பு, 2. நூற்பா, 3. நூற்பாவின் பதப்பொருள், 4. கருத்துச் சுருக்கம், 5. பகுதி பகுதியாகப் பரிக்ஷை வினாக்கள் 6. சில இலக்கணக் குறிப்புகளுக்கு விளக்கம், 7. உதாரணங்கள் என அமைந்துள்ளது. தெளிவும் எளிமையும் இவற்றில் காணக்கிடக்கின்றன. வேறு எப்பதிப்பிலும் காண முடியாத கிரந்த எழுத்துகளைப் **பதவியலில்** வடமொழியாக்கம் என்ற பகுதியில் நாவலர் காட்டியிருப்பது அவருடைய கிரந்த எழுத்து மற்றும் வடமொழிப் பயிற்சியைக் காட்டுகின்றது. மாணவர்களுக்கும் கிரந்தப் பயிற்சி அமைய வேண்டுமென்பதற் காக அப்பியாசப் பகுதியில் உரிய இடத்தில் அவ்வெழுத்துகளால் ஆன பகுதியைக் கொடுத்துள்ளார்.

மேலே நூற்பாவில் கூறியிருப்பது போன்று வினாக்கள் காண்டிகையுரையில் அமையவேண்டும் என்பதற்கு ஏற்பப் பல நிலைகளில் 'தேர்வு வினாக்கள்' கேட்கப்பட்டுள்ளன. அவற்றுக் கான விடைகளை மாணவனே எழுதிக் கொள்ள வேண்டு மென்பதும் பெறப்படுகிறது. பொதுப்பாயிரத்தில் வரும் 46 நூற் பாக்களுக்கு 46 வினாக்களும் அவற்றுக்குத் துணை வினாக்களும்

கேட்கப்பட்டுள்ளன. சிறப்புப் பாயிரத்தில் 9 வினாக்கள் வினவப் பட்டுள்ளன. எழுத்ததிகாரத்தில், எழுத்தியல், பதவியல், உயரீற்றுப் புணரியல், மெய்யீற்றுப்புணரியல், உருபுப் புணரியல் எனும் இயல்களுக்குரிய வினாக்கள் ஆங்காங்கே கேட்கப் பெற்றுள்ளன. சொல்லதிகாரத்தில், பெயரில், வினையியல், பொதுவியல், இடையியல், உரியியல் என்பவற்றுக்கே உரிய வினாக்கள் அமைக்கப்பட்டுள்ளன.

நன்னூல் காண்டிகையுரையில் அறுபது 'அப்பியாசங்களில் பயிற்சிகள் கொடுக்கப்பெற்றுள்ளன. பயிலும் மாணவன் எவனும் நூற்பாவையும் பதப்பொருளையும் உதாரணத்தையும் படித்து விட்டுத் தேர்வில் கேட்கப்படும் கேள்விகளுக்குத் திணரக் கூடாது என்பதற்காக இவ்அப்பியாசங்கள் அமைக்கப்பட்டுள்ளன. சான்றாக அப்பியாசம் 3ஐப் பார்க்கலாம்.

> மேல்வருஞ்சொற்களுள், இன்ன இன்ன சொல்லின் ஈற்றுகரம், இன்ன இன்ன ஏதுவால், இன்ன இன்ன தொடர்க் குற்றியலுகரம், இன்ன இன்ன சொல்லின் ஈற்றுகரம், இன்ன இன்ன ஏதுவால் முற்றியலுகரம் என்று எழுதுக:
>
> பொருப்பு, வருவது, அரிது, வெஃகு, நகு, காட்டு, பசு, அரக்கு, கரும்பு, உறு, கதவு, மால்பு, ஞாயிறு, ஒல்கு, நடு, பனாட்டு, நெல்லு, புணர்வு, மரபு, செலவு, உயர்த்து, அது, தொடர்பு, இந்து, உரிஞு, அலாபு, செவிடு, ஏது, தாலு, வெள்கு, இங்கு, போவது, எய்து, மூழ்கு, ஓர்ப்பு, ஆமணக்கு, நீடாது, குறுகாது, பாட்டு, பொச்சாப்பு, விராவு, எழுது, இஃது

இதுபோன்ற அப்பியாசங்களைச் செய்து பார்த்தாலே ஒருவர் தமிழ் இலக்கணப் பயிற்சி மிக்கோங்கியிருக்கலாம்.

இலக்கணம் கற்றதனால் ஆய பயன் 'நற்றாள் தொழுவதற்கு' அல்ல. அவ்இலக்கண அறிவை நூல்களை எழுதும் போதும், பயிலும் போதும் பயன்படுத்திப் பார்க்க வேண்டும். அவ்வாறு பயன்படுத்தாதவர்களுக்குச் சாட்டையடியாக நாவலரின் கீழ்வரும் பகுதி அமைகிறது. 'இலக்கணமைதி' என்ற பகுதியில்,

> இலக்கணங் கற்றவர், இலக்கியத்தில் அவ்விலக்கணம் அமைந்து கிடக்குமுறைமை ஆராய்ந்து விதியோடு

> கூறிப் பயிலல் வேண்டும். அது செய்யப்படாத விடத்து, இலக்கண நூற் கல்வியால் ஒரு பயனும் இல்லை.

எனும் அவருடைய கூற்று இக்காலத்தில் எவ்வளவோ இலக்கிய இலக்கணம் படித்து, ஏராளமான பட்டங்களைப் பெற்று, க், ச் போடத் தெரியாமல், அதைச் சமாளித்துப் பிழைத்து வரும் ஒருசிலர்க்குக் கொடுக்கும் உதையாகத் தெரிகிறது. அதைவிடவும், ஆறுமுக நாவலரின் காண்டிகையைப் பிழைபட மறுபதிப்புச் செய்கிறவர்கள், இங்கொன்றும் அங்கொன்றுமாகப் பிய்த்து, எழுத்துப் பிழையுடன் பதிப்பிப்பவர்கள் போன்றோரே மிகவும் கண்டிக்கத்தக்கவர். 'உபாத்தியாயருக்கு அறிவித்தல்' எனும் பகுதியில் அவர் கூறுவதாவது:

> உபாத்தியாயர், நாடோறுஞ் தாம் மாணாக்கர் களுக்குச் சொல்லும் பாடத்தை முன்னரே வீட்டிலே அவதானத்தோடு வாசித்துச் செவ்வையாக ஆராய்ந்து, உள்ளத்தில் அமைத்துக் கொள்ளல் வேண்டும்

எனும் அவர்கூறும் அறிவுரையை எத்தனை பேர் பின்பற்றினார் கள், பின்பற்றுகிறார்கள், பின்பற்றப் போகிறார்கள் எனத் தெரிய வில்லை. அதுபோன்று 'மாணாக்கர்களுக்கு அறிவித்தல்' எனும் பகுதியில் நாவலர் கூறும் பதினொரு அறிவுரைகளில் ஒரு சில வற்றையாவது தமிழ் மாணவர்கள் பின்பற்றுவார்களேயானால் தாமும் சிறப்பர்; தமிழும் சிறக்கும்.



# ஆறுமுக நாவலர் தேவாரத் திரட்டு

தமிழகத்தின் தொன்மைமிகு சமயங்களில் சைவமும் ஒன்று. சிவபரம்பொருளையே முதன்மையாகக் கொண்டு இயங்குவது சைவ சமயம் ஆகும். உலகில் உள்ள உயிர்கள் அனைத்தையும் ஒப்பு நோக்கி அவற்றினிடத்து அன்பு செலுத்துவது இச்சமயத்தின் அடிப்படைக் கொள்கையாகும்.

சமண பௌத்த சமயங்களின் எழுச்சியை அடக்கித் தமிழ்ச் சமூகம் சைவசமயத்தின்பாற் திரும்ப அரும்பாடுபட்ட பெரியோர் பலருண்டு. பரந்தும் விரிந்தும் இருந்த சைவசமயம் சங்ககாலத்தை அடுத்துப் பிற சமயங்களால் சற்றுத் தளர்ந்து காணப்பட நேர்ந்தது. அத்தளர்ச்சியைப் போக்கி உயிர்ப்பைக் கொடுத்தவர் கள் நாயன்மார்கள் ஆவர்.

காரைக்கால் அம்மையார், திருஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஐயடிகள் காடவர் கோன், நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார் ஈறாக உள்ள இருபத்தேழு பேரருளாளர்கள், தாம் இறைவன்பால் கண்ட இனிய இன்ப நுகர்வைப் பிறரும் பெற இசையோடு கூட்டியும், இயற் தமிழாகத் திணித்துப் பல்வேறு நூல்களை அருளியுள்ளனர்.

ஞானசம்பந்தப் பெருமான் தொடங்கி, சேக்கிழார் ஈறாக உள்ள பெரியோர்கள் எல்லாம் வல்ல சிவபெருமானது திருவருள் இன்பத்துள் திளைத்து மகிழும் நிலையில் தாம் துய்த்துணர்ந்த பெருநலன்களையெல்லாம் உலக மக்களனைவரும் பெற்று இன்புறும்படித் தெளிவும் இனிமையும் பொருந்திய செந்தமிழ்ப் பாடல்களால் விரித்தருளிச் செய்துள்ளனர். அருளாசிரியராகிய இவர்கள் திருவாய் மலர்ந்தருளிய தெய்வத் தமிழ்ப் பாடல்களே திருநெறித் தமிழ் எனவும் திருமுறை எனவும் வழங்கப் பெறுகின்றன.

**திருமுறை - சொல் விளக்கம்**

முறை என்ற சொல் - நூல், பழமை, ஊழ், கூட்டு, முறைமை எனப் பல பொருள்களில் வழங்குவது என்பது 'கோசமும், பழமையும், ஊழுங் கூட்டும், ஆர்ப்பும் முறைமையும் முறைமை யென லாகும்' எனவரும் பிங்கலந்தையால் உணரப் படும். இச்சொல் மேற்குறித்த பொருள்களோடு நியமம், தடவை, உறவு, நூற்பகுப்பு முதலிய பொருள்களில் வழங்குதலை உலக வழக்காலும் நன்கறியலாம். திருமுறை என்ற தொடரிலுள்ள முறையென்பது மேற்காட்டிய பல பொருள்களுள் நூலையும் அதன் உட்பிரிவுகளையுங் குறித்து வழங்குவதாகும். முறைப்பட இயற்றப் பெற்றமையின் முறையென்பது நூற்குப் பெயராயிற்று.

மக்கள் அறிய வேண்டிய பொருள்களை அறிவுறுத்தி மனக்கோணலைத் தீர்த்துத் தீமையினை விலக்கி, நன்றின்பாற் செலுத்தும் மாண்புடைய சொற்களால் முறைப்பட இயற்றப் பெற்றனவே நூல் எனச் சிறப்பித்துப் போற்றப்படுவன......... மக்களை வாக்கினின்றும் வேறு பிரித்து நன்றும் தீதும் பகுத்துணரும் மன உணர்வுடையதாக்கி மேம்படுத்துவன. அறிவு விளக்கந் தரும் நூல்களாதலின் அந்நூல்களை இலங்குநூல் எனச் சிறப்பித்தார், 'திருவள்ளுவர்'. உலக நூல், அறிவு நூல் என நூல்களை இருவகையாகப் பகுத்துரைப்பார் பேராசிரியர். (திருக்கோவையார் - முதற்கடவுள் வாழ்த்து) இவ்வகையில் திருமுறைகள் சிறப்புறு நூல்கள் எனத் தெள்ளிதின் புலப்படும்.

**திருமுறை கண்டது**

சைவத் திருமுறைகள் பன்னிரண்டு என வழங்கும் வழக்கு பன்னிரண்டாந் திருமுறையாகிய, திருத்தொண்டர் புராணம்' இயற்றப்பெற்ற பின்னரே ஏற்பட்டதென்பது உமாபதி சிவாச்சாரியர் இயற்றிய சேக்கிழார் புராணத்தால் நன்கு துணியலாகும்.

நம்பியாண்டார் நம்பியின் உதவி பெற்றுத் தேவாரத் திருமுறைகளைத் தில்லைத் திருக்கோயிலிற் கண்டு வெளிப் படுத்திய சோழ மன்னனைத் திருமுறை கண்ட சோழன் எனப் போற்றுவர்.

காவிரி பாயும் சோழவள நாட்டிலே திருவாரூரிலே தியாகராசப் பெருமானை வழிபட்டு அபயகுலசேரகன் என்னும் சிறப்புப் பெயருடைய இராசராச சோழன், அவன் அவைக்

களத்தில் சிவனடியார்கள் மூவர்பாடிய தேவாரப் பதிகங்கள் சிலவற்றை ஓதிவரலாயினர். அரசன் இத்திருப்பதிகங்கள் அனைத்தையும் ஒரு சேரப் பதிப்பிக்க விரும்பினான். திரு நாரையூர் பொல்லாப் பிள்ளையாரை வழிபட்டு, திருவிரட்டை மணிமாலை பாடி அற்புதஞ் செய்த நம்பியாண்டார் நம்பியிடம் மன்னன்தன் உள்ளக்கிடக்கையைக் கூற, அவரும் பொல்லாப் பிள்ளையாரை இறைஞ்ச இறைவன், தில்லையில் கூத்த பெருமான் திருநடனஞ் செய்யும் பொன்னம்பலத்தின் அருகிலே தேவார ஆசிரியர்கள் மூவருடைய அழகிய கைகளின் அடையாள முள்ள அறையினுள்ளே தேவாரத் திருமுறைகள் வைத்துப் பூட்டப்பட்டுள்ளன என்றார்.

பின்பு சோழ மன்னன் தில்லைச் சிற்றம்பலத்திற்கு மேற் றிசையிலுள்ள அறையிலே தேவாரத்திருமுறைகள் இருத்தலைத் தில்லைவாழ் அந்தணர்களிடம் தெரிவித்து அவ்வறையைத் திறக்கும்படி வேண்டினர். தேவார ஆசிரியர்கள் மூவருடைய கைகளின் இலட்சினையுடன் பூட்டப்பட்டுள்ள அறையினை அம்மூவரும் வந்தாலன்றித் திறக்க வியலாது எனத் தில்லைவாழ் அந்தணர்கள் கூறினார்கள். உடனே சோழன் தில்லை அம்பலவாணர்க்குச் சிறப்புப் பூசை (பூசனை) செய்து தேவார ஆசிரியர்கள் மூவர் திருவுருவங்களுக்கும் வழிபாடுயியற்றி அத்திருவுருவங்களைத்திருவீதிக்கு எழுந்தருளச் செய்து திருப்பதிகங்கள் சேமித்து வைக்கப்பட்ட அறையின் முன்னர்க் கொண்டு வந்து நிறுத்தி 'மூவரும் வந்தனர் அறையைத் திறந்திடுமின்' எனப் பணித்தான்.

அரசனது ஆணையால் அறை திறக்கப்பட்டது. அவ்வறையினுள்ளே சென்று பார்த்தபோது தேவாரப் பதிகங்கள் எழுதப்பெற்ற ஏடுகள் கறையான் புற்றால் மூடப்பட்டுச் சிதைந்த நிலையில் இருந்தன. புற்று மண்ணில் மூடப்பட்டுள்ள அவ்வோலைக் கட்டுகளின் மேல் எண்ணெய்யைச் சொரிந்து அவற்றைப் புறத்தே கொணர்ந்து எடுத்துப் பார்த்த அளவில் அவற்றுள் பெரும்பாலான ஏடுகள் பழுதுபட்டிருந்தன. மன்னன் அளவிலாத் துயரமுற்றான். இந்நிலையில் "தேவாரப் பதிகங்களிலே இக்காலத்துக்கு வேண்டுவனவற்றை மாத்திரம் வைத்து விட்டு மற்றவைகளைச் செல்லரிக்கச் செய்தோம்" என்றதொரு அருள்வாக்கு அங்குள்ள யாவரும் கேட்கத் தோன்றியது ...... நம்பியும் மன்னவன் வேண்டுகோளுக்கு இணங்கத் திருமுறை களை வகுத்தளித்தார்.

### தேவாரமும் பண்ணிசை அமைப்பும்

தேவாரப் பண்முறையினைத் தெரிந்து இசையமைக்க எண்ணிய சோழ மன்னனும் நம்பியாண்டார் நம்பியும் தில்லை நகர்க்கு மேற்கேயுள்ளதும் திருநீலகண்ட யாழ்ப்பாணர் பிறந்து அருளியதுமாகிய திருவெக்கத்தம் புலியூரை அடைந்து அங்கு எழுந்தருளியிருக்கும் இறைவன் திருக்கோயிலை வலம் வந்து இறைவன் திருமுன் நின்று 'எம்பெருமானே தேவாரத் திருப்பதிகங் களுக்குரிய இன்னிசையினை எங்களுக்கு உணர்த்தியருளுதல் வேண்டும்' என இறைஞ்சிப் போற்றினர். அந்நிலையில் திருநீல கண்டர் பெரும்பாணர் மரபிலே பிறந்த பெண்ணொருத்திக்கு இசைத்திறனையளித்துள்ளோம் என்று ஓர் அருள்வாக்குத் தோன்றியது. அதுகேட்டு நம்பியும் மன்னவனும் அப்பாடினி யாரைத் தேடி அழைத்து வந்து கோயில் வாயிலில் நிறுத்தினர். அவ்வளவில் அவ்வம்மையைத் தில்லையம்பலத்திற்கு அழைத்துச் சென்று அங்குத் 'தேவாரத் திருப்பதிகங்களுக்குப் பண்ணடைவு வகுக்கக் கடவீர்' என மீண்டும் ஓர் அருள்மொழி யெழுந்தது.

அதனைக் கேட்ட சோழ மன்னனும் நம்பியாண்டார் நம்பியும் அவ்வம்மையாரைத் தில்லை முன்றிலில் அழைத்து வந்து தேவாரப் பதிகங்களுக்குப் பண் வகுக்கச் செய்தார்கள். அங்ஙனமே தேவாரப் பண்களுக்குரிய கட்டளைகள் வரையறுக்கப்பட்டன. இறைவன் திருவருட்டுணை கொண்டு அம்மையார் வகுத்த இசை மரபே தேவாரத் திருப்பதிகங்களுக்குப் பொருந்திய தெய்வ இசையாகத் தென்னாட்டிற் சிறப்புற்று வளர்வதாயிற்று.

### திருமுறை கண்ட சோழன்

இராசராசன் எனும்பெயரை உளத்தில் கொண்டு திருமுறை கண்ட சோழன் தஞ்சை இராசராசேச்சுரத் திருக்கோயிலைக் கட்டிய முதலாம் இராசராச சோழனே என ஆராய்ச்சியாளர் பலரும் துணிந்து கூறுவர். முதலாம் இராசராச சோழனுக்கு அருண்மொழித் தேவர் என்ற மற்றொரு பெயரும் உண்டு. "சிந்தையருட் சிவமாகத் தெளிவித்தான் அருட் சென்னி" என வரும் திருமுறை கண்ட புராணச் செய்யுளில் இவ்வேந்தனை அருட்சென்னி என இந்நூலாசிரியர் குறித்துப் போற்றுதலால் அருள்மொழித் தேவன் என்ற பெயருடைய முதலாம் இராசராசனே திருமுறை கண்ட இராசராச சோழ மன்னன் எனக் கொள்ளுவதற்கு இடமுண்டு.

### தேவாரம் என்னும் பெயர் வழக்கு

மூவர் திருப்பதிகங்களைத் தேவாரம் என வழங்கும் வழக்கம் இரட்டைப் புலவர்கள் பாடிய ஏகம்பரநாதர் உலாவில் தான் முதன்முதற் காணப்படுகிறது. மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும் தேவாரஞ் செய்த திருப்பாட்டும் என்பது இவ்வுலாவிற் காணும் தொடர் ஆகும். இத்தொடரில் தேவாரஞ் செய்த திருப்பாட்டு என்புழித் தேவாரம் எனப் பெயர் நிலையில் வைத்துரையாமல் தேவாரஞ் செய்த என வினைநிலையில் வைத்துரைத்தலால் 'திருப்பாட்டு என்பது மூவர் பாடிய திருப்பாடல்களையும் தேவாரஞ் செய்த என்பது அத்திருப் பாடல்களை இசைப்படுத்திப் பாடிய தொழில் நிலையையும் குறித்து நின்றன' எனக் கொள்ள வேண்டியுள்ளது.

மூவர் திருப்பதிகங்களையும் தேவாரம் என்ற பெயரால் முதன்முதல் தெளிவாகக் குறிப்பிட்டு வழங்கியவர் சைவ எல்லப்ப நாவலராவார். இவர் பாடிய திருவருணைக் கலம்பகத்தில் சைவ சமயக் குரவர் நால்வரையும் போற்றும் காப்புச் செய்யுளில், 'வாய்மை வைத்த சீர்த்திருத் தேவாரமும், திருவாசகமும் உய்வைத் தரச் செய்த நாவலர் பொற்றாள் எம் உயிர்த் துணையே' எனப் பாடிப் பரவுகின்றார். இத்தொடரில் மூவர் திருப்பதிகங்களும் தேவாரம் என்ற பெயரால் குறிக்கப்பட்டிருத்தல் காணலாம்.

### தேவாரம் தொடர் விளக்கம்

தேவாரம் என்னும் தொடருக்கு அறிஞர் பலரும் வேறுவேறு அகப்பொருள் கண்டனர். இதனைத் தேவ + ஆரம் எனப் பிரித்து இறைவனுக்கு மாலையாயது எனப்பொருள் கூறுவர் சிலர். தே + வாரம் எனப் பிரித்துத் தெய்வத்தினிடத்து அன்பை விளைவிப்பது எனப் பொருள் கூறுவர் சிலர். 'வாரமாகித் திருவடிக்குப் பணிசெய் தொண்டர் பெறுவதென்னே' எனவரும் சுந்தரமூர்த்தி சுவாமிகள், தேவாரத்தில் வாரம் என்னும் சொல் இறைவன் பால் மெய்யடியார்கள் வைத்த பேரன்பு என்னும் பொருளில் வழங்கப் பெறுதல் இவண் கருதற்குரியது.

தி.வை. சதாசிவபண்டாரத்தார் ஆராய்ந்து எழுதிய, 'தேவார மென்னும் பெயர் வழக்கு' என்ற தலைப்புடைய கட்டுரையில் (செந்தமிழ் 45ஆம் தொகுதி, ப. 125-128) தெளிவாக விளக்கி யுள்ளார். அவர் எடுத்துக்காட்டிய தேவாரம் என்ற பெயர் சோழர் கல்வெட்டுகளில்தான் முதன்முதல் காணப்படுகிறது. கி.பி.

பதினோராம் நூற்றாண்டில் தேவாரம் என்ற சொல் வழிபாடு என்னும் பொருளில் வழங்கியதென்பதற்கு இலக்கியச் சான்றோ கல்வெட்டு ஆதரவோ கிடைக்கவில்லை. எனவே தேவாரமென்ற சொல் சோழ மன்னராட்சிக் காலத்து வழிபாடு என்னும் பொருளில் வழங்கப் பெறுதற்குரிய காரணம் யாது என ஆராய்தல் இன்றியமையாததாகும்.

'தே' என்பது தெய்வம் என்னும் பொருளைக் குறித்து வழங்கும். ஓரெழுத்து ஒரு மொழி. வாரம் என்பது இசையின் கூறுபாட்டினைக் குறித்து வழங்கும் தமிழ்ச் சொல். வாரமாவது முதல் நடை, வாரம், கூடை, திறன் என்னும் இசையாக்கம் நான்கினுள் ஒன்று. மந்தநடையுடையதாய்த் தாழ்ந்து செல்லும் இன்னிசையியக்கம் முதனடை எனப்படும். முருகிச் செல்லும் விரைந்த நடையினையுடைய இசையியக்கம் திறன் எனப்படும். இவ்விரண்டிற்கும் இடைநிகர்த்ததாய்ச் சொல்லொழுக்கமும் இசையொழுக்கமும் பொருந்திய பாடல் வாரம் எனப்படும். சொற்செறிவும் இசைச் செறிவும் உடைய பாடல் கூடை எனப்படும்.

இசையில் வல்ல பாணர் முதலிய கலைச்செல்வர் தம் இசைத்திறத்தை அவையின்கண் புலப்படுத்தும் பொழுதெல்லாம் இசைப்பாடலுக்குச் சிறப்புடைய பொருளாக விளங்கும் முழு முதற் பொருளைப் போற்றும் தெய்வப்பாடலையே முதன்மையாகப் பாடுவது வழக்கம். பண்டைநாளில் வாழ்ந்த பாணர் முதலியோர் இம்முறையினைத் தொன்றுதொட்டு வரும் இசைமரபாகக் கொண்டு போற்றுதலைத் தமது முதற்கடமையாகக் கடைப்பிடித்து வந்துள்ளனர்.

இச்செய்தியினைப் பத்துப்பாட்டுள் ஒன்றாகிய மலைபடுகடாத்துள்

> மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்
> நரம்புமீ திறவா துடன்புணரிந் தொன்றிக்
> கடவ தறிந்த இன்குரல் விறலியர்
> தொன்றொழுகு மரபிற் றம்மியல்பு வழாஅது
> அருந்திறற் கடவுட் பழிச்சிய பின்றை
> விருந்திற் பாணி கழிப்பி (534-539)

என வரும் அடிகளிற் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் தெளிவாக விளக்கியுள்ளமை காணலாம்.

வாரம் பாடுதல் என்பது இசைப்பாடலாற் கடவுளைப் போற்றி வழிபடுதல் என்ற பொருளில் கடைச்சங்க காலத்தே வழங்கி வந்ததாகத் தெரிகின்றது. இதையே சிலம்பில்

**தொன்னெறி யியற்கை தோரிய மகளிரும்**
**சீரியல் பொலிய நீரல நீங்க**
**வாரம் இரண்டும் வரிசையிற்பாட**

எனவரும் தொடருக்கு ஆடி முதிர்ந்தாராகிய மகளிர் நன்மையுண்டாகவும் தீமை நீங்கவும், வேண்டித் தெய்வம் பாடல் பாட என அரும்பதவுரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் பொருள் கூறியுள்ளார்கள். எனவே இத்தொடரில் வரும் வாரம் என்ற சொல் தெய்வப் பாடல் என்ற பொருளில் இளங்கோ அடிகளால் ஆளப்பட்டதென்பது நன்கு விளங்கும். எனவே தேவாரம் என்பது தெய்வப்பாடல் என்று கொள்வதே சிறப்புடையதாகும்.

**தேவாரப் பதிகங்கள் தொகுப்பு முறை**

தேவார ஆசிரியர் மூவருள் இயல் இசைத் தமிழாகிய திருப்பதிகங்களை முதல்முதல் அருளியவர் திருஞானசம்பந்தர். ஆதலின் அவர் அருளியவை முதன்மூன்று திருமுறைகளாக அமைகின்றன. அடுத்து நாவுக்கு அரசராக விளங்கிய அப்பர் பிரான் அருளியன நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறைகளாக விளங்குகின்றன. ஆருர்நம்பி எனப் போற்றப்படும் சுந்தரர் அருளியது 7வது திருமுறையாக அமையப்பெற்றுள்ளது.

இத்திருப்பதிகங்கள் பண்முறை எனவும் தலமுறை எனவும் அமையும். இவர்கள்பாடிய பண்களை வகைப்படுத்தி ஒவ்வொரு பண்ணுக்கும் உரிய திருப்பதிகங்களைக் கட்டளை விகப்பத்திற்கு இயையத் தொகுத்து இவ்வாறே மூவர் திருப்பதிகங்களையும் ஏழு திருமுறைகளாக வகுத்தெழுதியது பழைய முறையாகும்.

தலமுறையென்பது கோயில் திருவேட்களம் முதலாகத் திருப்பதிக் கோவையிற் குறித்த முறையையொட்டித் தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களையெல்லாம் தில்லைப் பெருங் கோயில் முதலாக வரிசைப்படுத்தி, அவ்வத்தலங்களில் எழுந்தருளி யுள்ள இறைவனின் அருளிச் செயல் மற்றும் தலப்பெருமை, தலத்தின் இயற்கைச் சிறப்பு வெளிப்படப் பாடப் பெற்ற தேவாரப் பதிகங்களை முதற்குறித்த ஏழு திருமுறைப் பாகுபாட்டிற்கு ஏற்ப முறைபடச் சேர்த்து அமைத்த முறையே தலமுறையாகும்.

திருமுறைப் பயிற்சி

நம்பியாண்டார் நம்பி திருமுறைகளை வகுக்குங்கால் மூவர் திருப்பதிகங்களையும் முன்போலவே ஏழு திருமுறைகளாக வகுத்தார் எனத் திருமுறை கண்ட புராணம் கூறுகின்றது.

திருஞான சம்பந்தர் அருளிய திருப்பதிகங்களை அவருடன் சென்ற அடியார்கள் எழுதியும் பாடியும் வந்தனர் என்பது வரலாறு. மதுரையில் சமணரோடு வாது செய்யக் கருதிய ஆளுடைப்பிள்ளை தாம் பாடிய திருப்பாடல்கள் எழுதப்பெற்ற திருமுறையேட்டிற் கயிறு சார்த்திப் பார்த்து எரியிலிட்டு வெற்றி பெற்றதற்குரிய 'போகமார்ந்த' என்ற திருப்பதிகம் சான்றாக அமைகிறது.

**நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்**
**கரையனும் பாடிய நற்றமிழ் மாலை**
**சொல்லியவே சொல்லி யேத்துக.........'**

எனவரும் சுந்தரர் வாய்மொழியால் அக்காலத்தில் மக்கள் பாடும் பயிற்சி கொண்டிருந்தனர் என்பது இனிது புலனாதல் காணலாம்.

சுந்தரர் பாடியருளிய தேவாரத் திருப்பதிகங்களை அவருடன் சென்ற அடியவர்கள் பயின்று ஏட்டில் எழுதிப்பேணி வைத்துள்ளார்கள். இறைவன் வரவித்த வெள்ளானையின் மீதமர்ந்து கயிலைக்குச் செல்லும் நம்பியாரூர் தாம் வழியிற் பாடிப்போற்றிய, 'தானெனை முன்படைத்தான்' என்ற திருப்பதிகத்தினைத் 'திருவஞ்சைக் களத்திருக்கோயிலிலே சென்று சேர்க்கும்படி வருணனுக்குக் கட்டளையிட்டாரென்பது,

**ஊழிதொ றூழிமுற்று முயர் பொன்னொடி மலையைச்**
**சூழிசையின் கரும்பின் சுவை நாவ லூரனவன்**
**ஏழிசையின் றமிழா லிசைந் தேத்திய பத்தினையும்**
**ஆழிகடலரையா அஞ்சையப்பர்க் கறிவிப்பதே**

எனவரும் அப்பதிகத் திருகடைக்காப்பால் நன்கு புலனாகும். ஆரூரர் கட்டளையினைத் தலைமேற்கொண்டு வருணனும் இத்திருப்பதிகத்தினைத் திருவஞ்சைக் களத்திலே கொண்டு சேர்த்தான் எனவும் அவ்வாறே சுந்தரருடன் கயிலை சேர்ந்த சேரமான் பெருமாள் பாடிய திருக்கயிலாய ஞான உலாவைக் கயிலைமால் வரையிற் கேட்டு மகிழ்ந்த மாசாத்தனார் திருப்பாடலூரில் வந்து எல்லோர்க்கும் புலனாக அவ்வுலாப்

பிரபந்தத்தை வெளிப்படுத்தி அருளினார் எனவும் பெரிய புராணம் கூறுகின்றது. ஆகவே திருமுறைப் பகுதிகள் யாவும் அக்காலத்து ஒருசேரத் தொகுக்கப்பட்டு மக்களால் விரும்பிப் பயிலப்பட்டன என்பது இனிது விளங்குதல் காணலாம்.

## திருமுறை வழிபாடு

தேவாரத் திருமுறைகள் திருக்கோயில்களில் வைத்து வழிபடப் பெற்று வந்தன. அத்திருப்பதிக ஏடுகள் சிதையாதபடி அவற்றைப் போற்றிக் காப்பதற்குத் தமிழ்ப்புலமை மிக்க தமிழ் வரகரும், அத்திருப்பதிகங்களைப் பொருள் உணர்ந்து இசை யோடு இறைவன் முன்னிலையிற் பாடிப் போற்றுதற்கு ஓதுவார் களும் அந்நாளில் திருக்கோயில்களிற் நியமிக்கப் பெற்றுப் பணிபுரிந்து வந்தார்கள் என்பதற்கான சான்றுகள் ஒருசில கல்வெட்டுக்களால் அறியலாம்.

> "...... மூன்றாஞ் சதுரத்துப் பாலாசிரியன் இந்நிலத்து வடமேற்கடைய புன்செய் நிலத்து உடைய புன்செய் நிலம் அரைமாவும் உள்படர்க்கைக் கொண்டு சந்திராதித்தவரை காசு கொள்ளா இறையிலியாகவும் சிவ்வரி பெருவரி வெட்டி........ கொள்ளாதே மாகவும் சொன்னேம். இந்நிலங் கைக்கொண்டு அனுபவித்துத் திருமுறை காப்பு நீக்கி இப்படியே திருமாளி கையிலே கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்க - பணியாள் ஊர்க் கணக்குப்பட்டன் பிரியன் எழுத்து"

இஃது அரிய செய்திகளை அறிவிக்கும் ஒரு சிறந்த கல்வெட்டாகும். சீகாழிக் கோயிலுள்ள திருக்கைக் கோட்டியர் தேவாரத்திருமுறைகள் வைத்து வழிபாடு செய்யப்பெற்று வந்தனர் என்பதும் அத்திருமுறை ஏடுகள் பழுதுற்றபோது அவற்றைப் புதுக்குதற்குத்தமிழ் விரகர் ஒருவர் இருந்தனர் என்பதும் அவ்வூர்ச் சபையார் அவற்றின் வழிபாடு முதலிய வற்றிற்கு இறையிலி நிலம் அளித்துப் போற்றி வந்தனர் என்பதும் இக்கல்வெட்டால் அறியமுடிகிறது.

நாகபட்டினம் தாலுகாவிலுள்ள திருக்காறாயிலிற் காணப்படும் ஒரு கல்வெட்டு அவ்வூர் ஆலயத்துத் திருக் கோட்டியில் திருப்பதிகம் ஓதுவார் சிலருக்கு உணவளிக்க இறையிலி நிலம் விடப்பட்ட செய்தியை உணர்த்துகிறது. இதன்

மூலம் அக்காலத்திலேயே தேவாரம் பாடும் ஓதுவார்கள் திருமுறை வழிபாடு செய்துள்ளனர் என்பதற்குத் தக்க சான்றாக இது போன்ற கல்வெட்டுகள் அமைவதைக் காணலாம்.

திருவீழி மிழலையில் நரசிங்கதேவன் என்ற தலைவன் ஒருவனால் திருக்கைக் கோட்டி மண்டபம் கட்டப்பெற்ற தென்பது அவ்வூரிலுள்ள கல்வெட்டால் அறியப்படுகிறது (கல்வெட்டு எண் 414 - 1908ஆம் ஆண்டு, தி.வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் எழுதிய திருக்கைக் கோட்டி என்னும் கட்டுரையில் காண்க)

இந்நாளில் கோவிலூர் என்று வழங்கப்பெறும் திருவு சாத்தானம் என்னுந் திருப்பதியிலுள்ள திருக்கைக் கோட்டி இறையிலி நிலம் அளித்தான் என்று அவ்வூர்க் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. எனவே தேவாரத் திருமுறைகள் வைத்துப் பூசிக்கப் பட்ட, வழிபடப்பட்ட கோயில் மண்டபம் திருக்கைக் கோட்டி யென்ற பெயருடன் முதற்காலத்தில் வழங்கப்பெற்று வந்தமை புலனாகும்.

### அகத்தியர் தேவாரத் திரட்டின் வழிபாட்டுச் சிறப்பு

சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு மார்க்கங் களைப் பக்திக்கு உரியனவாகக் கூறுவர். சரியை என்பது பயிற்சி எனப்பொருள்படும். இதனை இறைவனிடம் பக்தி செலுத்துவதற் கான பயிற்சி எனக் கருதலாம். கிரியை என்பது இறைவன் நினைவு நீங்காதிருக்கச் செய்யப்படும் பயிற்சிக்குத் துணைநிற்கும் செயல் முறை அல்லது சடங்கு முறை எனக் கொள்ளலாம். உடல் பொருள் ஆவி, இவை மூன்றையும் ஒரே தருணத்தில் இறை வனிடம் கொண்டு செல்லும் நிலைக்கு யோகம் என்பர். சரியை, கிரியை, யோகம் இவற்றால் கிடைக்கும் இறை அநுபவத்தையே ஞானம் எனப் பெரியோர் கூறுவர்.

அவ்வகையில் மூவர் முதலிகள் தங்கள் அநுபவத்தில் கண்ட அரியனவற்றைத் தொகுத்துக் காட்டுவதே அகத்தியர் தேவாரத்திரட்டு. அம்மை அப்பனை முதலில் வணங்கிட வேண்டும் என்ற முறையில் அம்மை ஒரு பாகமாகவும் ஐயன் ஒருபாகமாகவும் இணைந்து உமையொருபாகனாய்க் காட்சி தரும் சிவபெருமானின் அருட்கோலம் விளங்கும் வகையில் அன்னை பார்வதியின் தோட்டை (காதணியை) மையமாக வைத்து ஆளுடைப்பிள்ளை இறைவனை, 'தோடுடைய செவியன்"

என விளித்துத் தான் பிறந்து வளர்ந்த பிரம்மாபுரத்தின் சிறப்பையும் அங்கு எழுந்தருளியிருக்கும் இறைவனையும் சிறப்பித்துக் கூறுகிறார்.

**"காடுடைய சுடலைப்பொடி பூசி என் உளங்கவர் கள்வன்"**

**"கற்றல் கேட்டலுடையார் பெரியார் கழல் கையால் தொழுதேத்தப்**
**பெற்றம் ஊர்ந்த பிரமாபுரம் மேவிய பெம்மான்"**

**"ஊர் பரந்த உலகின் முதலாகிய ஓரூர் இது என்னப்**
**பேர் பரந்த பிரமாபுரம் மேவிய பெம்மான்"**

**"ஒருமை பெண்மை உடையவன்"**

**"கறைகலந்த கடியார் பொழில் நீடுயர் சோலை கதிர் சிந்தப்**
**பிறை கலந்த பிர மாபுரம் மேவிய பெம்மான்"**

**"சடை முயங்கு புனலன் அனலன் எரிவீசிக் கதிர் வெய்த**
**உடை முயங்கும் அரவொடு உழிதந்து என் உளங்கவர் கள்வன்"**

**"வியர் இலங்குவரை உந்திய தோள்களை வீரம் விளைவித்த**
**உயர் இலங்கை அரையன் வலி செற்றானது உளங்கவர் கள்வன்"**

**"தாள்நுதல் செய்து இறைகாணிய மாலொடு தன் தாமரை யானும்**
**நீள்நுதல் செய்தொழி யந்நிமிர்ந்தான் எனது உள்ளங் கவர் கள்வன்"**

**"உடலுள் தணலாய்த் தகைக்கும் சூலையைத் தவிர்த் தருள**

**வேண்டும் அதிகை வீரட்டானத்து உறையும் ஐயனே"**

என்ற பொருளில் அமைந்த இப்பாடல்களில் கன்மவினை, பிறவினை எனப் பற்றும் வினைகள் அற்றுப்போகப் பொன்னார் மேனியாரின் பொற்கழல்களே காப்பாக அமையும்.

அட்ட வீரட்ட தலத்தில் ஒன்றாய் விளங்கும் கெடில நதியின் கரையில் அமைந்துள்ள திருவதிகை வீரட்டானம் என்னும் திருத்தலத்தின் பெருமைதனை விளக்கும் போது இறைவனின் அருளிச் செயலையும் இறைவனுக்கு இணையாக

மொழியையும் அவரால் ஒருங்கே நினைக்கப்படுதலையும் காணலாம்.

**உயர்ந்தேன் மனை வாழ்க்கையுட் ஒண்பொருளும்**
**ஒருவர் தலைகாவல் இல்லா மையினால்**

என்று அப்பர் பெருமான் நன்னெறி காட்ட நல்லவர் இல்லாக் காரணத்தால் அழியும் பொருளான இல்வாழ்க்கையும் உயர்ந்த பொருட் செல்வமுமே உயர்வானது எனக் கருதலுற்றேன் என்கிறார். தம்மினும் குறைந்த அற்ப மானுடர் இன்னும் என்னவற்றிலெல்லாம் தம் சிந்தனையைப் பறிகொடுத்து வாழ்ந்து வருகிற நிலையில் அவர்கள் கடைத்தேற இப்பாடல் உறுதுணையாய் நிற்கும் என்ற வகையில் இப்பதிகம் இணைக்கப் பட்டுள்ளது.

இந்தப் பதிகத்தில் இறைவனை அடைதற்குரிய நெறியைக் காட்ட வல்ல குரு ஒருவர் வேண்டும். குரு இல்லாது சுற்கும் கல்வி நீர்மேல் எழுத்து. ஆசான் மாசு அகற்றி மனச் சுத்தம் செய்து மனத்தை இறைவன்பால் திருப்பிவிடும் திறம் உடையவர் வழிகாட்ட, நெறிகாட்ட ஆன்றமைந்த குரு வேண்டும். நல்லதைக் காட்ட நல்லவர் வேண்டும் என்பதை நாவுக்கரசர் ஒவ்வொரு பாட்டாலும் தன் அநுபவ உண்மையைக் கலந்து பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.அவர் சொல்லும் சொல் வருமாறு:

'நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்' ஆயினும் இறைவன் (அஞ்சேல் அதிகை கெடில வீரட்டானத் துறையெம் மானே) இறைவன் திருவருள் தந்து காப்பதற்கு முன்னம் அஞ்சேல் என ஆறுதல் தரவில்லை என மனம் கசிந்து உருகுகிறார். இங்கே இறைவன் குருவாக எழுந்தருளி நாவுக்கரசரை ஆட்கொண்டிருந் தால் புறத்துன்பங்கள் பற்றி இருக்காது என்பதனை:

**புத்தரொடு பொறியில் சமணும் புறங்கூற நெறிஇல்லா**
**ஒத்த சொல்ல உலாம் பலிதேர்ந்து எனது உள்ளங்கவர்**
**கள்வன்**

இறைவன் சிவபெருமான் அழித்தற் றொழிலைச் செய்பவன். இம்மண்ணிற் பிறந்த மானிட உயிர்கள் உயிர்நீத்தால் சேரும் இடம் சுடுகாடுஅச்சுடுகாட்டின் தலைவன் சிவபெருமான். ஆகவே நான் அவன் புற உடம்பு முழுவதும் சுடலைப் பொடியைப் பூசிக் கொண்டாற் போல் அவன் அணிந்திருக்கும் திருநீறு விளங்குகிறது.

அடுத்து அமைவது அப்பரின் திருவாக்கு. நாவுக்கரசர் நாளும் சிவபிரானைக் கிரியை முறையில் வணங்குபவர் என்பர். சமணராய் இருந்த காலத்து அவரது தமக்கையின் செயற் பாட்டால் வருத்தும் சூலை நோயைப் பெற்றார். சமண சமய மந்திரங்களும் சமண முனிவர்களின் தந்திரமும் நாவுக்கரசரின் துயரைத் துடைப்பதாக இல்லை என்ற உணர்வு நாவுக்கரசருக்கு ஏற்பட்டபோது, தன் தமக்கையார் வழிபடும் சிவபிரானிடத்து அவர் அடைக்கலம் புகலானார். சூலை அகலப் பிறை சூடிய பெம்மான் கழல்தனை எண்ணி இறைஞ்சுகிறார்.

வழிமாறி நெறிபிறழ்ந்து சமணத்தில் மூழ்கியதால்தான் தன்னைச் சூலை கௌவியது என உணர்ந்த நாவுக்கரசர், தான் நாளும் சிவனைப் பூசை செய்யத் தவறியதில்லை என்றும் ஆயினும் முன்வினைப் பயனால் அவரைச் சூலை நோய் பற்றியது. அதுபோல மானுடராய்ப் பிறந்தவர் ஆடல்வல்லானாய் விளங்கும் சிவத்தைத் துதியாது சிந்தை மறந்து வாழ்வாரேயானால் அவரைச் சூலைக்கு ஒப்பான ஆணவம் மலம், கன்மம் மட்டுமல்லாது கன்மத்தின் காரணமாகப் பெருநோய் பிடித்து ஒழுகும்படியான நிலை ஏற்படக் கூடும். இத்தகைய நிலையைத் தவிர்க்கவே அப்பரின் அநுபவ வாக்கை இரண்டாவது நிலையில் வைத்துள்ளனர். அப்பரின் பண்ணிசைப் பாடலில் இறைவனின் அருட்திறம் விளங்கும். இறைவன் குருவாக இருந்து அல்லற்படும் ஆன்மாவின் மனதைச் செம்மைப்படுத்திடச் செஞ்சடையானின் நிழலடி சேர்க்கும்.

**நீரும் நறுமலரும் கொண்டு நாளும் துதிக்க மறந்த தில்லை**
**பைந்தமிழால் பண்எடுத்துப் போற்ற மறந்ததில்லை**
**நலந் தீங்கினும் இறைவா உன்னை மறந்ததில்லை**
**நாளும் உன்திருப் பெயரை நவிலநா மறந்ததில்லை**

## அகத்தியர் தேவராத் திரட்டு அமைப்பு

வைணவர்களுக்கு நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தின் இனிய சாறு என 'நிந்யானு சந்தானம்' என்ற ஓர் அருமையான பக்தி இலக்கியப் பேழை அமைந்தது போல இந்த அகத்தியர் தேவாரத்திரட்டு சைவப் பெருமக்களுக்கு நிறைந்த செல்வமாக விளங்க வல்லது என்பது குறிப்பிடத்தக்கது.

இவ்அகத்தியர் தேவாரத் திரட்டில் திருஞான சம்பந்தரது 10 திருப்பதிகங்கள் முறையே திருப்பிரம்மபுரம், திருவாலவாய்த் திருநீற்றுப் பதிகம், பஞ்சாக்கரப் பதிகம், நமச்சிவாயத் திருப்பதிகம், திருப்பதிக் கோவை, திருவெழுக்கூற்றிருக்கை, திருக்கடவூர் மயானம், திருவாழ் கொளி புத்தூர், திருப்பூந்தராய், கோளறு திருப்பதிகம் ஆகியனவும், திருநாவுக்கரசர் அருளிச் செய்த திருவதிகை வீரட்டானம் நமச்சிவாயத் திருப்பதிகம், திருப்பதிக் கோவை, கோயில் திருப்பதிகம், திருப்பூவணம், திருவதிகை வீரட்டானம் (ஆறாம் திருமுறை) திருக்கயிலாயம், திருவாரூர் ஆகியனவும், திருவெண்ணெய் நல்லூர், திருப்பாண்டிக் கொடுமுடி, ஊர்த்தொகை திருக்கடவூர் மயானம், திருப்புன்கூர், திருக்கழுக்குன்றம், திருத்தொண்டத்தொகை ஆகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளின் ஏழு திருப்பதிகங்கள் இத்திரட்டில் இடம் பெற்றுள்ளன. இத்திரட்டில் 25 பதிகங்கள் அடங்கியுள்ளன. இத் திரட்டின் தனிச்சிறப்பை இனிக் காணலாம்.

### தேவாரத் திரட்டின் செம்பொருள்

1. ஆன்மாக்கள் உய்ய இறைவன் அவனது அருட்திறம் விளங்க ஞான ஆசிரியனாக எழுந்தருளி அருள்பாலித்தல்.
2. பூசிக் கொள்வதனாலே எளியோரும் அறிந்து கொள்ளும் வண்ணம் இறைவன் அருட் திறத்தை வெளிப்படுத்தும் திருவெண்ணீறு.
3. மனம் ஒன்றி வழுத்தலால் உள்ள உறுதியைத் தரும் ஐந்தெழுத்து என்னும் பஞ்சாக்கர மந்திரம் விளங்குவது.
4. ஆன்மாக்கள் இறையாண்மையையும், இறைமாண்பையும் மக்கள் அறிந்து கொள்ள உயர்ந்து நிற்கும் திருக்கோயில்.
5. அன்பையும் அரவணைப்பையும் வெளிப்படுத்தும் சிவபெருமானின் திருமேனியாய் விளங்கும் திருவுருவம்.
6. இறைவனின் தாய்மைத் திறத்தை ஆன்மாக்கள் (சிவநேயச் செல்வர்கள்) உணரும் படியாக அமையப்பெற்ற திருவடி.
7. ஆன்மாக்களுக்குத் தக்க பாதுகாப்பை நல்கும் சிவார்ச் சனைகள்
8. ஆன்மாக்கள் (அடியவர்) தங்களைத் தாங்களே இறைவன் பால் கட்டுரை செய்யும் அடிமைத் திறம், ஆகிய எட்டுக் கொள்கைகளை வெளிப்படுத்துகிறது இத்தேவாரத் திரட்டு.

### அகத்தியர் தேவாரத்திரட்டின் நோக்கம்

சைவசமயத்தின் தொன்மை என்பது தமிழ்மொழியின் தொன்மைக்கு இணையானது. சைவ சமயத்தின் எழுச்சி, பொற் காலம் என்பது மூவர் தேவாரம் பாடிய காலக்கட்டமே. தமிழகத்தில் சைவசமய வழிபாடு அடங்கன் முறை எழுந்த காலக்கட்டத்திற்குப் பின்னேதான். வைதிக வழிபாடு அஃதாவது வேதத்தை முதன்மையாகக் கொண்டு வழிபாடு அல்லது பூசாவிதி முறைகள் என்பன வடமொழியிலிருந்து தமிழுக்கு வந்தன. ஆயின், தென்னாட்டில் விளங்கிய சைவ சமயம் வடமொழிப் பூசாவிதி முறைகளைப் பின்தள்ளி விட்டு மூவர் முதலிகள் அருளிய தேவாரப் பாடல்கள் கொண்டு பண் இசைத்துத் தில்லை ஆடல் வல்லானாக எழுந்தருளியுள்ள சிவபெருமானை இப்படித்தான் போற்றித் துதிக்க வேண்டும் என்ற நோக்கில் அகத்தியர் தன் நுண்மாண் நுழைபுலப் பட்டறிவு கொண்டு சிவாலய முனிவனுக்குச் சொல்லுவது போல சைவ சமய இறை நேயர்களுக்கு வகுத்தளித்ததாக இத்திரட்டைக் கருதலாம்.

மணிவாசகரின் சிவபுராணம் எழுவதற்கு முன்னையே அகத்தியர் திரட்டித்தந்த தேவாரத்திரட்டு மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெற்றிருக்க வேண்டும்.

சிவ அநுட்டானத்தில் கருத வேண்டியதாக எட்டுவிதமான பொருள்மைகள் முன்னர் சொல்லப்பட்டன. அதற்கு ஆதாரமாக விளங்குவது அகத்தியர் தேவாரத் திரட்டில் காணப்படும் கீழ்க்காணும் வெண்பா ஆகும்.

**குருவருளும்வெண்ணீரும் எழுத்து அஞ்சும் கோயில்**
**அறனுருவும் என்தலைமேல் ஆக்கும் – திருவடியும்**
**சிட்டான அர்ச்சனையும் தொண்டும் சிவாலயர்க்கு என்று**
**இட்டார் அகத்தியர் எட்டு**

### திருப்பதிகக் கருத்துரை

நூலுக்கு நுழைவாயிலாகவும் நூலின் மொத்தச் சுருக்க மாகவும் அமைகிறது தொடக்கத் திருப்பதிகம். மேற்சொன்ன வெண்பா விளக்கி நிற்கும் எட்டுப் பொருண்மைகளுக்கான விரிவாக்கமாக அமைகிறது இத்திருப்பதிகம்.

'தோடு, கூற்று, பித்தா என்னும் மொழிகளை முதலாக உடைய மூன்று திருப்பதிகங்கள் (அஃதாவது ஞானசம்பந்தர்,

நாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் தமது தேவாரத்திற்கு அமைத்த முதற்பாடல்கள்) குரு அருள்திறத்தைக் காட்டுவனவாக அமைகின்றன.

'மந்திரம்' எனத் தொடங்கும் திருவெண்ணீற்றுப் பதிகம் ஆணவம், மலம், கன்மம் என்ற மும்மலத்தை நீக்குதற்குரிய இறைவியின் (பராசக்தி) வல்லமையை விளக்குவதாக அமை கின்றது.

துஞ்சல், காதல், சொற்றுணை, மற்று என்னும் மொழி களை முதலாக உடைய நான்கு திருப்திகங்களும் ஐந்தெழுத்து மந்திரத்தின் உண்மையினைச் சிவநேயர்கள் உணர அருளிச் செய்தனவாகும்.

ஆரூர், தில்லை, காட்டூர் என்னும் மொழிகளை முதலாகப் பெற்ற மூன்று திருப்பதிகங்களிலும் செம்பொன் மேனியான் எழுந்தருளியுள்ள சிறப்புகளைக் கூறும் முகத்தான் திருக் கோயில்களின் அருமைபெருமைகளை அடியார் அறிதல் வேண்டும் என்ற நிலையில் இங்கும் பேசப்படுகின்றது.

ஒருரு, வரிய, பாளை, வடியேறு, மருவார் என்ற தொடக்க மொழியினையுடைய திருப்பதிகங்கள் ஐந்தும் இறைவன் திருமேனிக் கோலத்தைச் சொல்லும் தன்மையனவாகும். இதன் மூலம் தலந்தோறும் எம்பெருமானின் திருமேனி அவ்வவ்விடத்து வணங்குவோர்க்கு ஏற்ற முறையில் அருள்பாலிக்கும் சிறப்பை உணர்த்துவதாக அமையப்பெற்றது என விளக்கும் அடிப் படையில் இப்பதிகங்கள் அமைந்துள்ளன.

திருமேனி உருவில் இணையற்றது இறைவனின் திருவடி. சிவநேயர்களுக்கு அருள் சுரக்கும் ஊற்று; பற்றுடன் பற்றுவார்க்கு அரவணைக்கும் அன்னைக்கு ஒப்பானது. பிறப்பறுப்பது உண்மையானது; இறையடியார்க்கு உவப்பானது என்பதைக் காட்டும் வகையில் அமையப்பெற்றது தான் பொடியுடை, அரவணை, அந்தணாளன் என்னும் மொழிகளை முதலாக உடைய இம்மூன்று திருப்பதிகங்கள் பிறவா யாக்கைப் பெரியோன் ஆகிய இறைவனின் அருட்டிறம் அவனது திருவடிக்கே உரியது என்பதனைப் பாமரன் முதல் பண்டிதன் வரை உணர்தல் வேண்டும் என்ற நோக்கில் இங்கே வலியுறுத்தப் படுகிறது.

பந்து, வேற்றா கொன்று என்னும் மொழிகளைத் தொடக்க மாகக் கொண்ட மூன்று திருப்பதிகங்களும் ஆன்மாவிற்கு

நன்மை ஓர்ப்பது இறைவனைச் சொற்றமிழால் துதிப்பதே என்பதனை எடுத்துக்காட்ட அமையப் பெற்றதாகும். இறை நாமத்தை, நொடியும் தவறாது உருச்செய்பவனுக்குப் பிறவா நிலையும், இறைச்சிந்தனை மறவா நிலையையும் சிவநேயச் செல்வர் தம் உறவையும் நிலையாய்த் தரவல்லது. என்பதனை எடுத்துக்காட்டுவதாக இப்பதிகங்கள் இடம்பெற்றுள்ளன.

ஆண்டவன் உலகத்தின் முதலாளி; ஆண்டவன் மிகப் பெரியவன். அவன் சேவடிக்கீழ் ஆன்மாக்கள் அடிமையாகும் போது மும்மலம் அகலுகிறது. ஆகவே ஒவ்வொரு ஆன்மாவும் ஆண்டான் அடிமைத் திறத்தை அறிந்து இறைவனை ஆண்டானாகவும் தங்களைத் தாங்களே அடிமையாகவும் பிணைத்துக் கொள்ள வேண்டும் என எடுத்துக்கூற வேய், குலம், தில்லை என்னும் மொழிகளை முதலாகவுடைய மூன்று திருப்பதிகங்கள் அமைகின்றன.

ஆகவே மேற்சொன்ன எட்டுவிதமான கடமைகளை ஆற்றி இறைவன் அருளுக்கு ஆட்பட வேண்டும் என்பதை வற்புறுத்தி அகத்தியர் சிவாலய முனிவர் வாயிலாக இறைநேயர்களுக்கு எடுத்துக் கூறியுள்ளார்.

**முன்னம் அடியேன் அறியாமையினால்**
**முனிந்தென் னைநலிந்து முக்கியிடப் (4)**

**............ நிலைகொள்ளும் வழித்துணை யொன்று அறியேன்"**
**வார்த்தை இதுவா மதுகேட் டறியேன்" (5)**

**நலந்திங்கினும் உன்னை மறந்தறி யேன்" (6)**

**உயர்ந்தேன் மனைவாழ்க்கையும் ஒண்பொருளும்**
**ஒருவர் தலைகா வல்இல்லா மையினால்"**

என்ற தொடர்கள் முன்னர் சொன்னதை வலியறுத்துவதை அறியலாம்.

சுந்தரரைப் பற்றிக் கூறும்போது ஆரூரர் இறைவனோடு தோழமையோடு உறவு கொண்டவர் என்பர். இறைவன் இவரையே தடுத்து ஆட்கொண்டார். இறைவன் சுந்தரரை ஆட்கொண்டதோடு மட்டுமல்லாது; 'சொற்றமிழால் பாடுக", என வேண்ட இறைவனை என்ன கூறிப் பாராட்டுவது என்று சுந்தரர் மயங்கிய காலத்து வழக்கிடும் போது இறைவன் 'பித்தன்' என்று விளிக்க என்று சுந்தரருக்கு ஆணையிட, சுந்தரரும் அந்தச்

சொல்லையே தொடக்கமாகக் கொண்டு இறைவனைப் பித்தா பிறைசூடி எனத் தேவாரம் பாடியருளினார்.

இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடல் இறுதியிலும் 'உனக்கு முன்னமே ஆளாகிய என்னை இப்போது இல்லை என்று கூறல் பொருந்துமா? என்ற பொருள் வருமாறு 'அத்தா உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனலாமே' என்று பாடியுள்ளார்.

பொதுவாக நட்பு என்பது இயைந்த இரு உள்ளங்களின் இணைப்பின் வெளிப்பாடு ஆகும். பொதுநோக்கு, சிறப்புநோக்கு என்றில்லாது காரண காரிய ஆய்வுக்கு அப்பாற்பட்டு ஓர் ஆன்மா மற்றொரு ஆன்மாவை உப்பும் பண்டமும் போல, செம்புலப் பெயல்நீர் போல அரவணைத்துக் கொள்வதாகும். 'காதல்' என்ற காரியத்தோடு பழகும்போது உணர்வு மிகுந்து நின்று அவ்விரு உள்ளங்களின் இடையே நட்பு என்பது பின்தள்ளப்பட்டு 'உறவு' என்ற நிலை மிகுத்துப் பேசப்படுவதால் நட்பும் காதலும் இணை கோடுகளாய் ஆகிவிடுகின்றன. சுந்தரர் இறைவனிடத்துக் கொண்ட நட்பு எதையும் எதிர்நோக்கியதன்று. இறைவன் சுந்தரன் பால் காட்டிய நட்பு எதையும் வேண்டியன்று. ஒருமித்த இறைச் சிந்தனையே சுந்தரரின் இறைவனிடத்துக் கொண்ட நட்புக்கு அடிப்படை. இறைவன் மாசு மருவற்ற நல்ல உள்ளம் சுந்தரின் தகைமைசால் உள்ளம் என்று கண்டு கொண்டமையால் இறைவன் கொண்ட நட்புக்கு அது அடிப்படையாகிறது.

தோழமையோடு யோகநிலையில் இறைவனைத் தன்வசப்படுத்திக் கொள்ள வேண்டியது ஒவ்வொரு ஆன்மாவின் கடமை என்பதையும் அப்படியான உயர் கொள்கையை வகுத்துத் தர நல்ல வழிகாட்டியாக இறைவன் அமைய வேண்டும் என்ற கருத்து அடியவர் உள்ளத்தில் பதியும்படியாக எடுத்துக் காட்டுவனவே இவரது பதிகங்கள்.

இறைவன் சிறப்பை உலகுணரச் செய்வதில் இறைவனின் திருவுருவம், அவன் எழுந்தருளியுள்ள தலங்கள் என்பதைவிட, இறைவனின் அங்க ஆயுதங்களாக விளங்கும் திருமேனியைத் தொட்டுத் தழுவும் பொருள்களுக்குச் சிறப்புறு பங்குண்டு. அவ்வகையில் இறைவன் திருமேனியைத்தழுவிக் கொண்டிருக்கும் கங்கை, மான், மழு, உடுக்கை, அரவம், சூலாயுதம், பிறை அணி கலன்கள் என்று பல உண்டு. இத்தனை இருப்பினும் இறைவனின் வனப்புக்கு மேலும் மெருகு சேர்ப்பதாகவும் இறைவன் அருள்பாலிப்புக்கு வழிவகை செய்வதாகவும் அமைவது

அவனைக் குறித்து அவன் பெயர் விளங்க அமைந்த சீர்மிகு உச்சரிப்பில் அமையும் நற்றுதிகளே. அவ்வாறு இறைவன் பெயரை உச்சரித்துத் தரும் பொருளுக்கு இணையாக வேறு எதையும் கூறமுடியாது. மந்திரம், தந்திரம், வசியம் முதற் கொண்ட செயற்பாட்டிற்கு அதுவே உற்ற கருவியாக அமைவதை ஞானசம்பந்தர் வாய்மொழியால் அறியலாம். அந்தப் பொருள் இறைவனின் திருநீறு ஆகும். ஆகவேதான் திருநீற்றுப் பதிகம் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

### தேவாரத் திரட்டு வரலாறு

கல்வி அறிவு ஒழுக்கங்களிலே சிறந்து விளங்கிய சிவாலய முனிவர் என்பார் இவ்அடங்கன் முறையினது பெருமையையும் இதனை முறையோடு நாடோறும் ஓதுபவர் வீடுபேறடைவர் என்பதையும் அறிந்து நாடோறும் அவ்வாறு ஓத விழைந்தனர். ஆயினும் அது அவருக்கு உடனே கைகூடாது போகவே தில்லையை அடைந்து பொற் சபையிலே ஆடல் வல்லானாக விளங்கும் ஐந்தொழில் இன்பக் கூத்தியற்றும் சிவபெருமானை வணங்கித் தமது கருத்து முற்றுப் பெறுமாறு பன்னெடுங்காலம் தவஞ்செய்தார். தவத்தின் பயனாய், "சிவாலய முனிவனே! நீ பொதிய மலையிலே உறையும் அகத்திய முனிவனையடையின் உனது கருத்து முற்றுப் பெறும்" என்று வான் மொழி எழுந்தது. அதனைக்கேட்ட அவர் கூத்தபிரானை வணங்கி விடைபெற்றுப் பொதிகை அடைந்து மூவாண்டு கடுந்தவம் செய்தார். அகத்திய முனிவர் சிவாலய முனிவனின் மன உரம் கண்டு மகிழ்ந்து அவருக்கு தேவார அடங்கலில் இருந்து 25 பதிகங்கள் தேர்வு செய்து அவற்றைத் தொகுத்து நற்திரட்டாக நல்கினார். இத்தனைச் சிறப்புமிக்க இவ்அகத்தியத் திரட்டை முதன்முதலாக அதன் இன்றியமையாமையையும், அதன் தெய்வீகச் சிறப்பையும் உணர்ந்து யாழ்ப்பாணம் நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்கள் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்கள். அப்பதிப்பு விபரம் வருமாறு: "சிவாலய முனிவருக்காக அகத்தியர் முனிவர் அடங்கன் முறையினின்றும் 25 பதிகங்களை எடுத்துத் திரட்டி நாடோறும் பாராயணம் செய்வதற்காகத் தொகுத்தருளினாராம்." இதுவே தேவாரத் திரட்டு என்ற குறிப்போடு தமிழ்நாடு அரசினர் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம் 1962இல் வெளியிட்ட தமிழ்நூல் விவர அட்டவணை பக். 492-493இல் தேவாரத் திரட்டுப் பதிப்புப் பற்றிப் பதிவாகியுள்ள குறிப்புகள்:

1. அகத்திய மாமுனிவர் தேவாரத்திரட்டு, (பதி. ஆசிரியர்) யாழ்ப்பாண நல்லூர் ஆறுமுக நாவலர் & சதாசிவப்பிள்ளை, வித்தியானுபாலன யந்திர சாலை, சென்னை, இரண்டாம் பதிப்பு, 1883.

2. அகத்தியர் தேவாரத்திரட்டு, ஆறுமுக நாவலர், வித்தியாநு பாலன யந்திரசாலை, சென்னை, மூன்றாம் பதிப்பு, 1880.

ஆறுமுக நாவலரைப் போலவே வேறு சில பெருமக்களும் இந்நூலை வெளியிடுவதில் மிகுந்த அக்கறை காட்டியுள்ளனர். அவை வருமாறு:

சுந்தர சுவாமிகள் என்பார் அகத்தியர் தேவாரத் திரட்டை, சென்னை மனோன்மணிய விலாச அச்சுக்கூட வாயிலாக 1874இல் பதிப்பித்துள்ளார். செய்யுள் மூலபக்கம், 73 ஆகும் எனத் தெரிவிக்கிறது தமிழ்நூல் விவர அட்டவணை

சுப்பராய ஞானியார் என்பார் திருமயிலையில் பாஸ்டர் அச்சியந்திர சாலை வழியாக 1878இல் இந்நூலைப் பதிப்பித் துள்ளார். செய்யுள் மூலம் பக்கம் 72 என்பது தமிழ்நூல் விவர அட்டவணை தரும் குறிப்பு.

அ. இராமசுவாமி என்பார் ஜுபிலி அச்சியந்திர சாலையில் அச்சிட்டு 1888இல் வெளியிட்டுள்ளார். தமிழ்நூல் விவர அட்டவணையில் இப்படி ஒரு குறிப்புக் காணப்படுகிறது: "அதாவது மூவர் சாத்திரங்களும் உரைநடையில் முதற்கண் தரப்பட்டிருக்கிறது என்றும் கோயிலூர் பிரதி முதலிய பல பிரதி ரூபங்களைக் கொண்டு பிழையறப் பரிசோதித்து வெளியிடப் பட்டது இப்பதிப்பு" என்பது அக்குறிப்பாகும்.

தேவாரத்திரட்டு குறிப்புரையுடன் திருப்பனந்தாள் ஆதீனம் வித்துவான் திருபட்டுச்சாமி ஓதுவாரைக் கொண்டு 30-8-1952இல் ஆவணி மூலத்திருநாள் வெளியீடாக வெளியிடப்பட்டுள்ளது. ஸ்ரீ அகத்தியத் தேவாரத்திரட்டு என்ற பெயரில் டாக்டர் வித்துவான் துரை இராசாராம் என்பார் இந்நூலுக்கு உரை ஆக்கம் செய்து முல்லை நிலையம் பதிப்பகம் வழியாக 2003இல் பதிப்பித்துள்ளார்.

ஆறுமுக நாவலரின் மாணவர்களில் ஒருவரான நா. கதிரைவேற்பிள்ளை அவர்கள் குறிப்புரை சேர்த்துப் பதிப்பித்த அகத்தியர் தேவாரத் திரட்டு என்ற இந்நூலை தமது ஆசிரியர்

யாழ்ப்பாணம் நல்லூர் ஆறுமுக நாவலரிடம் தந்து பரிசோதித்து வித்தியா ரத்நாகர அச்சுக்கூடத்தில் 1921இல் பதிப்பித்துள்ளார்.

இவ்வாறாக இந்நூல் பல பதிப்புக்களைக் கண்டுள்ளது. அகத்தியர் தேவாரத் திரட்டைப் பின்பற்றித் திருவாவடுதுறை ஆதீனம், திருப்பனந்தாள் ஆதீனம், மதுரை ஆதீனம், சிவப்பிரகாசம் மடம் (விருதாச்சலம்), தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் போன்ற நிறுவனங்கள் மூவர் தேவாரத்தில் பயனுடைய சிறப்புறு பதிகங்களைத் தேர்வு செய்து, இலவச வெளியீடாகவும் மக்கள் பதிப்பாகவும் வெளியிட்டு உள்ளனர். குறிப்பாகக் கழகம் ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் தேவாரங்களில் இருந்து தொகுக்கப்பட்ட திரட்டுகளைத் தேவாரத் திருப்பதிகத் திரட்டு என்ற பெயரில் ப. இராமநாத பிள்ளையைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 1967-இல் வெளியிட்டுள்ளது.

**'வேண்டுகோள் பதிகங்கள்'** என்ற தலைப்பில் நோய், வினை துன்பம் நீங்க, திரு அங்கமாலை, திருநீற்றுப்பதிகம், கோளறுபதிகம், திருநீலகண்டப் பதிகம் ஆகியவற்றை இணைத்துப் புத்தகம் - 1 எனவும், சூலை நோய் நீக்கிய பதிகம், முயலகன் நீக்கிய பதிகம், பொற்கிழி பெற்ற பதிகம், வலக்கண் பெற்ற பதிகம் ஆகியவற்றை இணைத்து இரண்டாம் புத்தகம் எனவும், விடந்தீர்த்த பதிகம், வினைநீங்கு பதிகம், இடக்கண் பெற்ற பதிகம் ஆகியவற்றை இணைத்து மூன்றாம் புத்தகம் எனவும் இழிநோய் நீங்கு பதிகம், நஞ்சு நீங்கு பதிகம், பகை நீங்கு பதிகம், மழைப் பதிகம் ஆகியவற்றை இணைத்து நான்காம் புத்தகம் எனவும் நோய் வினை நீங்க மூவர் அருளிய பாட்டுக்கள் என ஐந்தாம் புத்தகமாகவும் இவைகள் முறையே புத்தகம் - 1, 1954 - அக்டோபர் மாதமும் புத்தகம் இரண்டு 1954 நவம்பர் மாதமும், புத்தகம் மூன்று 1954 செப்டம்பர் மாதமும் நான்காம் 'புத்தகம்' 1954 டிசம்பர் மாதமும், ஐந்தாம் புத்தகம் 1955 ஜனவரி மாதமும் வெளிவந்துள்ளன.

## தேவாரமும் பாடுதலாற் பயனும்

தேவாரத் திருமுறைகள் பெற்ற திருவூர்களே பாடல் பெற்ற திருவூர்களென்று வழங்கப்படுகின்றன. அத்திருவூர்களே சோழ மன்னர் காலம் தொட்டு இன்றுகாறும் செந்நெறிச் செல்வர்களாலும், மன்னர்களாலும் வேந்தர்களாலும் கற்றளியாக்கப் பட்டு வருகின்றன. பெருமக்களும் மிகுந்த பக்தியுடன் திரளாக

அடுத்தடுத்துச் சென்று வழிபட்டும் வருகின்றனர் என்ற இராமநாதபிள்ளையின் கருத்து ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

இத்துணைச் சிறந்த தேவாரத் திருமுறைகளால் நிகழ்ந்துள்ள வியத்தகு அருள் நிகழ்ச்சிகளாகிய அற்புதங்கள் பலவாகும். "நோய், வறுமை, இடர், அச்சம், பேய், கொடு விலங்கு, நச்சுயிர், பகைவர், கள்வர், வெள்ளம், தீ, காற்று, மின்னல், இடி முதலியவற்றான் நேரும் துன்பங்கள்" வெங்கதிர் கண்ட பனிப் போல அடங்கி, அகன்று ஒழியும். கல்வி கேள்வி ஒழுக்கம், செல்வம், கட்டழகு, நலம், அன்பு, அருள், ஈகை, ஆட்சி, நண்பு, ஒப்புரவு, ஆண்மை, நாடு, மொழி, நன்னெறிகளை நாளும் உயிரெனக் கைக் கொள்ளுதல், வளம், வாழ்வு, குடும்பம், உழவு, வாணிகம், சிற்பம், இசை, கூத்து முதலிய இன்ப ஏதுவாம் ஞானம் ஓதிக்கேட்டு உய்யும் உணர்வுடைய உயர்திணை உயிர்கட்கும், செவி வாயிலாக உணர்விற் சேரும் அஃறிணை உயிர்கட்கும் தீமையொழிந்து நன்மையே நாளும் பெருகி உய்தற்காக வந்து பொருந்தும். இவ்வுண்மையை நின்றசீர் நெடுமாறன் நோய் நீங்கி நலம் பெற்றமையானும் அப்பர் பெருமானைக் கொன்றொழிக்கு மாறு அமணர் சூழ்ச்சியால், அரசனால் ஏவப்பட்ட யானை அவர் திருவடியை வலமாகச் சூழ்ந்து எதிர்தாழ்ந்து நிலத்தில் வீழ்ந்திறைஞ்சி அகன்றமையாலும் அறியலாம்.

சிவபெருமான் தேவாரத் திருமுறைக்குகந்து அம்மூவர் முதலிகட்கு, நோய் நீக்குதல், பொன்னும் பொருளும் அளித்தல், பொதிசோறு அளித்தல், பிச்சை யூணளித்தல், நெல்லளித்தல், வழிகாட்டல், படிக்காசு நல்கல், தூது செல்லல், நினைப்பூட்டல், வேண்டுவன விளைவித்தல் முதலான அருளிப்பாடுகள் புரிந்துள்ளனர். இத்தகு அடிப்படைக் காரணம் எம்பெருமானை இறையடியார்கள் ஒரு மனத்தோடு நாளும் தேவாரத் திருப்பதிகங் களாற் பாடிப்பரவி வருதலே ஆகும் என்ற ப. இராமநாத பிள்ளையின் கருத்து எண்ணிப்பார்க்கத்தக்கது.

சைவ சமயத்தார்க்கு வேத நெறியாக விளங்கும் பண்ணிசை யோடு கூடிய தேவாரப் பதிகங்களை நாளும்,

> **நாழிகையே நாள் கிழமை நண்ணுதிங்கள் ஆண்டடியார்**
> **வாழிமறை ஓதல் வழிபாடு**

என்ற கோட்பாட்டிற்கு இணங்க இறைவனை வழிபட வேண்டும் என்பர். மேற்சொன்ன ஆறு நிலைகளை ஒரு நடையொப்பாகச்

சிவபெருமானின் ஆறுகுணங்களைக் குறிப்பன என்றும் அவை முறையே பெண்மை, ஆண்மை, வண்மை, எண்மை, உண்மை, திண்மை எனப்படும். இவற்றை முறையே ஐசுவரியம் வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் எனவும் கூறுகிறார் ப. இராம்நாத பிள்ளை.

இதுவரை கண்டதில் அகத்தியர் தேவாரத் திரட்டின் சிறப்பு, பெருமை, அருமை ஆகியன சுட்டிக் காட்டப்பட்டன. மொத்தத்தில், "அகத்தியர்பிரானால் தொகுக்கப்பட்ட இத் தேவாரத் திருப்பதிகங்களுள் மேலான இங்குக் கூறிய திருப்பதிகங் கள் இருபத்தைந்தையும் விரும்பி எடுத்து ஓதுகின்றவர்க்கு உண்மை ஞானம் பொருந்தும்படித் தொகுத்து அருளி அளவிறந்த அடங்கன்முறைத் திருப்பதிகங்கள் அனைத்தையும் ஓதியுணரும் புண்ணியம் இந்த இருபத்தைந்து திருப்பதிகங்களை ஓதி உணர்வதால் உண்டாகும் என்ற டாக்டர் துரை இராசாராம் கருத்து சாலப் பொருந்தும்.

இன்றைக்குப் பாராயணம் அல்லது மனனம் என்பது மக்களிடையே மிகவும் பின்னடைவு கண்டுள்ளது. நற்றமிழின் தலைவனாக விளங்கும் சிவபெருமான், தமிழ்ச் சைவ நாயகனாக விளங்கும் சிவபெருமான் வழிபாட்டில் தேவாரப் பாடல்கள் பாடுவது என்பது ஒரு சடங்காகப் போய்விட்டது. ஓதுவார் எனப் போற்றப்படும் சைவ சமயத் திருக்கூட்டத்தார் மட்டும் இறை ஆலயங்களில் அரசின் முயற்சியால் தேவாரப் பதிகங்களை நாளும் பாடி வருகின்றனர்.

இன்றைக்கு முற்றோதல் என்ற பெயரில் மணிவாசகரின் திருவாசகம் மட்டும் ஓதப்பட்டு வருகிறது. மூவர் பாடிய 7 திரு முறைகளையும் முற்றோதல் செய்தல் என்பது எளிய காரியமன்று. ஆயின் ஏழு திருமுறைகளின் சாதகமாக விளங்கும். அகத்தியத் தேவாரத் திரட்டை மக்கள் மன்றங்களிலும் சிவாலயங்களிலும் முற்றோதல் செய்யப்படுமானால் அதுவே நாம் தமிழுக்கும் சைவ சமயத்திற்கும் செய்யும் திருப்பெருந் தொண்டாகும்.

**துணை நூல்**

ஆறுமுக நாவலர் & சதாசிவம்பிள்ளை, **அகத்தியர் தேவாரத் திரட்டு**, வித்தியாநுபாலன யந்திர சாலை, சென்னை. 1883.

◆

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**சென்னை - 600 113**

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 - கி.பி. 1300 | 100.00 |
| தொல். பொருள். (அகம்-புறம்)-ஆங்கில மொழிபெயர்ப்பு | 50.00 |
| தமிழ் ஆய்வு இதழ்கள் | 50.00 |
| வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள் | 1[illegible]0.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 - 2000 | 180.00 |
| இதழாளர் பெரியார் | 160.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | 30.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்-நாட்டுப்புறவியல்,கலை,பண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |
| பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் | 40.00 |
| தமிழக எல்லைப் போராட்டங்கள் | 60.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - I | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - II | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - III | 80.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Economic Heritage of the Tamils | 115.00 |
| மலேசியத் தமிழரும் தமிழும் | 100.00 |
| மொழி, சமய, சமுதாயத் தளங்களில் பாவாணர் பங்களிப்பு | 50.00 |
| தமிழ்ப் புனைகதைகளில் உளவியல் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| கவிதையியல் | 50.00 |
| பண்பாட்டு நோக்கில் திருமுறைகள் | 30.00 |
| கதைப் பாடல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள் | 95.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தொல்காப்பியமும் மேலை அறிஞரும் | 60.00 |
| அறந்தாங்கித் தொண்டைமான்கள் | 45.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| தமிழில் தத்துவ நூல்கள் | 40.00 |
| பெரியபுராணம்-திருமுறைகளின் கவசம் | 60.00 |
| ரா.பி. சேதுப்பிள்ளை | 70.00 |

---

**605 ஆறுமுக நாவலர்** **60.00**